# ஸ்ரீமத் ராமாயண சாரம்



ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தா



இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# ஸ்ரீமத் ராமாயண சாரம்

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

**பந்தமடை திரு. L. இராமசந்திர ஐயர்**

**சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு**







## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

**சிவானந்தா ஆஸ்ரமம்**

ராசிபுரம் : : சேலம் ஜில்லா

1985 [ ரூ. 5—00

* ௐ *

Translation of :

"ESSENCE OF RAMAYANA"

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of :*

Sri. S. VIJAYARATNAM, MALAYSIA

in memory of his Mother

Smt. KANAGAMMA SARAVANAMUT

1908 — 1983

Printed at Sri Balaji Printers, Rasipuram-6

# ஆசியுரை

நம் வாழ்க்கைக்கு ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தர் அவர்களின் புனிதமான ஞானயக்ஞப் பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது: அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் 'ஸ்ரீமத் ராமாயண சாரம்' என்ற நூலை பத்தமடை திரு. L. இராமசந்திர ஐயர் அவர்கள் மிக அற்புதமாக தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் ராசிபுரம் ஸ்ரீ பாலாஜி பிரண்டர்ஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமென்று பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

# ஸ்ரீமத் ராமாயண ஸாரம்

## 1. பால காண்டம்

இராவணன் ஜனங்களை மிகவும் கொடுமைப் படுத்தினன். பூமடந்தை ஒரு பசுவின் உருக்கொண்டு தேவர்களும் முனிவர் களும் சூழ்ந்துவர கண்களில் நீர் மல்க நான்முகனைச் சரண் அடைந்தாள். யாவருடனும் பிரமன் வைகுண்டபதி ஹரியை அடைந்து, ''பிரபோ! புலஸ்தியரின் பேரனை இராவணன் தன் வரபலத்தால் கர்வம் கொண்டுள்ளான். தவத்திற்கு மெச்சி நானே வரமளித்தேன். அவன் கொடுங்கோலனாகி, யாவரையும் துன்புறுத்துகின்றான். மூவுலகங்களின் தொந்தரவுகளுக்கு மூல காரணமாய் இருக்கின்றான். அவன் மனிதனால் மட்டுமே மரணம் பெறக்கூடியவன். எனவே தேவரீர் மனிதனாக அவ தரித்து தேவர்களின் பகைவனான அவனைக் கொல்லவேண்டும்'' என விண்ணப்பித்தார்.

அதற்கு பரந்தாமன், ''கச்யபர் தவம் செய்தார். நான் அதனால் மகிழ்ந்தேன். அவருக்கு அவர் கோரிய வரமளித் தேன். அதன்படி அவருக்கு மகனாகப் பிறக்க வேண்டும். அவர் இப்போது தசரதராக பிறவி எடுத்துள்ளார். ஒரு நன்னாளில் கௌசல்யை மூலமாக அவருக்குப் புதல்வனாகப் பிறக்கப் போகி றேன். நான் என்னை நான்கு அம்சங்களாகத் தனித்தனியாகப் பிரித்துக்கொண்டு அவ்வாறு தோன்றுவேன். என்து யோக மாயைஜனகரது இல்லத்தில் சீதையாக அவதரிப்பாள்'' எனக் கூறிவிட்டு ஸ்ரீ ஹரி மறைந்தார்.

பிரமன் தேவர்களிடம், ''பிரபு ரகுவம்சத்தில் மனிதனாக அவதரிப்பார். நீங்கள் யாவரும் அவருக்குச் சகாயம் செய்ய குரங்குகளாகப் பிறப்பீர்களாக'' எனப் பணித்தார்.

பிரமன் பூமடந்தையைத் தேற்றி அனுப்பினார். தேவர் களும் தங்கள் இருப்பிடம் அடைந்தனர். பின்பு அமரர் வானரங்களின் உருவில் இம் மண்ணுலகில் தோன்றினர். விஷ்ணுவின் வருகையை அவர்கள் எதிர்நோக்கி இருந்தனர்.

## II. ஸ்ரீ ராமஜனனம்

ஸ்ரீ ராமன் மஹா விஷ்ணுவின் அவதாரம். எல்லையற்ற ஞானமயமானவன். ஆனந்தமே மனித உருக்கொண்டது. சீதாநாயகன். ஹனுமானின் பிரபு. உலகில் அறம் வளர்க்கவும், தீயோரை மாய்த்து ஸாதுக்களைக் காக்கவும்தோன்றினார்

மஹா விஷ்ணு தம்மை நான்கு பாகங்களாகப் பிரித்துக் கொண்டு தசரத மன்னரைத் தந்தையாகத் தேர்ந்தெடுத்தார்.

நல்ல மங்களமான வாழ்க்கை உடையவரும், சத்தியம் தவறாதவரும், நீதியுடன் நாட்டை ஆள்பவரும், தைரியம், புகழ் கொண்டவருமான தசரத மன்னருக்கு நீண்டகாலமாக புத்திரன் இல்லை. அதனால் மிகவும் வருந்தினார். தமது குலகுருவான வசிஷ்டரை அணுகி, "சுவாமி! வம்சா வழி தொடர எனக்கு வாரிசு இல்லையே, அதனால் மிகவும் கவலை கொண்டுள்ளேன்" என்றார்.

அதற்கு வசிஷ்டர், "மன்னர் மன்ன! நீரோ நீதியும், தர்மமும் துலங்க மக்களைக் காக்கின்றீர். எனவே நீர் பராக்கிரமும் தெய்வீகமும் கொண்ட நான்கு புதல்வர்களைப் பெற்று உய்வீர். சாந்தையின் கணவரான ரிஷ்யசிருங்கரை வருவித்து புத்திரகாமேஷ்டி என்ற யாகத்தைச் செய்வீராக" என் பகர்ந்தார்.

அவ்வண்ணமே தசரதர் அந்த கலைக்கோட்டு மாமுனியை அயோத்திக்கு அழைத்து வந்து யாகத்தை நடத்தலானார். அப்போது யாக அக்கினியில் ஒருதெய்வம் தோன்றியது. அதன் கையில் ஒரு பொற்கலசம் நிறைய தேவாமுதமான பாயாசம் இருந்தது. அதுகூறிற்று - "மன்னருள் சிறந்த தசரதரே! தேவர்களால் உண்டாக்கப்பட்ட இந்தப்பாயாசத்தை உமது சிறந்த மனைவியருக்குக் கொடுப்பீராக. அதனால் உமக்கு பிள்ளைகள் பிறப்பார்கள்."

தசரதர் வசிஷ்டர், ரிஷ்யசிருங்கர் ஆகிய இருவரின் அனுமதியைப் பெற்று தன் மனைவியரான கௌஸல்யைக்கும்

கைகேயிக்கும் அதைச் சரிபாதியாகப் பிரித்துக்கொடுத்தார். அப்போது அங்கு நின்ற சுமித்திரையும் அதன் ஒரு பகுதியை விரும்பியதால், கௌஸல்யை முதலில்தனது பங்கில் பாதியையும் அப்படியே பிறகு கைகேயி தன் பங்கில் பாதியையும் சுமித்திரைக்குக் கொடுத்தார்கள். எல்லா ராணிகளும் குறித்த காலத்தில் கருவுற்றார்கள்.

பத்தாவது மாதத்தில் கௌஸல்யை மாந்தருள் மாணிக்கம் போன்ற ஒரு புதல்வனைப் பெற்றெடுத்தாள். சித்திரை மாதம் வளர்பிறை ஒன்பதாம்நாள் மஹாவிஷ்ணு உலகிற்கெல்லாம் நாயகனாய், தசரதருக்கு ஆனந்தம் விளைவிக்க இப்புவியில் ஸ்ரீ ராமனாக அவதரித்தார். அப்பொழுது கடக லக்கினமும், புனர்பூசம் என்ற நட்சத்திரமும் நவமி திதியும் மங்களகரமாகக் கூடி அமைந்திருந்தன. அக்குழந்தை ஒரு பரிபூரண மானிடன் பெறவேண்டிய எல்லா சாமுத்திரிகா இலக்கணங்களையும் பெற்று மாந்தரில் தெய்வமென விளங்கியது. பீதாம்பர ஆடையும், நான்கு கரங்களும், காதுகளில் மகர குண்டலங்களும், பொலிவுற ஆயிரம் கதிரவர்கள் இணைந்து ஒளிவீசுவது போலவே காட்சி அளித்தார். தலையில் கிரீடமும் நான்கு கைகளில் சங்கு, சக்கரம், கதை, தாமரை மலர் இவற்றுடனும், கழுத்தில் வனமாலையும், கேயூரகங்கணங்களும்; மார்பில் ஸ்ரீ வத்ஸம் என்ற மருவும் துலங்கத் தன்னைத் தாய் கௌஸல்யைக்கு அறிமுகப்படுத்திக் கொண்டார்.

கைகேயிக்குப் பரதன் பிறந்தான். சுமித்திரை லக்ஷ்மணன், சத்ருக்னன் என்ற இரட்டைக்குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். அச்சமயம் கந்தர்வர்கள் இனிமையாகப் பாடினார்கள். அப்ஸரஸுக்கள் நாட்டியமாடினர். ஆகாயத்திலிருந்து மலர்மாரி பொழிந்தது.

தசரதர் பிராமணர்களுக்கு ஆயிரக்கணக்கான கிராமங்களையும், தங்கம், ஆடை ஆபரணங்கள், பசுக்கள் ஆகியவற்றையும் தானம் செய்தார். குழந்தைகள் நால்வருக்கும் ஜாதகர்மம் என்ற ஜனன விழாவை நடத்தினர். பிறகு வசிஷ்டர் அக்குழந்தைகளுக்கு பெயர்களைச் சூட்டினர். காண்பவர்களை ரமிக்கச் செய்யும்; அதாவது கண்டவுடன் மனக்கவலைகள் யாவும் நீங்கி மகிழ்ச்சி கொள்ளும்படியான தோற்றமுடைய

வராய் இருப்பதால் கௌஸல்யையின் பிள்ளைக்கு ராமன் (ரமிக்கச்செய்பவன்) என்ற பெயரைச்சூட்டினர். எல்லோரையும் அறநெறி பிறழாது காக்கும் தன்மையுடையவராகப் போவதால் கைகேயியின் பிள்ளைக்கு பரதன் என்றும், எல்லா விதமான நன்மைகளையும் அழகையும் கொண்டிருப்பதால் சுமித்திரையின் பிள்ளைகளில் மூத்த குமாரனுக்கு லக்ஷ்மணன் என்றும், போரில் பகைவரை வெல்லும் ஆற்றல் மிக்கவராக ஆகப்போவதால் அடுத்த இரண்டாவது பிள்ளைக்கு சத்ருக்னன் என்றும் பெயர் களைச் சூட்டி நாமகர்மம் என்ற சடங்கைச் செய்தருளினர்.

குழந்தைப் பருவத்திலிருந்தே லக்ஷ்மணன் ஸ்ரீ ராமனுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தான். ராமனது விருப்பங்களை உடனுக்குடன் நிறைவேற்றிவந்தான். இராமன் இல்லாமல் தான் உணவு கூட அருந்துவதில்லை. இராமன் வேட்டைக்குச் செல்லும்போது கையில் வில் ஏந்திப் பின் தொடர்வான், ராமனின்றி தூங்குவது கூட கிடையாது. இராமனது நிழலைப் போலவே இலக்ஷ்மணன் இருந்தான். இருவரும் எப்பொழுதும் பிரியாமலே இருந்தனர்.

இலக்ஷ்மணனைப் போல சத்ருக்னன் பரதனிடம் ஆர்வ முள்ள பக்தியுடன் தொடர்பு கொண்டான். இருவரும் சேர்ந்தே உணவு உண்பார்கள். ஒரே விதமான ஆடைகளையே அணி வார்கள். கௌஸல்யையும் கைகேயியும் சுமித்திரைக்குக் கொடுத்த பாயாஸத்தின் விளைவை அநுசரித்து லக்ஷ்மணன் ஸ்ரீ ராமனுடனும், சத்ருக்னன் பரதனுடனும் இணைந்து வாழ்ந்தனர்.

எல்லாப் புதல்வர்களும் வீரமும் தருமமும் கொண்டு விளங் கினர். வேதங்களை முறையாகக் கற்று அவற்றில் நல்லதேர்ச்சி பெற்றனர். வில் வித்தையில் (தனுர்வேதம்) ஸ்ரீ ராமன் சிறந்த நிபுணராக விளங்கினர். யானை ஏற்றம், குதிரையேற் றம், வாள்சண்டை போன்ற அரசர்களுக்குரிய பயிற்சிகளில் நால்வரும் தலைசிறந்து விளங்கலானர்கள். ஸ்ரீ ராமர் மற்ற மூவரைக் காட்டிலும் தைரியத்திலும், ஸத்தியத்திலும் மிக்க வராகக் காணப்பட்டார். இவ்வாறு இளவரசர்கள் அளவற்ற அழகும், ஆற்றலும், அறநெறியும், அன்பும் பொறுமையும் புனிதமும் கொண்டு அயோத்தி மக்களின் இதயங்களைத் தம்பால் வசீகரித்து வாழ்ந்தனர்.

## III. தாடகை வதம்

ஒரு சமயம் மஹரிஷி விச்வாமித்திரர் ஸ்ரீ ராமனைக் காண்பதற்காக அயோத்திக்கு வந்தார். அவர் தசரதச்சக்கரவர்த்தியிடம், ''நான் ஒருயாகம் செய்ய விரும்புகிறேன். அதை நான் ஆரம்பிக்கும் போதெல்லாம் மாரீசன், ஸுபாஹு என்ற இரு அரக்கர்கள் வந்து அதைத் தடுக்கிறார்கள். எனவே உமது மூத்தமகன் ஸ்ரீ ராமனை அவர்களை நாசம் செய்ய என்னுடன் அனுப்பிவையும்'' எனக்கேட்டார். இதைக்கேட்டு தசரதர் மிகுந்த வியாகூலமடைந்தார். அவர் வசிஷ்டரிடம் கலந்து ஆலோசித்தார். ''சுவாமி! ராமன் இங்கிருந்து சென்று விட்டால் நான் உயிர்தரிக்க மாட்டேன். என்னசெய்வது? அனுப்ப மறுத்தால் விச்வாமித்திரரின் சாபத்திற்கு ஆளாகவேண்டும்.''

வசிஷ்டர் கூறலானார், ''மன்னா,கேளும், ராமன்சாதாரண மனிதன் அல்ல. அவன் தெய்வீக அவதாரம். நான்முகன் திருமாலிடம் பூமியின் பாரத்தைக் குறைப்பதற்கு விண்ணப்பம் செய்தார். விஷ்ணு உமது குடும்பத்தில் கௌஸல்யா தேவிக்கு மகனாய்ப்பிறந்துள்ளார். முன்பிறவியில் நீர் காசியப் பிரஜாபதி ஆவீர். இந்த கௌஸல்யை தேவர்களின் மாதாவான அதிதியாவாள். நீங்கள் இருவரும் விஷ்ணுவைக்குறித்துக் கடுமையாகத் தவம் செய்தீர்கள். விஷ்ணுமகிழ்ந்து உங்கள் முன்தோன்றி நீங்கள் விரும்பிய வரத்தைக் கேட்கச் சொன்னார். அதற்கு நீர், ''சுவாமி! நீர் எனக்குப் புதல்வனாய் பிறக்க வேண்டும்'' என்று விரும்பினீர். ஹரியும் அவ்வாறே ஆகுகஎனக் கூறிமறைந்தார். அதன்படி உமது இப்பிறவியில் விஷ்ணுவே ஸ்ரீ ராமனாக அவதரித்துள்ளார். ஆதிசேஷன் இலக்ஷ்மணனாகவும், பரதனும் சத்ருக்னனும் முறையே பாஞ்சஜன்ய சங்கமாகவும், சுதர்சன சக்ரமாகவும் அவதரித்துள்ளனர். யோக மாயை ஜனகராஜனின் மகள் சீதையாக மிதிலையில் வளர்ந்து வருகிறாள். விச்வாமித்திரர் சீதையை ஸ்ரீராமனுக்குத்திருமணம் செய்து வைப்பதற்காக இங்கே வந்துள்ளார். இது தேவரஹஸ்யம். எனவே நீர் கொஞ்சமும் தயங்காமல் ராமனையும், இலக்ஷ்மணனையும் விச்வாமித்திரருடன் பெருமகிழ்ச்சியுடன் அனுப்புவீராக.''

பின்பு தசரத மன்னன் தம் இரு மைந்தர்களையும் விச்வாமித்திரருடன் செல்ல அனுமதி அளித்தார். அவ்விருவரும் வில்,

அம்புவாட்களுடன் புறப்படலாயினர். அரக்கரை வதம் செய்ய புறப்படும்போது ஸ்ரீ ராமனுக்கு பதினாறு ஆண்டுகள்பூர்த்தி ஆகவில்லை. போகும் வழியில் விச்வாமித்திரர் இருவருக்கும் பலா, அதிபலா என்ற தெய்வீகமஹாமந்திரங்களை உபதேசித்தார். இம்மந்திரங்களை அறிந்தவர்களுக்கு பசியும் களைப்பும் உண்டாகாது.

பலா அதிபலா மந்திரங்களின் பலன் என்ன என்பதை மஹரிஷி விச்வாமித்திரர் ராமலக்ஷ்மணர்களுக்கு கீழ்க்கண்ட படி கூறினார்.

"நீவிர் இம்மந்திரம் அறிந்ததால் எப்போதும் களைப்படைய மாட்டீர்கள். அரக்கரின் மாயா ஜாலங்கள் உங்களை மயக்காது. போரில் உங்கள் உறுப்புகளுக்கு எந்த விதமான குறை பாடும் நேரிடாது. மூவுலகங்களிலும் உங்களுக்கு இணையான நுண்ணறிவு படைத்தவர் இரார். யார் எந்தக் கேள்வி கேட்டாலும் உடனேயே அதற்கான உத்தரம் தரவல்லவ ராவீர்கள்." (இது வால்மீகி ராமாயணம் பால காண்டம் சருக்கம் 22சுலோகம் 12ல் இருந்து 14முடிய கூறப்பட்டுள்ளது)

அதன் பிறகு அவர்கள் கங்கை நதியைத் தாண்டி தாடகை குடி கொண்டுள்ள காட்டிற்கு வந்து சேர்ந்தனர். விச்வாமித்திரர் ராமனிடம், "ராமா! எந்த உருவமும் எடுக்கக் கூடிய கொடிய அரக்கியான தாடகை வசிக்கிறாள். அவள் சுந்தன் என்பவனின் மனைவி. சுந்தன் ஜாம்பனின் மகன். அவள் ஆயிரம் யானைகளின் பலம் கொண்டவள். மாலதம், காருஷம் என்ற இரண்டு செழிப்பான நகரங்களை நாசம் செய்து காடாக்கி அதில் வசிக்கிறாள். அவளுடைய மகனின் பெயர் மாரீசன். அவன் ஒரு சாபத்தின்விளைவாக அரக்கனானான். தாடகை மனிதருக்குதாங்க முடியாத இன்னல்களைச் செய்துவருகிறாள். அவளுக்கு மிகப் பெரிய வாயும், மிகவலிமையுள்ள கைகளும் உண்டு. ஒரு காலத்தில் ஆற்றல் மிக்க சுகேது என்ற ஓர் யக்ஷன் இருந்தான். அவன் மனத்தூய்மையுடன் கடுந்தவம் புரிந்தான். நான்முகன் அவனது தவத்திற்கு மெச்சி, "உனக்கு ஆயிரம் யானைகள் பலம் கொண்ட ஒரு பெண் பிறப்பாள்" எனவரமளித்தார். அவளேதான் இந்தத் தாடகை.

ஒரு சமயம் அகத்திய முனிவர் சுந்தனை ஒழித்தார், அது கண்டு தாடகையும் அவள்மகனுன மாரீசனும் அகத்தியரை விழுங்கிவிட அவர் மீது பாய்ந்தனர். ரிஷி மாரீசனைப் பார்த்து "நீ ஒரு அரக்கனுக்க் கடவாய்." என்று சபித்தார். தாடகையையும், "நீயும் ஒரு பயங்கரமான அரக்கியாவாய்" என்றுர்.

"எனவே வீரருள் சிறந்த இராமா! இந்தக் கொடிய அரக்கியைக் கொன்று விடு. அதனுல் அந்தணர்களும், பசுக்களும் காப்பாற்றப்படுவார்கள்.

இவளோ பெண்ணுயிற்றே எப்படிக் கொல்லலாம் என்று யோசிக்காதே. ஒரு செய்கை கொடியதாகவோ பாபமுள்ளதாக வோ தோன்றலாம்; ஆனல் நாட்டை ஆளும் அரசன் தன் குடிமக்களின் நன்மை கருதிஅதைச் செய்யலாம். அது தீமை யாகாது. இது க்ஷத்திரிய தர்மம் என்று வேதம் கூறுகிறது.

முன்பு ஒரு சமயம் விரோசனன் என்ற அரக்கர்களின் மன்னவனுடைய மகளான மந்தரை இவ்வுலகத்தை அழித்து விட முயன்ருள். அப்போது இந்திரன் அவளைப் பெண் என்று கருதாமல் கொன்ருன். தேவர்களின் அரசனுன இந்திரனை அரக்கருடன் சேர்ந்து சூழ்ச்சிசெய்து கொல்லமுயன்ற சுக்கிராச் சாரியாரின் தாயாரை மஹாவிஷ்ணுகொன்ருர். கடவுளர்களும், மன்னர்களும் பல கொடிய பெண்களைக் கொன்றுள்ளனர். எனவே சிறிதும் தயங்காமல் இக்கொடியவளை நாசம் செய்வாய். பொழுது சாய்வதற்கு முன் ராமா! இவள் உயிரைப் போக்கி விடு. அரக்கர்கள் இரவில் மிக்க வலிமையுடையவர்கள். இம் மூவுலகங்களிலும் உன்னையன்றி இவளைக் கொல்பவர் எவருமே கிடையாது.

உடனே ராமன் விச்வாமித்திரரை வணங்கி "சுவாமி, என் தந்தை உமது கட்டளைகள் எதுவாயினும் உடனே கேட்டுஅதன் படி நடக்குமாறு பணித்துள்ளார். ஆகவே நான் தாடகையை மக்களின் நலத்தை முன்னிட்டுக் கொல்கிறேன்" என்று பணிவுடன் கூறினுன்.

சற்று நேரத்தில் ஸ்ரீ ராமன் தனது வில்லை எடுத்து அதன் நாணொலியை எழுப்பினுன். அது கேட்ட தாடகை ராமனை

நோக்கித்தன் இரு கரங்களையும் உயர்த்திக் கொண்டு இடிஒலி போன்ற கூக்குரலுடன் பாய்ந்தாள். கற்களை மழைபொழிவது போன்று இராமன்பால் வீசினாள். பெரும் புழுதியை எழுப்பி எல்லாவற்றையும் மறைந்தாள். இலக்ஷ்மணன் தாடகையின் நாசியையும் இரு காதுகளையும் துண்டித்தான். பின்பு அவள் பற்பல மாயஉருவம் கொண்டு மறைந்திருந்து கல் மழை பொழியலானாள். அப்போது ராமன் ஓர் அம்பினால் அவளது மார்பைப் பிளந்தான். தாடகை துடாலென்று பூமியில் விழுந்து உயிர்நீத்தாள்.

பிறகு அவள் ஒரு அழகிய யக்ஷகன்னிகையாக மாறினாள். இராமன் அருளால் தாடகை அகத்தியரின் சாபத்திலிருந்து விடுபட்டாள். இராமனையும் முனிவரையும் வலம்வந்தாள். அவர்களின் அனுமதி பெற்று விண்ணுலகம் சென்றாள்.

விச்வாமித்திரர் இராமனை தழுவிக்கொண்டு ஆனந்த மடைந்தார். ஸ்ரீ ராமனுக்கு எல்லாவிதமான அஸ்திரசஸ்தி ரங்களையும் அவற்றை இயக்கும் மந்திரங்களையும் உபதேசித்தார்.

பின்பு மூவரும் சித்தாச்ரமம் வந்து சேர்ந்தனர். அங்கே எல்லா ரிஷிகளும் விச்வாமித்திரரின் தலைமையில் ஆறுநாட்கள் யாகம் செய்யத் துவங்கினார்கள். ராமனையும் இலக்ஷ்மணனையும் யாகத்தைக் காக்குமாறு வேண்டினார்கள். நாள் முழுவதும் இருவரும் கைகளில் வில்லும் அம்புகளும் பிடித்தபடியாக சம்ரக்ஷணை செய்தனர். திடீரென்று மாரீசனும் சுபாஹுவும் மாமிசத்தையும் எலும்புத்துண்டுகளையும் யாகசாலையின் மீது மறைந்து இருந்து வீசினர். அதுகண்ட ராமன் மானவாஸ் திரம் ஒன்றை விடுத்து மாரீசனை நீண்ட தூரம்கடலுக்குள்ளே போய் விழும்படி செய்தார். பிறகு ஆக்னேயம் என்ற ஓர் அஸ்திரம் கொண்டு சுபாஹுவின் மார்பைப் பிளந்தார். அவன் மாண்டான்.

## IV "அஹல்யையின் சாப விமோசனம்"

ஸ்ரீ ராமன் அங்கு பாழடைந்திருந்த ஓர் ஆச்ரமத்தைக் காட்டி, விச்வாமித்திரரிடம், "சுவாமி இந்த ஆச்ரமம் ஏன் இப்படிக் காட்சி அளிக்கிறது. அது பற்றிய வரலாறு அறிந்து

கொள்ள விரும்புகிறேன்.'' என் பணிவுடன் கேட்டனன். அதற்கு விச்வாமித்திரர் கூறலானார். ''ராமா, இந்த தவச்சாலை ஒரு காலத்தில் மிகச்சிறந்த முனிவரான கௌதமருடையதாக இருந்தது. அவர் தம் மனைவி அஹல்யையுடன் இங்கு தவம் செய்து கொண்டிருந்தார். அஹல்யை நான்முகனின் புதல்வி. அழகிலும் பதிசேவையிலும் அவளுக்கு அவளே ஈடு.

ஒரு நாள் கௌதமர் வெளியே சென்றிருந்த சமயம் இந்திரன் கௌதமரின் உருக்கொண்டு அஹல்யையிடம் அணுகினான். அவளைக் கெடுத்துவிட்டு உடனே வெளியேற லானான். அதே சமயம் கௌதம முனிவர் எதிர் பட்டார். தன் உருவில் இந்திரன் வெளிச்செல்வதைக் கண்டார். மிகுந்த சினம்கொண்டு, '' ஏ, தீயவனே! யார் நீ ? என்னைப் போன்ற உருவில் இங்கு வந்தது? '' இந்திரன் அதற்கு, '' நான் தேவர்களுக்கு அரசன் '' என்றனன். பிறகு கௌதமரின் பாதங்களில் விழுந்து வணங்கி ''சுவாமி, காமாவேசத்திற்கு அடிமையான என்னைக்காப்பாற்ற வேண்டும். மாபெரும் தவறு செய்து விட்டேன். இழிவான மதி கொண்டவனேன்', என்று இறைஞ்சினான். கௌதமர், '' நீ ஆண்மையற்றவனாகக் கடவாய்.' எனச்சபித்தார். பிறகு கௌதமர் அஹல்யையைப் பார்த்து. ''நீ இந்த ஆச்ரமத்தில் உள்ள கல்பாறையில் அமர்ந்து யாரும் காணவண்ணம் காற்றை உணவாகக் கொண்டு வாழ் வாய். மனதை ஸ்ரீ ராமதியானத்தில் ஈடுபடச் செய்து கொண்டு உன் காலத்தைக் கழிப்பாயாக. இராமன் இந்த ஆச்ரமம் வந்து அவனது திருவடி இக்கல்லின் மீது படும் போது நீ புனிதமடைந்து, உனது சுயஉருவடைவாய். ஸ்ரீராமனை வலம் வந்து வணங்கும் போது இப்பாவத்தினின்றும் நீங்கி, என் சாபவிமோ-சனம் பெறுவாய். பிறகு நான் உன்னைச் சேர்த்துக் கொள்கிறேன். ''

இவ்வாறு கூறியபின் கௌதமரிஷி இமயமலையை நோக்கி சென்று விட்டார். இது வரை அஹல்யை இக்கற்பாறையின் மீதேயாரும் காணுதபடி காற்றை உணவாகக் கொண்டு உனது பாததூளி தன் மீது படுவதற்காக காத்துக் கொண்டிருக்கிருள்' பிறகு ராமன் தன்திருவடியால் அப்பாறையை மிதித்தனன். அஹல்யையின் சாபம் தன் கணவர் கூறிய படி நீங்கி

தன் சுய உருவை மீண்டும் பெற்றனள். மலர்கொண்டு இராமனை வழிபட்டு வலம் வந்து வணங்கினள். பின்பு ராமனது அனுமதி பெற்று கௌதமரை அடைந்து வாழ்ந்தனள்.

## V. ஸ்ரீராமனது விவாஹம்

பிறகு விசுவாமித்திரர் ராமனையும் தம்பிஇலக்ஷ்மணனையும் பார்த்து, " ஜனகரால் ஆளப்படும் மிதிலாபுரிக்குச் செல்வோமாக, " எனக்கூறினர். அவர்கள் அங்கிருந்து புறப்பட்டுச் சென்று கங்கை நதியைக் கடந்தனர். படகோட்டி அவர்களை நிறுத்திக் கூறலானன். "சுவாமி! முதலில் இந்த இளவரசரான ராமனின் தாமரை போன்ற திருவடிகளை கங்கை நீரால் நன்றாய் அலம்பிய பிறகு அவர் படகில் ஏறட்டும். ஏனென்றால் இவருடைய பாதம் ஒரு கல்லைப் பெண்ணாக்கியுள்ளது. என் படகும் அவ்வாறு மாறிவிட்டால் என் பிழைப்பு என்ன ஆவது? என்று கூறி இராமனது பாதங்களை நன்றாக நீராட்டி பின்பே படகில் அமரச் செய்தான். மூவரும் கங்கையை கடந்தனர்.

மிதிலாபுரியை அடைந்தனர். ஜனகரால் நன்கு மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டனர். பிறகு விசுவாமித்திரர் ஸ்ரீ ராமனையும், இலக்ஷ்மணனையும் ஜனகருக்கு அறிமுகப்படுத்தி அவர்களது பெருமைகளையும், வீரச்செயல்களையும் நன்றாக விளக்கிக் கூறினர். மேலும் ஜனகரிடம், " மன்ன, நீர் தேவர்களிடமிருந்து யாகத்தில் பரிசாகப் பெற்றுள்ள அந்த சிவதனுசை இவர்கள் காணவிரும்புகின்றனர். அந்த சிறப்பு வாய்ந்த வில்லை அநேக அரசர்கள் பார்வையிட்டுள்ளனர் என்பதை நான் கேள்விப்பட்டேன். எனவே அதை இவ்விளவரசன் ஸ்ரீ ராமனுக்குக் காட்டுவீராக " எனப்பகர்ந்தார். உடனே ஜனகர்தம்மந்திரிகளிடம் சிவதனுசைக் கொண்டுவந்து ராமனுக்குக் காட்டுமாறு பணித்தார்.

ஐயாயிரம் வீரர்கள் அந்த வில்லைச் சுமந்து கொண்டு வந்தனர். அது நூறு மணிகளால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. நவரத்தினங்களும் அதில் பதிக்கப் பட்டிருந்தன. முதல்மந்திரி அந்த வில்லை ஸ்ரீ இராமனுக்குக் காட்டினர். ஸ்ரீராமன் அதை தனது இடது கையால் தூக்கி நிறுத்தி சரி செய்தவண்ணம் நாணேற்றி விளையாட்டாகவே

அதை வளைத்தார். வில்மாபெரும் ஒலியுடன் இரண்டு துண்டாக ஒடிந்து தரையில் விழுந்தது. அங்கு கூடியிருந்த மன்னர்கள் யாவரும் இதைக் கண்டு வியந்தனர். விண்ணவர்கள் ஸ்ரீ ராமன் மீது மலர் மாரி சொரிந்தனர். ஜனகமன்னன் ராமனின் வீரச் செயலைக் கண்டு வியப்புடன் அவனை ஆலிங்கனம் செய்து கொண்டார். பின்பு சீதை ஒரு சுவர்ண மலரானான மாலையுடன் அங்கு தோன்றி இராமனின் கழுத்தில் அணிவித்து விட்டு பேரானந்தத்துடன் சென்றாள்.

ஜனகராஜன் விச்வாமித்திரரை அயோத்தி தசரதச் சக்கரவர்த்திக்கு ஒருகடிதம் எழுதி ஸ்ரீராமனின் திருமணத்திற்கு மந்திரிகள், மனைவியர் பிள்ளைகள் யாவரையும் அழைத்துக் கொண்டு மிதிலைக்கு வருமாறு வேண்டினார். உடனே விசுவாமித்திரர் தூதுவரை அயோத்திக்கு அனுப்பினார். அதுகண்டவுடன் தசரதர் மந்திரிகளிடம் உடனே மிதிலைக்குப் புறப்பட ஆயத்தமாகும்படி ஆணையிட்டார். அதன்படி தசரதர் தமது குரு வசிஷ்டருடன் எல்லோரையும் அழைத்துக் கொண்டு மிதிலாபுரியை அடைந்தார்.

பிறகு ஒரு சுபதினத்தில், சுபவேளையில் மங்களகரமான முகூர்த்தத்தில் ஸ்ரீ ராமன் சீதையை மணந்து கொண்டார். அந்த சமயம் ஜனகர் ஸ்ரீராமனைப் பார்த்து, "ராம! நான் இந்த சீதையை உனக்குக் கொடுக்கிறேன். அதனால் நீ மகிழ்ச்சி அடைவாயாக" என்று கூறியபடி சீதையின் திருக்கரத்தை எடுத்து ஸ்ரீராமனின் கைமேல் பொருத்தினார். பிறகு அவர்தமது புத்திரி ஊர்மிளாவை இலக்ஷ்மணனுக்கு மணம் செய்வித்தார். ஜனகனின் சகோதரர் தம் புதல்வியர் சுருதகீர்த்தி, மாண்டவி என்பவர்களை ;பரதனுக்கும் சத்துருக்னனுக்கும் முறையே மணம் முடிந்தார்.

அதன் பிறகு ஜனகமன்னன் நாரதர் தமக்கு கூறியபடி சீதையின் பிறப்பை பற்றி வசிஷ்டருக்கும் விச்வாமித்திரருக்கும் எடுத்துரைத்தார். ஜனகர் கூறியதாவது, " நான் யாகசாலையை அமைக்க பூமியை கலப்பை கொண்டு உழும்போது சீதை பூமிக்குள்ளிருந்து வெளிப்பட்டாள். அவளை என் சொந்த புதல்வியாக பாவித்து என் மனைவியிடம் தந்தேன். ஒரு நாள்

நான் தனிமையில் அமர்ந்திருந்தபோது நாரதர் என்னிடம் வந்தார். அவர், ''பிரபுவாகிய ஹரி ராமனாக அவதரித்துள்ளார். அவர் பக்தர்களுக்கு அருள் புரியவும், தேவர்களுக்கு துன்பம் விளைவித்து வரும் ராவணனையும் அவனைச் சார்ந்த தீய அரக்கர்களையும் ஒழித்து உலகில் தருமத்தை நிலைநாட்டவும் தசரதரின் மகனாகத் தோன்றியுள்ளார். அந்த ஹரியின் யோக மாயையே உம்முடைய வீட்டில் சீதையாக வந்திருக்கிறாள். எனவே சீதையை ஸ்ரீராமனுக்கேதான் மணமுடிக்க வேண்டும். அவள் ராமனுக்காகவே விதிக்கப்பட்டவள்.'' — இவ்வாறு நாரதர் கூறிச்சென்றார். நான் சீதையை அன்றிலிருந்து இலக்குமிதேவியாகவே கருதி வருகின்றேன். எப்படி சீதையை ராமனுக்குக் கொடுப்பது என்று மனதில் அடிக்கடி எண்ணியதுண்டு? அப்போது என் மனதில் இந்த எண்ணம் உதித்தது. இதோ இந்தவில் சிவபெருமான் திரிபுர சம்ஹாரம் செய்த பின் எனது மூதாதையரிடம் அளிக்கப்பட்டது. எனவே மற்ற வேந்தர்களின் கர்வத்தைப் போக்கவே இதனைப் பந்தயப் பொருளாக வைத்தேன்.''

''முனிவர்களுள் சிறந்த தபோதனரே, உம்முடைய அருளால் ஸ்ரீராமன் இந்த சிவதனுசைக் காண வந்தனன். இராமனும் சீதையும் ஒரே இருக்கையில் இதோ அமர்ந்திருப்பதைக் கண்டபின் என் வாழ்க்கையின் நோக்கம் நிறைவேறியது.''

ஜனகர் ஸ்ரீராமனைப் பலவாறு புகழ்ந்து தசரதரின் புதல்வர்களுக்கு வேண்டிய மட்டும் வெகுமதிகள் தந்து மகிழ்ந்தார். தசரதரும் தம் குருவுடனும், மந்திரிகள், புத்திரர்களுடனும், சீதையுடனும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் அயோத்திக்குப் புறப்படலானார்.

## VI பரசுராமருடன் போர்

அயோத்திக்குச் செல்லும் வழியில் ஸ்ரீ ராமன் பரசுராமரைச் சந்தித்தார். பரசுராமர் ராமனைப் பார்த்து, ''ராம நீ ஒரு க்ஷத்திரியனானல் என்னுடன் போர் செய். நீ மிகவும் பழமையான இற்றுப்போன வில்லை ஒடித்தாய். வீணாக அது

பற்றி நீ கர்வம் கொண்டிருக்கிறாய். நானோ இந்த க்ஷத்திரிய குலத்தையே பூண்டோடு ஒழிக்க வந்துள்ளேன். நீ இந்த வைஷ்ணவ தனுசை நாணேற்றுவாயேல் பிறகு நான் உன்னுடன் போரிடுகிறேன் இல்லாவிடில் உங்கள் எல்லோரையும் இப்பொழுதே கொன்று விடுவேன்'' என்றார்.

அப்பொழுது தசரத குமாரன் அந்த வைஷ்ணவ தனுசை அவர்கையிலிருந்து சடுதியில் பிடுங்கி உடனே நாணேற்றினார். பிறகு தமது அம்பரா தூணிலிருந்து ஓர் அம்பை எடுத்து வில்லில் பொருத்தி தன் காது வரை நாணை இழுத்தார். பரசுராமர் வியப்புடன் இதைப் பார்த்திருக்க ஸ்ரீராமன், ''ஓ அந்தணசிரேஷ்டனே! இந்த அம்பை எய்வதற்கு ஓர் இலக்கைக் காட்டும். என் அஸ்திரம் வீணாவதில்லை எதை நான் தாக்கவேண்டும்? உலகம் முழுவதையுமா அல்லது உமது இரண்டு பாதங்களையுமா ?'' எனக்கேட்டார்

அதற்குப் பரசுராமர், ''ராம, நீ பரம் பொருள் என்பதைத் தெரிந்து கொண்டேன். எனது சிறு பிராயத்தில் விஷ்ணுவை வழிபட்டுக் கடுந்தவம் இயற்றினேன். திருமால் அதனை மெச்சி '' நீ தெய்வீக ஆற்றல் பெறுவாய். அதனால், உன் தந்தையைக் கொன்ற க்ஷத்திரியரின் குலத்தை இருபத்தொரு தலைமுறை நாசம்செய்யக் கடவாய் என வரமளித்தார். அதன் பிறகு உலகம் யாவற்றையும் வென்று அதனைக் காச்யபருக்குத் தானம் செய்து விடு. திரேதா யுகத்தில் நான் ஸ்ரீ ராமனாக அவதாரம்செய்யப் போகிறேன். அப்போது உமக்கு அளித்த அந்த சக்தியைத் திரும்பவும் எடுத்துக்கொள்வேன்'' எனக்கூறிபகவான் மறைந்தார்.

''ராம, உனக்கு எனது இதயபூர்வமான வணக்கங்கள். என்னிடம் இதுவரை செயல்பட்டு வந்த ஆற்றல் இப்போது உன் வசமாகிவிட்டது. வாழ்வின் எனது இலட்சியம் இத்துடன் நிறைவேறியது. பிரபோ, இந்த சக்திகொண்டு நான் என்னென்ன நல்ல காரியங்களைச் செய்துள்ளேனோ அவையாவும் உனது இந்த பாணத்திற்கு இலக்காகட்டும். அம்பை அவற்றின்பால் செலுத்துவாய். மேலும், என் தவத்தின் மூலமாக எந்தெந்த திவ்விய உலகங்களை நான் பெற்றுள்ளேனோ அவையெல்லாம் என்னைவிட்டு நீங்கட்டும். நான் இனி உன்னையே ஒன்றிய மனம் கொண்டு தியானித்துக் கொண்டிருப்பேனாக'' என்றார்.

அதற்கு ஸ்ரீராமன், "பிராமணோத்தம! நான் இதைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். நீர் என்ன விரும்புகிறீரோ அதை உமக்கு அளிக்கிறேன்" என்றார்.

பரசுராமர், "ராம, நான் எப்போதும் உன்னிடம் உறுதியான பக்தியுடனும் உனது பக்தர்களிடம் அன்பும் நட்பும் கொண்டு வாழவேண்டும்" என்றார்.

"ராம, உனது பாணத்தை விடு அதனால் நான் செய்துள்ள நல்லதும், தீயதுமான எல்லா வினைகளையும் நாசம் செய்து கொண்டு மஹேந்திர மலைக்குச் செல்கிறேன். பரம் பொருளின் அவதாரமாகிய உன்னிடம் நான் தோல்வி அடைந்தது எனக்கு சிறப்பேயன்றி இழிவு அல்ல" எனப் பரசுராமர் கூறினார்.

பிறகு ஸ்ரீ ராமன் வில்லில் பூட்டிய அந்த பாணத்தை எய்தார். அதனால் பரசுராமர் தமது எல்லா ஆற்றல்களையும் அப்பொழுதே இழந்தார் தான் பெறவிருந்த புண்ணிய உலகங்கள் யாவற்றையும் இழந்த ஜமதக்கினியின் புதல்வரான பரசுராமர் மஹேந்திர மலையைநோக்கி விரைந்தார்.

அதன் பிறகு தசரதர் மந்திரி, மனைவியர், மக்களுடன் சந்தோஷமாக அயோத்தி மாநகரை அடைந்தார்.

பக்த ஜனங்களுக்கு அநுக்கிரஹம் செய்பவராயும், எப்போதும் மஹாலக்ஷ்மியுடன் கூடியவராயும், அழிவு என்பதே இல்லாதவராயும், எல்லையற்ற ஆற்றல் மிக்கவராயும் சுயம் பிரகாசராயும் தத்துவ ஞானியாயும், எங்கும் நிறைந்தவராயும், மாயாதீதராயும், மாயையின் மூலமே யாவும் செய்பவராயும் அவதாரப்புருஷர்கள் விளங்குகிறார்கள். அவர்களது இயல்பை உலகை படைக்கும் பிரம்மா போன்ற மஹரிஷியர்களாலேயே உள்ளபடி அறிந்து கொள்ள முடியும். எனவே திருமாலின் அவதாரமான ஸ்ரீராமன் சாதாரண மனிதனைப் போல் நடித்துக் கொண்டு சீதையுடன் அயோத்தியில் வசிக்கலானார்.

## 2. அயோத்தியா காண்டம்

தசரதர் வசிஷ்டரிடம், "சுவாமி நான் முதியபருவம் அடைந்து விட்டேன். மந்திரிகளும், நாட்டு மக்களும்,

முனிவர்களும், வேதம் அறிந்த உத்தமர்களும், ஸ்ரீராமனையே புகழ்கின்றனர். ஆகையால் ராமனை எனக்குப்பின்பு நாட்டை ஆள்வதற்கு வாரிசாக உறுதிப்படுத்தும் யுவராஜ பட்டாபிஷேகத்தைச் செய்யவிரும்புகிறேன். பரதனும் சத்துருக்னனும் அவர்களுடைய தாய் மாமனுடன் சென்றுள்ளனர்."

பிறகு மந்திரி சுமந்திரரை அழைத்து மன்னர் கூறலானார், "இந்தபட்டாபிஷேக வைபவத்திற்கு வேண்டிய எல்லாஏற்பாடுகளையும் செய்யும். வசிஷ்டர் என்ன சொல்கிறாரோ அதை நிறைவேற்றும். நாளைக்கு ராமனுக்கு யுவராஜாவாகும் பட்டம் சூட்டப் போகிறேன்."

ராஜ குருவின் ஆணையின்படி சுமந்திரர் எல்லாக் காரியங்களையும் செய்து முடித்தார்.

பிறகு ராமனை அழைத்து வரும்படி சுமந்திரரை ஏவினார் தசரத மன்னர். ராமனும் தன் தந்தையின் முன் வந்து பணிவுடன் நின்றார், தசரதர், 'ராம, நீ எல்லாம் நன்கு அறிந்தவன். எனவே நாளை இந்த சிம்மாஸனத்தின் மீது ஏறி அமர்வாயாக" எனப் பகர்ந்தார்.

இந்த சுபச்செய்தியை ராமனின் நண்பர்கள் அவன் தாயார் கௌஸல்யாதேவியிடம் தெரிவித்தனர். அதுகேட்டு அவள் எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டாள்.

அயோத்தியின் தெருக்கள் எல்லாம் நீர் தெளிக்கப் பெற்று நன்கு அலங்கரிக்கப் பட்டன. கொடிகளும், மலர் வளைவுகளும் ஆங்காங்கு அமைக்கப் பட்டன. நகர மாந்தர் யாவரும் மறுநாள் நடைபெறவிருந்த ராமபட்டாபிஷேக வைபவத்தைக் காணபேராவல் கொண்டிருந்தனர். வசிஷ்டர் மன்னரிடம் சென்று விழாவிற்கான எல்லாக் காரியங்களும் நிறைவேற்றப் பட்டிருப்பதை தெரிவித்தார்.

ராமன் ஜானகியுடன் உபவாஸம் இருந்து; அன்று இரவு தர்ப்பைகளாலான புனிதப் படுக்கையில் துயில் கொண்டார். ராணி கைகேயி ஒரு அனாதைப் பெண் ஒருத்தியை வளர்த்து

வந்தாள். அவளை தன் தாய் மாமன் வீட்டிலிருந்து அழைத்து வந்திருக்கிருள். அவள் பெயர் மந்திரை. அவள் கைகேயிக்கு ஒரு பணிப் பெண்ணுக இருந்து வருகிருள்.

அதிகாலையில் நகரில் ஏற்பட்டுள்ள மங்கள ஓசைகளுடன் கூடிய ஆரவாரத்திற்கு என்ன காரணம் என்பதை அறிய அவள் மாடியின் உயர்ந்த பகுதியில் ஏறி நின்ருள். தெருக்கள் நீர் தெளிக்கப்பட்டிருப்பதையும் ஆலயங்களும், வீடுகளும், கொடிகளாலும் மலர் மாலைகளாலும் அலங்காரமடைந்திருப் பதையும் கண்டாள். மக்களின் அந்த மட்டற்ற மகிழ்ச்சிக்கான காரணத்தை அறிய பெரும் ஆவல் கொண்டாள். அங்கு அப்போது வந்த ஒரு பணிப்பெண்ணிடம், ''ஏ பெண்ணே! நகரத்தில் இத்தகைய விழாக் கோலம் விளங்கக் காரணம் என்ன? மன்னர் இன்று என்ன செய்யப் போகிருர்? '' என்று கேட்டாள்.

அதற்கு அந்தப் பணிப்பெண் கூனியான மந்தரையை நோக்கி, ''இன்று நம் சக்கரவர்த்தி ராமனுக்கு முடி சூட்டப் போகிருர்'' என்ற செய்தியைக் கூறினுள்.

உடனே குறுகிய மனப்பான்மையுள்ள அக்கூனி அப்போது தூங்கிக் கொண்டிருந்த கைகேயிடம் சென்று அவளைத் துயில் எழச் செய்து, ''பெண்ணே! சீக்கிரம் எழுந்திரு. மன்னர் ராமனுக்கு இன்று யுவராஜ பட்டம் கட்டப்போகிருர். தீய மனம் கொண்ட மன்னர் உன் மகன் பரதனை கேகய நாட்டிற்கு அனுப்பிவிட்டு இன்று ராமனை யுவராஜாவாக முடி சூட்டப் போகிருர். உனக்கு இனிமேல் எல்லா விதமான ராஜபோகங் களும் இல்லை. நீ சுதந்திரத்தையும் இழந்தாய். கௌஸல் யையின் ஆணையின் கீழே தான் நீ வாழவேண்டி இருக்கும். எனவே, நீ உன் உரிமையைப் பெற முயற்சி செய் '' என்றனள்.

அதற்குக் கைகேயி, ''நான் என்ன செய்ய முடியும்? '' என்ருள்.

''உன் கணவருடன் நீ சென்று தேவாசுர யுத்தத்தில் அவருக்கு உதவியதற்காக இரண்டு வரங்களை நீ வேண்டும்

போது உனக்குத் தருவதாக அவர் வாக்களித்துள்ளார் அல்லவா? அதை இப்பொழுது தந்திரமாகக் கேள். நான் சொல்கிறபடி நட, உனது ஆடை அணிகளை நீக்கிவிட்டு அழுக்காடையை அணிந்து கொண்டு தலைவிரிகோலமாக தரையில் சயனித்துக் கொண்டிரு. உன் கணவர் வந்ததும் அவ்வரங்கள் இரண்டையும் இப்பொழுதே கொடுக்கும்படி வற்புறுத்திக் கேள். மன்னரோ உன் மீது தன் உயிரையே வைத்திருக்கிறார் உனக்காக எதையும் செய்வார். எனவே அவ்வரங்களில் ஒன்றினால் ராமன் பதினான்கு ஆண்டுகள் கானகத்தில் வாழவேண்டுமென்றும் மற்றொன்றினால் உனது மகன் பரதன் நாட்டை ஆள வேண்டுமென்றும் கேட்பாயாக. இது தவிர அவர் கூறும் எதையுமே ஒப்புக் கொள்ளாதே.'' என்று மந்திரை கைகேயியின் மனதைமாற்றி தான் சொன்னபடி நடக்கச் செய்தாள்.

கைகேயி அவ்வாறே நடந்துகொண்டாள். தசரதர், ''கைகேயி, ராமன் இக்கொடுமைக்கு ஆளாக உனக்கு என்ன தீங்கு செய்தான்? இரவும் பகலும் ராமனது நல்ல குணங்களைப் பற்றியே நீ பேசிக்கொண்டிருந்தாயே. அன்பே, ராமன் அரண்மனையில் இருக்கட்டும். உன் விருப்பம் போல பரதன் முடிசூட்டிக்கொண்டு கோசல நாட்டை ஆளட்டும். நான் கௌஸல்யையும் கூட விட்டு நீங்குவேன், இந்த அரச பதவியையும் கூட புறக்கணித்துவிடுவேன், ஏன்? என் உயிரையுமே தியாகம் செய்து விடுவேன். ஆனால் என் ஆருயிர் ராமனை மட்டும் பிரிந்து நான் உயிர் தரிக்க வியலாது.'' என்று மிகவும் நொந்து கூறினார்.

அதற்கு அந்த கொடிய கைகேயி, ''சுவாமீ, நீர் தந்த வாக்கைக் காப்பாற்றுங்கள். சத்தியத்தை விட்டுவிடாதீர்கள். உண்மையே அறங்களில் எல்லாம் சிறந்தது. ராமன் வனவாசம் செய்வது ஒன்றையே நான் விரும்புகிறேன். இதனை யாரும் மாற்றவே முடியாது''

அப்போது தசரதர் அங்கு நின்றிருந்த சுமந்திரரை விளித்து, உடனே ராமனை அங்கு அழைத்து வருமாறு பணித்தார். ராமனும் அங்கு வந்து தந்தையை வணங்கி நின்றார். மன்னரின் துயரத்திற்கு யாது காரணம் எனக் கைகேயியிடம் ஸ்ரீ ராமன் வினவினார்.

கைகேயி கூறலானாள், "ராம, நீ ஒருவனே மன்னரின் துயரத்தைப் போக்க வியலும். அவருக்காக ஒரு நல்ல காரியத்தை நீ செய்யவேண்டி இருக்கிறது. முன்பு ஒரு சமயம் மன்னர் எனக்கு இரண்டு வரங்களை வழங்கியுள்ளார். இப்போது உன்னுடன் பேச அவர் வெட்கப்படுகிறார். சத்யத்தை மீற முடியாமல் தவிக்கிறார். நீதான் அவரை இப்போது காப்பாற்ற வேண்டும்.

ராமன் கேட்டார், "அம்மா, இதையெல்லாம் நீ ஏன் என்னிடம் சொல்கிறாய்? அதற்காக நான் என் உயிரையும் துறக்கத்துணிவேன். நெருப்பில் மூழ்குவேன். விஷத்தையும் அருந்துவேன். என் தந்தையின் துயர் நீங்கினால் போதும். எவன் தந்தையின் காரியத்தை கேட்கப்படாமல் தானே அறிந்து செய்கின்றானோ அவன் மக்களில் சிறந்தவன் அன்றோ? தந்தையின் கடனைத் தீர்க்காதவன் அவருக்கு மகனே அல்ல. எனவே என் தந்தை எனக்குப் பணித்தது எதுவோ அதை என் கடன் என்று கருதி உடனேயே நிறைவேற்றுவேன். ராமன் ஒருபோதும் இரு கருத்துக்களைக் கொள்ளமாட்டான். இது உண்மை; இது முற்றிலும் உண்மை."

கைகேயி கூறலானாள், "மன்னர் எனக்கு இரண்டு வரங்களைக் கொடுத்துள்ளார். அவரது வாக்கை நீ காப்பாற்று. உன் தந்தையை அவர் சத்தியத்தினின்றும் பிறழாமல் காப்பாற்று. பரதன் இந்த நாட்டை ஆளட்டும். நீ பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்யவேண்டும்."

ராமன், "தாயே, பரதன் நாட்டை ஆளட்டும். மன்னரின் வாக்கைக்காப்பதற்கு மரவுரி ஜடாமுடியுடன் நான் 14 ஆண்டுகள் காட்டிற்குச் செல்கிறேன். பரதனுக்காக நான் சீதையையும், இந்த ராஜ்யத்தையும், எனது எல்லா உடைமைகளையும் இழக்க ஆயத்தமாக இருக்கிறேன். தந்தைக்குத் தொண்டாற்றி அவரது வாக்கை நிறைவேற்றித் தருவதைவிட சிறந்த கடமை எனக்கு வேறொன்றுமில்லை."

அதன் பிறகு தன் தாய் கோசலையிடம் அநுமதி பெற ராமன் அவளது அரண்மனைக்குச் சென்றான். வருந்திய நிலையில் இருந்த தன் தாயிடம் ராமன், "அம்மா, நீ துயரத்தில் ஆழ்ந்து

விடாதே. எனது அன்புத் தந்தை இந்த நாட்டை பரதனுக்குக் கொடுக்க விரும்புகிறார். அதோடு என் சிற்றன்னை கைகேயியின் வாக்கைக் காப்பாற்ற என்னை தண்டகாரண்யத்திற்கு அனுப்புகிறார்." எனக் கூறினான்.

இதைக்கேட்ட கௌஸல்யை மயக்கம் அடைந்து தரையில் சாய்ந்தாள். சற்றுநேரம் சென்ற பின் மயக்கம் தெளிந்தது. ராமனைப் பார்த்து கூறலானாள், "ராம, நீ பிறந்திராவிட்டால் நான் பிள்ளையற்றவள் என்ற பெயருடனேயாவது இருந்திருப்பேன். இந்த உனது பிரிவு என்ற மாபெரும் துக்கம் எனக்கு வந்திருக்காது."

இச்செய்தி அறிந்த லக்ஷ்மணன் அங்கு வந்து கௌஸல்யை யிடம், "உதார குணமுள்ள தாயே! ஒரு பெண்ணின் வாக்கைக் காப்பாற்ற ராமன் தனக்கு அறநெறிப்படி உரித்தான சாம்ராஜ்யத்தை விட்டு வனம் செல்வது சரியல்ல. எந்தத் தந்தை தெய்வீக குணங்கள் கொண்டவனும், பகைவரும் புகழும் பண்பும் கொண்ட தன் மகனை புறக்கணிப்பார்? நான் என் அண்ணனிடம் உண்மையிலேயே நீங்காத பற்றுக் கொண்டுள்ளவன்; ராமன் நெருப்புக்குள் நுழைவதாக இருந்தாலும், வனம் புகுவதாயிருந்தாலும் நிச்சயமாக அவனுக்கு முன்பு நானே அங்கு சென்று நிற்பேன். கைகேயி யின் தூண்டுதலுக்கு ஆளாகி இந்நாட்டை ஆள விரும்பும் பரதனையும் அவனது உறவினர்களையும் கொன்று ஒழித்து விடுவேன்." என வீராவேசம் கொண்டு கூறினான்.

கௌஸல்யை, "ராமா நீ தண்டகவனம் போவதானால் என்னையும் உன்னுடன் அழைத்துச்செல். நீ இல்லாமல் நான் இங்கு எப்படி வாழ்வேன்? மன்னர் பரதனுக்கு இந்த நாட்டைக் கொடுக்கட்டும். ஆனால் உன் மீது உயிரையே வைத்திருப்பவர் எப்படி உன்னைக் காட்டிற்கு அனுப்ப மனம் துணிந்தாரோ? கைகேயிக்கோ அல்லது மன்னருக்கோ நீ என்ன தீங்கிழைத்தாய்? அவர் கைகேயிக்கு வரங்களைக் கொடுக்கட்டும். உன் தந்தை உனக்கு எஜமானர் என்றால் உன் தாயாகிய நான் அவரைவிட உயர்ந்தவளே. அவர் காடுபோகச்சொன்னால், நான் அது வேண்டாம் என்கிறேன். நான் காடு செல்ல உனக்கு

அனுமதி தரமாட்டேன். நீ தண்டகாரண்யம் செல்லக்கூடாது. நீ இல்லாமல் எனது இல்வாழ்வு பயனற்றது. நான் என் சக்களத்திகளுடன் வாழ மாட்டேன். நானும் உன்னுடன் வருகிறேன். '' என்று தாங்க முடியாத துயரத்தால் பலவாறு பேசலானாள்.

ஸ்ரீ ராமன் தன் தாய் கௌஸல்யையைப் பார்த்து சொல்லலுற்றார்:- ''ஒரு பெண்ணுக்குத் தன் கணவனை தனியே விட்டுத் தவிக்கும்படி செய்வதைப்போல கொடிய செயல் வேறு ஒன்றுமில்லை. தன் கணவனை நன்கு பேணி, சேவை செய்வதொன்றே பெண்ணின் மிக உயர்ந்த கடமையாகும். ஒரு பெண் இவ்வுலகில் உயிரோடு வாழும்வரை அவளது கணவனே அவளுக்கு எஜமானன், தெய்வம் இரண்டும் ஆகிறான். பெண் ஒருத்தி எத்தனை நோன்புகளுடன் சீரிய தவ வாழ்க்கை மேற்கொண்டாலும் கணவனுக்குத் தொண்டு செய்யாவிடில் மேல் உலகில் நல்ல கதியைப் பெறமாட்டாள். ஆனால் கணவனைப் பேணி தொண்டு செய்பவள் சுவர்க்கநிலை அடைகிறாள். தெய்வத்தைக்கூட வணங்காமல் தன் நாயகனுக்கு மட்டும் சேவை செய்பவள் மரணத்திற்குப்பின் உயர்ந்த பதவி பெறுகிறாள். எனவே ஒரு பெண்ணின் கடமை அவள் கணவனுக்குத் தொண்டாற்றுவதே என்று வேதங்களும், ஸ்மிருதிகளும் கூறுகின்றன. தாயே! நான் உறுதியாகக் கூறுகிறேன். பதினான்கு ஆண்டுகளுக்குப்பின் திரும்பி அயோத்தி வந்து சேர்வேன்.''

கௌஸல்யை ராமனது உறுதியான தீர்மானத்தை மாற்ற முடியாது என்பதை நன்கு தெரிந்து கொண்டாள். இறுதியில் ராமன் வனம் செல்ல அனுமதிதந்து ஆசீர்வதித்தாள்.

அதன் பிறகு ஸ்ரீ ராமன் சீதையைக் காணச் சென்றான். நடந்தவை யாவற்றையும் அவளிடம் விளக்கிக் கூறியபின் சீதையை தன் தாயாருக்குப் பணிவிடை செய்துகொண்டு அயோத்தியில் தங்கி இருக்குமாறு வேண்டினான்.

அதற்கு சீதை, ''மனைவி கணவனின் இன்ப துன்பங்களில் பங்கு கொண்டவள். எனவே நானும் உம்முடனே வருவேன். நீரே எனக்கு புகலிடமும் பாதுகாப்பும் ஆகிறீர்.

அரைக்கணம்கூட நான் உம்மைவிட்டுப் பிரிந்திருக்க முடியாது. காட்டிற்கு நீர் செல்லும்போது, உமக்கு முன்னாலே நான் சென்று பாதையிலுள்ள கற்களையும், முட்களையும் நீக்கு கிறேன் '' என்று கூறினாள்.

சீதையின் இந்த விருப்பத்திற்கு ராமபிரான் இணங்க வேண்டியதாயிற்று. அதன் பிறகு இலக்ஷ்மணன் ராமனைப் பார்த்து பின்வருமாறு கூறலானான்,''அண்ணா! நீங்கள் சீதை யுடன் காட்டிற்குப் போவதாகத் தீர்மானித்துச் செல்வதானால். நானும் உங்களுடன் வில்லேந்திக் கொண்டு உங்களுக்குப் பாதுகாப்பாக வருவேன். எனக்கு உங்களுடன் வருவதைக் காட்டிலும் சுவர்க்கமோ, இந்திரபதவியோ தேவையில்லை. உங்களுக்கு முன்னால் வழிகாட்டிக் கொண்டு நான் செல்வேன். வனத்தில் உங்கள் இருவரின் உணவிற்கு கந்தமூலங்களைச் சேகரித்துக் கொடுப்பேன். நீங்கள் விழித்திருக்கும்போதும், தூங்கும் போதும் உங்களுக்கான எல்லாப் பணிவிடைகளையும் செய்வேன்.''

ராமன் இலக்ஷ்மணனையும் உடன் அழைத்துச் செல்ல ஒருப்பட்டார். பின்பு ராமன், இலக்ஷ்மணன், சீதை மூவரும் தசரதரிடம் சென்றார்கள். தந்தையிடம் ராமன், ''அன்புள்ள தந்தையே! நான் உம்மிடம் கானகம் செல்ல அநுமதி கோருகி றேன். தயைபுரிந்து இலக்ஷ்மணனையும் சீதையையும் உடன் அழைத்துச் செல்ல அநுமதியுங்கள். அவர்கள் அயோத்தியில் தங்க விரும்பவில்லை. துயரத்தை விட்டு விடுங்கள். நான் 14 ஆண்டுகள் கழிந்ததும் திரும்பவந்து விடுவேன்,'' என்று மிகவும் பணிவோடு பகர்ந்தான். உடனே ராமன், சீதை, இலக்ஷ்மணன் மூவரும் தசரதருக்கு வலம் சுற்றிவந்து அவர் முன்பு ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்தார்கள். கௌஸல் யையின் பாதங்களிலும் விழுந்து வணங்கினார்கள்.

இலக்ஷ்மணன் பிறகு தன் தாய் சுமித்திரையிடம் விடை பெற்று வரச்சென்று அன்னையை வணங்கினான். சுமித்திரை, ''அப்பா! குழந்தாய், ஸ்ரீ ராமனே உனக்குப் புகலிடமாகும். அவனுக்கு எல்லாவழிகளிலும் சேவை செய். தடையின்றி அவன் கூறும் கட்டளைகளை நிறைவேற்று. இராமனை உன் தந்தை தசரதர் என்றே கருது. ஜானகியை நான் என்றே நினை: நீ

வாழும் காட்டை அயோத்திமா நகரம் என்று உணர். சந்தோஷமாகப் போய்வா'' என விடைதந்தாள்.

வெளியில் திரண்டு நின்றிருந்த அயோத்திமா நகரின் மக்கள்கூட்டத்தைக் கண்ட இராமன் அவர்களிடம் கூறலானார்.

''பெரியோர்களே நீங்கள் என்னிடம் கொண்டுள்ள அன்பு மதிப்பு இவற்றைப் போல் பன் மடங்கு அதிகமாகவே பரதனிடம் காட்டுங்கள். அதுவே என்னை மிகவும் மகிழ்விப்பதாகும். பரதன் அறநெறி அறிந்தவன். உங்கள் எல்லோருக்கும் மகிழ்ச்சியும், நன்மையும் விளைகின்ற காரியங்களையே அவன் செய்வான்.''

சுமந்திரர் ரதத்தைச் செலுத்தினர். ராமன், சீதை இலக்ஷ்மணன் சிரிங்கபேர ஆச்ரமத்தை அடுத்திருந்த கங்கை நதியின் கரையை அடைந்தனர்.

அப்போது வேடுவர் தலைவனான குஹன் ஸ்ரீராமன் அங்கு வந்திருப்பதைக் கேட்டறிந்தான். ஆனந்தம் கொண்டான். பழங்கள், தேன், நறு மலர்கள் – இவற்றை எடுத்துக் கொண்டு விரைவாக வந்து இராமனின்முன் அவற்றை சமர்ப்பித்து நெடுஞ்ஜாண் கிடையாக பாதங்களில் விழுந்து வணங்கினன் குஹன், ஸ்ரீராமபிரான் குஹனை மார்போடு தழுவி மகிழ்ந்தார். குஹன் ஸ்ரீ ராமனைப் பார்த்து, "சுவாமி! இன்று நான் என்ன புண்ணியம் செய்தேன். எனது இவ்வுலக வாழ்வின் பயன் பழுத்தது. நான் தங்களுக்குத் தொண்டுபுரியக் காத்திருக்கிறேன்,'' என்று மிக்க உணர்ச்சியுடன் கூறினன்.

ஸ்ரீ ராமர் சுமந்திரரை விளித்து. '' தேருடன் உடனே அயோத்திக்குத் திரும்பிச் செல்லும். கைகேயி நான் நாட்டின் எல்லையைக் கடந்து காட்டை அடைந்து விட்ட செய்தி கேட்டு மனஉறுதி கொள்வாள். அவள் சந்தேகம் நீங்கி என் தந்தையின் வாக்கை உண்மை என்று நம்புவாள்,'' என்று கூறினர். இவ்வாறு கூறி சுமந்திரரை அனுப்பிவிட்டு இராமன் இலக்ஷ்மணன் சீதையுடன் குஹனுடைய ஓடத்தில் அமர்ந்து கங்கையின் அக்கரையை அடைந்தனர். குஹன் அவனுடைய ஆட்களுடன் படகைச் செலுத்தி கங்கையை தாண்டச்

செய்தான். அன்று இரவு ராமன் சீதையுடன் தர்ப்பைப்புல் இலைதழைகளால் ஆக்கப்பட்ட படுக்கையில்துயில் கொண்டார். அது சமயம் குஹனும் இலக்ஷ்மணனும் கைகளில் வில்லும் அம்பும் ஏந்தி கொடிய விலங்குகள் வராவண்ணம் இரவு முழுவதும் காத்தனர்.

பிறகு மறு நாள் ஸ்ரீ ராமபிரான் தன் உண்மை பக்தனை குஹனைத் தழுவிக்கொண்டு கூறினர்; "அன்ப! இந்த தண்டகாரண்யத்தில் 14 ஆண்டுகளைக் கழித்து விட்டு திரும்புவேன்"

குஹனை அனுப்பிவிட்டு மூவரும் பரத்துவாஜரின் ஆசிரமத்தை அடைந்தனர். அந்த மஹரிஷி தக்க முறையில் ராமபிரானை வரவேற்று, "ராம! உன்னைச் சந்தித்ததின்விளைவால் நான் இன்று என் தவப்பயனை அடைந்தவனுனேன். சமீபமுள்ள சித்திரகூடம் என்ற இடம் தேன், காய்கனிகள் கந்த மூலம் நிறைந்து நீங்கள் வசிப்பதற்கு ஏற்றபடி அமைந்துள்ளது. மனதிற்கு மகிழ்ச்சி ஊட்டுவது மாகும்" என்று கூற அதன்படிராமபிரான் சீதையுடனும் இலக்ஷ்மணனுடனும் அழகுகொழிக்கும்சித்திரகூடமலைச்சாரலை அடைந்தனர்.அங்கேதான் வால்மீகிமுனிவரின் புனித ஆச்ரமம் உள்ளது. ராமபிரானை அம்முனிவர் வரவேற்று நன்கு உபசரித்தார்.

அவ்விடத்தில் வசிப்பதற்கு இலக்ஷ்மணன் ஒரு சிறந்த குடிசையைக் கட்டினுன். அங்கு மூவரும் சந்தோஷமாக காலம் கழித்தனர்.

தலைமை அமைச்சர் சுமந்திரர், அயோத்திக்குத் திரும்பினுர். மன்னர் முன் சென்று வணங்கி ராமபிரான் கூறியவற்றை எடுத்துரைத்தார். சுமந்திரர் ஸ்ரீ ராமன் கூறியதாகச் சொன்னதாவது, "ஏ சாரதி! என் தந்தையை வணங்குகிறேன் என் தாயிடம் அரசனின் பாதங்களுக்கு வணக்கமும் சேவையும் எப்போதும் செய்து கொண்டிருக்கச் சொல்லும். பரதன் வந்ததும் அவனிடம் எனது நலத்தைக் கூறி தாய்மார் மூவரையும் பாரபக்ஷமின்றி நடத்துமாறு சொல்லவும். "

சுமந்திரர் கூறியதைக் கேட்டதசரதர் கண்ணீர் வடித்தார். தாங்க முடியாத துயரம் கொண்ட மன்னர், "ஏ,ராமா, என்

ஆருயிர்மைந்தா! ஏ, சீதே! ஏ, இலக்ஷ்மணா! உங்களை விட்டுப் பிரிந்து எப்படி வாழ்வேன்,'' என்று புலம்பிய படியே உயிர் நீத்தார்.

மந்திரி பிரதானிகள் மன்னரின் சடலத்தைத் தைலத்தில் கெடாமல் போட்டு வைத்தனர். ராஜ குருவான வசிஷ்டர், தன்தாய் மாமனான யுதாஜித்தின் வீட்டிற்கு சகோதரன் சத்துருக்னனுடன் சென்றிருந்த பரதனுக்கு தூதுவரை அனுப்பினார். குதிரைகளில் விரைந்த தூதுவர் பரதனிடம், 'இளவரசே! தாங்கள் தாமதியாமல் உடனே அயோத்திக்கு வரவேண்டும். தங்களால் அங்கே ஒரு மிகப்பெரிய காரியம் ஆகவேண்டி இருக்கிறது'' என்று விண்ணப்பித்தனர்.

பரதன் விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டிய தேரில் தன் தம்பியுடன் அயோத்தியை அடைந்தான். நேராக தன் தந்தையின் இருப்பிடத்தில் அவரைக் காணாமல் திகிலும் திகைப்பும் அடைந்தான். அதன் பிறகு தன் தாயார் கைகேயியின் அரண்மனைக்கு விரைந்தான். அங்கு கைகேயி பரதனைப் பார்த்து, "குழந்தாய்! நான் உனக்காக இந்த நாட்டின் ஆட்சி உரிமையை இரண்டு வரங்களின் மூலம் உன் தந்தையிடமிருந்து பெற்றுள்ளேன். அதோடு ராமனை வனவாசம் செய்யும் படிக்கும் வேண்டியுள்ளேன். எனவே ராமன் சீதையுடனும் இலக்ஷ்மணனுடனும் தண்டக ஆரண்யம் சென்று விட்டான். அங்கே 14 ஆண்டுகள் காலம் கழிப்பார்கள். அரியணையில் அமர்ந்து சந்தோஷமாக நாட்டை ஆளுவாயாக. இராமனைப் பிரிந்த துக்கம் தாங்காமல் தசரதர் தம் வாழ்வின் முடிவை அடைந்து விட்டார்'' என்றனள்.

தன் தந்தையின் மரணத்தையும், சகோதரர்கள் நாடு கடத்தப் பட்டதையும் கேட்ட அளவில் பரதன் துயரக் கடலில் ஆழ்ந்தான். தாயாரின் இந்த செயலுக்காக அவளை மிகவும் கடுமையாகக் கடிந்து கொண்டான். வசிஷ்டர் மிகவும் ஆறுதல் கூறி மன்னரின் இறுதிச்சடங்குகளைச் செய்து முடிக்குமாறு வேண்டினார். பரதனும் ஈமக்கடன்களை 12 நாட்களும் முறைப்படி செய்து முடித்தான்.

14-ஆம் நாள் ராஜசபை கூட்டப்பட்டது. அதில் மந்திரிகள், பிரபுக்கள், பொது மக்கள் நிறைந்திருந்தனர். மந்திரிகள் கூறலாயினர்; "புகழ் பெற்று அறநெறி அறிந்த பரதனே! இந்த கோசல நாட்டின் ஆட்சியை ஏற்றுக் கொள்வீராக." அதற்கு பரதன்," என் மூத்த சகோதரரான ஸ்ரீ ராமனே முறைப்படி அரசுரிமைக்கு உகந்தவர். நான் அவருக்கு பதிலாக 14 ஆண்டுகள் வனவாசம் செய்கிறேன்" எனக்கூறி மந்திரி சுமந்திரரைக் காட்டிற்குச் செல்ல வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி ஆணையிட்டான். பரதன் ஸ்ரீ ராமபிரானைத்தேடி தன் தாய்மார்கள், மந்திரிகள் இதர நகர மாந்தர்களுடன் புறப்பட்டான். சித்திர கூடமலையை அடைந்து ராமனின் திருவடிகளில் விழுந்து வணங்கினான். பின்பு சீதை, இலக்ஷ்மணன் இருவரையும் வணங்கி ராமனை அயோத்திக்குத் திரும்பி சிம்மாஸனத்தில் அமருமாறு கெஞ்சிக் கேட்டான்.

ஸ்ரீ ராமன் பரதனின் வேண்டுகோளுக்கு முற்றிலும் இசையவில்லை. பரதனைப்பார்த்து, "தம்பீ! நெருப்பு அதன் சுடும் இயல்பை இழந்தாலும், பனிக்கட்டிதனது குளிர்ச்சியை இழந்தாலும், மல்லிகை அதன் மணத்தை இழந்தாலும் இழக்கலாம், ஆனால் என் தந்தையின் வாக்கை நான் காப்பாற்றியே தீருவேன்" என பதிலளித்தான்.

பிறகு பரதன் ஸ்ரீ ராமனின் பாதுகைகளை எடுத்துக் கொண்டு, "அன்புக்குரிய அண்ணா! நானும் பதினான்கு ஆண்டுகளும் மரவுரி அணிந்து கந்த மூலங்களை உண்டு தங்கள் வருகையை எதிர்நோக்கி இருப்பேன். மேலும் அயோத்திக்கு வெளியே ஆச்ரமம் அமைத்துக் கொண்டு தங்களுடையபாதுகைகளுக்குப் பிரதிநிதியாக இருந்து ஆட்சி புரிவேன். 14 ஆண்டுகள் முடிந்த மறுதினம் தாங்கள் வரவில்லை எனில் தீக்குளித்து என் வாழ்வை முடித்துக் கொள்வேன். இது உறுதி" என்றனன். இராமன் பரதனைத் தழுவிக்கொண்டு, "அன்பனே! நீ கூறியபடியே நான் நிச்சயமாக வந்து சேர்வேன். கவலை வேண்டாம். பதினான்கு ஆண்டுகள் கழிந்த மறு நாளே நான் உன்னைக் காண்பேன். உன் தாய் கைகேயியை நீ நன்கு பேணிக்காக்க வேண்டும்" என்று கூறினான்.

பின்பு பரதன் பாதுகைகளை சிரம் கொண்டு ஸ்ரீ ராமனிடம்

விடைபெற்றுக் கொண்டு அயோத்தி திரும்பினான். பாதுகைகளுக்கு பட்டாபிஷேகம் செய்வித்து, தாய்மார்களை அயோத்தியில் விடுத்து தான் மட்டும் தவக்கோலம் பூண்டு அயோத்திக்கு வெளியேயுள்ள நந்திக் கிராமத்தில் வசித்துக் கொண்டு ஸ்ரீ ராமனின் வருகையை எதிர்பார்த்தவண்ணம் ராஜ்ய பரிபாலனம் செய்து வரலானான்.

அதன் பிறகு ஸ்ரீ ராமன் சித்திர கூடத்தை விட்டு நீங்கி அத்திரி மகரிஷியின் ஆச்ரமத்தை அடைந்தார். அத்திரி முனிவரின் பாதங்களில் விழுந்து வணங்கிய ஸ்ரீ ராமனை அவர் நன்கு வரவேற்று உபசரித்தார். சீதை அத்திரியின் மனைவியான கற்புக்கரசி அனுசூயாவுடன் உரையாடியபடி இன்பமாகக் காலம் கழித்தனள். அனுசூயை சீதைக்கு சிறந்த ஆடைகள், மலர் மாலைகள் போன்ற வெகுமதிகளை அளித்து மகிழ்வித்தாள்.

பிறகு அத்திரி ராமனுக்கு அடர்ந்த காட்டை காண்பித்து! ராம்! இந்தப் பாதையின் வழியாகத்தான் தவமுனிவர்கள் சென்று கந்தமூலங்கள், பழங்கள் கொண்டு வருவார்கள். நீங்களும் இதன் வழியே சென்று வனவாசம் செய்வீர்களாக'' என்று வழிப்படுத்தினார்.

## 3. ஆரணிய காண்டம்

### 1. விராதனின் வதம்

இராமன் தண்டகவனம் நுழைந்ததும் பல தபோதனர்களின் குடீரங்களுக்குச் சென்று அவர்களை வணங்கினான். தபஸ்விகளும் ராமன் இலக்ஷ்மணன் சீதை மூவரையும் தக்கபடி வரவேற்று அவர்களுக்கு கிழங்கு பழம் நீர் முதலியவற்றை அளித்து உபசரித்தனர்.

ராமன் வழியில் மிகவும் கொடிய அரக்கனை விராதனைக் கண்டார். மூவரையும் தின்பதற்காக அவர்கள் மீது அவ்வரக்கன் பாய்ந்தான். ஸ்ரீராமன் விராதனின் இருகைகளையும் கால்களையும் கூரிய அம்பால் துண்டித்தார். அவ்வரக்கன் கீழே விழுந்து ராமனைப்பார்த்து, '' ஏ வீரனே! நான் சாகும் தருவாயில் இருக்கிறேன். முதலில் நீர்தான் ராமன் என்று அறிந்தேனில்லை. நான் யவன் என்பவனின் மகன். என் தாயின் பெயர் சதப்பிரதை. என் பெயர் விராதன். நான் கடுந்தவம் புரிந்து

நான்முகனை மகிழ்வித்தேன். நான் ஆற்றல் மிக்கவனாக இருந்தேன். ஒரு சாபத்தின் காரணமாக இந்த கொடிய அரக்கனின் உருவம் அடைந்தேன். முன்பு என் பெயர் தும்புரு. நான் ஒரு கந்தர்வன். ஒரு சமயம் ரம்பையின் மீது கொண்ட இச்சை காரணமாக குபேரனுக்குக் கோபமூட்டினேன். அவன் ஒரு சாபமிட்டான். என் தவற்றை உணர்ந்து மன்னிப்புக் கோரினேன். அதற்கு'' நீ, என்று ஸ்ரீ ராமனால் கொல்லப் படுவாயோ அன்றே இந்த சாபத்திற்கு விமோசனம்.' என்றான் குபேரன். சுவாமி! அதன் படி நான் இன்று தங்களுடைய கருணையால் விடுதலைபெற்றேன். இங்கிருந்து ஒன்றரை யோஜனை தூரத்தில் சரபங்க முனிவரின் குடிரம் உள்ளது. அங்கு சென்றால் அவர் உங்களுக்கு வேண்டிய எல்லா நலன்களையும் செய்வார். சீக்கிரம் அங்கே செல்லுங்கள்'' எனக்கூறினான்.

அப்போது கொடிய விராதனின் உடலிலிருந்து அழகு மிக்க ஒரு கந்தருவனின் உருவம் வெளிவந்தது. அவன் ராம பிரானின் பாதங்களில் விழுந்து வணங்கி விட்டு தனது சொந்த உலகிற்குச் சென்றான்.

சீதை ஸ்ரீ ராமனிடம். ''சுவாமீ! தாங்கள் அரக்கர்களை யாதொரு காரணமும் இல்லாமல் கொல்கிறீர்கள். இந்த தண்டகாரணியத்தில் நிறைய அரக்கர்கள் உள்ளனர். எனவே இக் காட்டிற்குள் மேலும் நாம் செல்ல வேண்டாம். தாங்களோ ஐம்புலன்களையும் வென்றவர். தவவாழ்க்கையை மேற்கொண்டு. கழிக்கவே நாம் இங்கு வந்துள்ளோம். தாங்கள் சத்தியஸந்தர். தங்களுடைய விரதத்தில் உறுதி படைத்தவர். எனவே எந்த உயிரையும் கொல்வது சரியாகுமா? க்ஷத்திரிய தர்மத்தை அயோத்தி சென்ற பிறகு கடைப்பிடிக்கலாம் அல்லவா? தவ வேடம்எங்கே? க்ஷத்திரியனின் வீரச்செயல் எங்கே? இவை தங்களிடம் ஒன்றுக் கொன்று முரண்பட்டே அல்லவா காணப்படுகின்றன? இங்கு சுவாமீ,தாங்கள் ஒரு முனிவரின் வாழ்க்கையைப் பின்பற்றுங்கள். குற்றம் புரிவோரை தண்டிக்கும் க்ஷத்திரிய தர்மத்தை அயோத்தி சென்றபின் அநுசரிக்கலாம். சுவாமி! தாங்கள் அறியாதது ஒன்று மில்லை' என்று ஒரு உபந்யாசமே செய்து விட்டாள்.

அதற்கு ஸ்ரீ ராமன் விடை கூறும் விதமாக, கீழ் வருவன வற்றைப் பகர்ந்தார். "தண்டக வனத்தில் வாழும் தபஸ்விகள் மிகுந்த இடையூறுகளுக்கு ஆளாகியுள்ளனர். அவர்கள் என்னைத் தங்களைக் காக்குமாறு வேண்டிக் கொண்டுள்ளனர். பாதுகாப்பு அளிப்பதாக அவர்களுக்கு வாக்குக்கொடுத்திருக்கிறேன். உயிரோடு இருக்கும்வரை எனது வாக்கை நான் மீறமாட்டேன். என் உயிரையோ, உன்னையோ இலக்ஷ்மணனையோ இழக்க நேரிட்டாலும் இழப்பேனேயன்றி என் வாக்களிப்பை நான் காப்பாற்றியே தீருவேன். இது உறுதி. முனிவர்கள் வேண்டிக் கொள்ளாவிடினும், அவர்களின் துயரைத் துடைப்பது எனது முக்கிய கடமை."

## 2. சரபங்கரையும் சுதீக்ஷ்ணரையும் சந்தித்தல்

விராத வதம் முடிந்த பிறகு மூவரும் சரபங்கரின் ஆச்ரமம் நோக்கி நடந்தனர். அங்குசேர்ந்ததும் அத்தவமுனி ஸ்ரீ ராமனுக் குகந்த பழங்கள் தந்து தக்கவாறு உபசரித்தார். சரபங்கர் இராமனிடம், "நான் நீண்ட காலமாக இவ்விடத்தில் தவ வாழ்க்கை மேற்கொண்டு வாழ்ந்து வருகிறேன். ராம! உன்னைக் காணவேண்டும் என்று எனக்கு நீண்ட நாளாக ஆசை. இன்றே தவப்பயனை அடைந்தேன். நான் இது காறும் செய்து ள்ள தவத்தின் சிறப்பை உம்மிடமே சமர்ப்பிக்கிறேன். அதன் விளைவாக நான் பிறவாநிலையான முக்தியை அடைவேனாக," எனக்கூறி இராமனை அடிபணிந்து வணங்கி மேலும் கூறினார். "நான் இப்போது பிரம்மலோகத்தை அடைகிறேன்," என்று நெருப்பை வளர்த்து அதில் தமது ஸ்தூலசடலத்தைச் சாம்ப லாக்கினார்.

தண்டகாரணிய வாசிகளான எல்லா முனிவர்களும் ஸ்ரீ ராமனைக் காணவந்தனர். ஸ்ரீ ராமபிரானுக்குத் தக்க மரியா தைகள் செய்தனர். அங்கு மூலைக்கு மூலை முனிவர்களின் தலை களும், கால்களும், முண்டங்களும், எலும்புகளும் குவிந்து கிடப் பதை ராமபிரான் கண்ணுற்றார். அவர் முனிபுங்கவர்களிடம். "இவையாருடையவை? ஏன் இங்கே இப்படிக்குவிந்துள்ளன?" எனக்கேட்டார். அதற்கு முனிவர்கள், "இவை ரிஷிகளின் சடலங்கள். அரக்கர்களால் கொன்று தின்னப்பட்ட மிகுதிகள்

அவர்கள் பூரண சமாதியில் நிலைகொண்டிருந்த பொழுது ராக்ஷதர்கள் இவ்வாறு செய்துள்ளனர். இங்கு அவுணர்கள் நரமாமிசம் தின்பதற்கு வாய்ப்பை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிருர்கள். இங்கும் அங்கும் அவர்கள் இதற்காகவே சுற்றித் திரிகிருர்கள். எனவே ராமா! முனிவர்களின் இத்துயரை நீ தான் போக்கி எங்களைக் காக்க வேண்டும்'' என்று பணிவு அன்பு கொண்டு விண்ணப்பித்துக் கொண்டனர்.

முனிவர்களின் இவ்வாசகங்களைக் கேட்ட ராமபிரான் அரக்கர் யாவரையும் கொன்று அவர்களுக்கு அபயம் அளிப்பதாக வாக்களித்தார்.

அதன் பிறகு ராமன் அகத்தியரின் சிஷ்யனுன சுதீக்ஷணரின் ஆச்ரமத்தை அடைந்தார். சுதீக்ஷணரும் எப்போதும் ஸ்ரீ ராமனையே வழிபட்டுக் கொண்டிருந்தார். ராமபிரான் வந்ததும் எதிர்கொண்டழைத்து தக்கபடி உபசரணைகள் செய்தார். இராமனும் சுதீக்ஷணரை வாழ்த்தி விட்டு அகஸ்தியரின் ஆச்ரமம் நோக்கி புறப்பட்டார்.

## 3. 'அகஸ்தியரின் ஆச்ரமத்தில்'

அகஸ்தியர் ராமன், சீதை, இலக்ஷ்மணர் மூவரையும் முறைப்படி வரவேற்ருர். விருந்தளித்தார். பிறகு ஸ்ரீராமனிடம், "ராம! உன்னுடைய வருகையை எதிர்பார்த்துக் கொண்டு தான் நான் இங்கே இதுகாறும் வசித்து வருகிறேன். இன்று உன்னைக் கண்டபிறகு என் வேள்விகள் யாவும் வெற்றிகரமாக முடிவு பெற்றன. என்தவநிலை இன்றே பூரணம் அடைந்தது'' என்று சொன்னுர். அதன் பிறகு நீண்ட நாளாகத் தம் வசம்வைத்திருந்த தனுசு ஒன்றை ஸ்ரீ ராமபிரானிடம் அகஸ்தியர் கொடுத்தார். அந்த வில் இந்திரனல் அகஸ்தியரிடம் கொடுக்கப் பட்டது. மேலும் அக்ஷயமான (எடுக்க எடுக்க குறைவுபடாமல் பெருகும்) அம்புராத்தூணியையும் அதன் நிறைய தெய்வீக அஸ்திரங்களையும் அளித்தார். அத்துடன் சிறந்த வைரங்கள் பதிக்கப் பட்ட வாள் ஒன்றையும் தந்தார். முனிவர் ராமனிடம் கூறினுர் "ராம! நீ இந்த ஆயுதங்களைக் கொண்டு பூமிக்கு பாரமாகவுள்ள அரக்கர் கூட்டங்களை மீதியின்றி அழித்து எந்த நோக்கம் கொண்டு மாயையின் துணையால் இம்மானிடப் பிறவியை எடுத்

தாயோ அதனை நிறைவேற்றிக்கொள். இங்கிருந்து இரண்டு யோஜனை தூரத்தில் பஞ்சவடி என்ற இடம் உள்ளது. கோதாவரி நதிக்கரையில் அமைந்த அந்த இடம் இயற்கை வனப்பு மிகுந்ததாயும், கிழங்கு, பழங்கள் அபரிமிதமாக கிடைப்பதாயும் உள்ளது. நீர்ப்பெருக்கமும் செழிப்பும் மிகுந்த மனோஹரமான அவ்விடத்தில் நீ உன்னுடைய எஞ்சியுள்ள வனவாச நாட்களைக் கழிப்பாயாக ''

ஸ்ரீ ராமபிரானும் முனிவருக்கு வணக்கங்களைச் செலுத்தி விட்டு சீதையுடனும் இலக்ஷ்மணனுடனும் முனிவர் காட்டிய வழியைப் பின்பற்றி பஞ்சவடியை நோக்கிப் புறப்பட்டனர்.

## 4. 'பஞ்ச வடியில்'

செல்லும் வழியில் ஒருபெரிய கழுகுகளின் அரசனை சந்தித்தனர். இராமன் அக்கழுகை ஓர் அரக்கன் எனக்கருதி தன் அம்பால் கொல்லத் துணிந்தார். கழுகரசு, ராமனைப் பார்த்து "ராமா! நான் உன்னால் கொல்லப்படுவதற்குத் தகுதியற்றவன். நான் உன் தந்தை தசரதரின் நெருங்கிய நண்பன். நான் சியேனி என்பவளின் மகன். என் பெயர் ஜடாயு. நான் இந்த பஞ்சவடியில் வசித்து வருகிறேன். உனக்கு எல்லா நன்மைகளும் செய்ய விரும்புகிறேன். நீங்கள் இல்லாத போது தனித்திருக்கும் சீதைக்கு நீங்கள் வரும் வரையில் பாதுகாப்பாக இருப்பேன் '' என்று உறுதிமொழி பகர்ந்தது.

ஸ்ரீ ராமனும் அன்புடன் அக்கழுகை நோக்கி, '' அன்புக்குரியவனே! இவ்விடத்திலேயே நீ வாசம் செய்து கொண்டு எங்களுக்குத் துணைவனாக இருப்பாயாக '' என்றார்.

பிறகு ராமன் பஞ்சவடியை அடைந்து அங்கு வசிப்பதற்கு ஒரு குடீரத்தை கட்டுமாறு இலக்ஷ்மணனை ஏவினார். இலக்ஷ்மணன் உடனே அண்ணனின் ஆணையை நிறைவேற்றினார்.

அவர்கள் அங்கு வசிக்கும் போது ஒரு அரக்கியின் கண்களில் இந்தக் குடீரம் பட்டது. அவள் ராமனின் அழகைக் கண்டு வியந்து ஒருதலைக்காமம் கொண்டாள். எனவே ராமனை

அணுகி, '' நீர் ஏன் ராக்ஷஸர்கள் வாழும் இவ்விடத்தில் உம் மனைவியுடன் வந்து வசிக்கிறீர்? நான் சூர்பனகை என்ற பெயருடைய ராக்ஷஸி. என் இஷ்டப்படி எந்த உருவமும் எடுத்துக் கொள்ளும் திறமை எனக்கு உண்டு. நான் ராவண னின் சஹோதரி. இங்கு இவ்வனத்தில் என் உடன் பிறந்த கரன் என்ற அரக்கனுடன் வசிக்கிறேன். இலங்கை வேந்தனான ராவணன் இவ்விடத்தை எனக்குக் கொடுத்திருக்கிறான். ரிஷி களைக் கொன்று சாப்பிட்டுக்கொண்டு நான் இங்கே வாழ் கிறேன். நீர் எனக்கு கணவனாக ஆவீராக'' என்று காமத்தால் தூண்டப்பட்டுக் கூறினாள்.

உடனே ராமன் இலக்ஷ்மணனைப் பார்த்து,'' இந்த அவ லக்ஷண, கற்பில்லாத கர்வம் கொண்ட அரக்கியை அங்கஹீனப் படுத்து' என்றார். உடனே இலக்ஷ்மணன்வாளை உருவிசூர்ப்ப னகையின் மூக்கையும் காதுகளையும் துண்டித்து விட்டான்.

சூர்பனகை பெருங்கூச்சலிட்டுக் கொண்டு இரத்தம் பெருக். கெடுத்து ஓட தன் சகோதரன் கரனிடம் சென்று முறையிட் டனள். கரன்அவளைப்பார்த்து, ''தங்காய் யார் உன்னை இப்படி அங்கஹீனம் செய்தது? நான் இப்பொழுதே சென்று அவனைக் கொன்று ஒழிக்கிறேன்'' என்று வெகுண்டு எழுந்தான். சூர்பனகை அழுதுகொண்டே, ''அண்ணா! ராமன் தன் மனைவி சீதையுடனும், தம்பி இலக்ஷ்மணனுடனும் கோதாவரிக்கரையில் வசிக்கிறான். அவன் தம்பி இலக்ஷ்மணனே ராமன் ஆணையிட என்னை இக்கதிக்கு ஆளாக்கினான். அவர்கள் இருவரையும் கொன்று விடு'' என்று கூறினாள்.

கரன் சொன்னான்,'' நான் அவ்விருவரின் இரத்தத்தைக் குடி த்து அவர்களை இதோ நமன் உலகிற்கு அனுப்புகிறேன்'' உட னே கரன் தூஷணனையும் பதினாலாயிரம் வலிமை மிக்க அரக்கர் களையும் அழைத்துக் கொண்டு ராமனுடன் போரிடப் புறப்பட் டான். பலதரப்பட்ட ஆயுதங்களைக் கொண்டு அவர்கள் ஸ்ரீராம பிரானை தாக்கினர். எல்லா அரக்கர்களையும் ராமன் ஒன்றரை முகூர்த்த காலத்துக்குள் கொன்று தீர்த்தான்.

அதன் பிறகு சூர்பனகை இலங்கை சென்று ராஜஸபை யில் அரியணையில் அமர்ந்திருந்த ராவணனின் கால்களில்

விழுந்து அழுதனள். ராவணன் சூர்பனகையை, ''எழுந்திரு. யார் உன்னை இப்படி அலங்கோலப்படுத்தியது? சொல். அவனை இப்பொழுதே எரித்து விடுகிறேன்,'' என்று சினந்து சொன்னான்.

சூர்பனகை, ''அண்ணா! உமக்கு ஒற்றர்கள் எவருமே இல்லை. கீழ்த்தரமான மந்திரிகளைக் கொண்டிருக்கிறீர். இழிந்த இன்பநுகர்ச்சியே உமது விருப்பமாக உள்ளது. ஜனஸ்தானத்தில் உமது ஆட்களுக்கு ஏற்பட்டிருக்கும் படுநாசம் பற்றி நீர் ஒன்றும் அறியமாட்டீர். கரன், தூஷணன் உட்படபதினாலாயிரம் அரக்கர்களும் ஒரு நொடிப்பொழுதில் இராமன் என்பவனால் கொல்லப்பட்டனர். அங்கு வாழும் முனிவர்கள் இனி பயமின்றிவாழும் படிக்கு ஒரு அரக்கன் இல்லாதபடி அழித்து விட்டான்.

ராவணன் கேட்டான், '' அந்த ராமன் யார்? ஏன்? எப்படி அவ்வளவு வலிமை மிக்கவரைக் கொல்ல அவனால் முடிந்தது? எல்லாவற்றையும் விவரமாகக் கூறு. அவனை இப்பொழுதே கொன்றுவிடுகிறேன்.''

அதற்கு சூர்பனகை பின்வருமாறு விவரித்தாள், ''ஒரு நாள் ஜனஸ்தானத்திலிருந்து கோதாவரி நதிக்கரைக்கு நான் சென்றேன். அப்போது பஞ்சவடியில் ராமன் மரவுரிசடாமுடியுடன் கையில் வில்லும் அம்பும் ஏந்தியவாறு நின்றிருந்தான். அவனுடையதம்பி இலக்ஷ்மணனும் ராமனின் சாயலாகவே இருந்தான். ராமனின் மனைவி சீதை தனக்கு வேறு இணையற்ற அழகியாக இருந்தாள். தேவர்களிலும், கந்தர்வர்களிலும், நாகர்களிலும் மனிதர்களிலும் சீதையைப் போன்ற ஓர் அழகியை நான் பார்த்ததும் இல்லை, கேள்விப்பட்டதும் இல்லை. அவளை கூட்டிவந்து உன் மனைவியாக்க முயன்றேன். அப்பொழுது ராமன் ஆணையிட இலக்ஷ்மணன் என்னுடைய மூக்கையும் காதுகளையும் துண்டித்து இப்படி அலங்கோலம் செய்து விட்டேன். துயரத்தோடு அழுது கொண்டே கரனிடம் சென்று முறையிட்டேன். அவன் தூஷணனையும் பதினாலாயிரம் அரக்கர் படையையும் திரட்டிக் கொண்டு ராமனுடன் போருக்குப் புறப்பட்டான். ஒரு முகூர்த்த காலத்திற்குள் அரக்கர்

யாவரையும் கொன்று தீர்த்தான் ராமன். சீதையை நீ உன் மனைவியாக்கிக் கொள்வாயானால் நீ இவ்வுலகில் பிறந்த பயனை பூரணமாய் அடைந்தவன் ஆவாய். ஆனால் ராமன் முன்னால் நீ நிற்கவும் இயலாது. அவனை ஏமாற்றியேதான் நீ அவளை அடையக் கூடும்''

பிறகு ராவணன் மாரீசனிடம் சென்று பேசலானான், ''என் அன்புக்குரிய மாரீசனே! ஒரு குற்றமும் இழைக்காதிருந்தும் கரன் தூஷணன் உட்பட பதினாலாயிரம் ராக்ஷஸர்களையும் ராமன் ஜனஸ்தானத்தில் கொன்று நாசமாக்கி விட்டான். என் தங்கை சூர்பனகையை இலக்ஷ்மணன் அங்கஹீனம் செய்து, அனுப்பி இருக்கிறான். எனவே, ராமன் இல்லாத சமயம் அவனுக்கு உயிருக்கு உயிரான மனைவி சீதையை நான் சிறை பிடித்து வரவிரும்புகிறேன். அதற்கு நீ துணைபுரிய வேண்டும்''

ராவணனின் சொற்களைக் கேட்ட அறிவாளியான மாரீசன் கூறினான், ''ராவணா! நீ செய்யப்போகும் இம்முயற்சி உன்னையும், உன் குலத்தையும் வேரோடு அழித்து விடும். தங்களுக்கு மகிழ்ச்சியூட்டும் விஷயங்களையே சாதாரணமாக ஜனங்கள் பேசுகிறார்கள். மனதிற்கு பிடிக்காதவற்றைப் பேசுபவர்கள் மிகவும் அரிது; அதைக் கேட்பவர்களும் மிக மிக அரிது.

ஸ்ரீ ராமனின் பராக்கிரமம் எப்படிப்பட்டது என்பதை நான் நன்கு அறிவேன். ராமன் பதினாறே பிராயமுள்ள பையனாக இருந்தபோது விச்வாமித்திரரின் யாகத்தைப் பாதுகாக்க வந்திருந்தான். அவ்வேள்வியை கெடுக்கச் சென்றிருந்த என்னை ஒரே ஒரு பாணத்தால் நூறு யோஜனைக்கப்பாலே கடலுக்குள்ளே போய் விழும்படி செய்து விட்டான். அன்றிலிருந்து ராமனின் பயம் இல்லாத இவ்விடத்தை அடைக்கலமாகக் கொண்டு வாழ்கின்றேன். ராமனது வீரதீரச் செயலை நான் நன்றாக உணர்ந்தவன். ஆனால், ராமன் உதார குணம் கொண்டவன். இவ்வுலகம் யாவற்றிற்குமே அவன் அரசன். ராஜ, ரத்ன, ரதம் எனத்துவங்கும் சொற்களைக் கேட்டாலே எனக்குக் குடல் நடுங்குகிறது. காரணம் அச்சொற்கள் ராமனின் பெயரிலுள்ள முதல் எழுத்தை சுட்டுகின்றன. கனவில்தான் நான் ராமனைக் காண்கின்றேன். எனவே ராமனுக்கு எதிரான பகை மூட்டும் எண்ணங்களை விடுத்து அரண்மனைக்குச் செல்வாயாக.

பிறர் மனைவியை அடைய முயல்வதே மாபெரும் பாவச்செயல். உனக்கோ ஆயிரக்கணக்காக ஆசை நாயகிகள் உள்ளனர். நீ உன் மனைவியருக்கு உண்மையுள்ளவனாக இரு. உன் குடும்பத்தைக் காப்பாற்றிக்கொள். ராமனை தீவிரபக்தியுடன் வழிபடு. அவனிடம் பகைமை காட்டாதே. எனது இந்தஅறிவுரை உன் நன்மைக்கேயாகும். இதைக் கடைப்பிடித்து நட. ராமன் ஒரு மனிதன் அன்று. பகவான் ஸ்ரீ ஹரியே அவன். இதை நான் நாரதரிடமிருந்து கேட்டு அறிந்தேன். ஹரி இந்த பூமியின் பாரத்தைக் குறைப்பதற்காக தனது யோக மாயையின் துணை கொண்டு மனிதனாகத் தோன்றியுள்ளார்."

இதைக்கேட்டு வெகுண்டெழுந்த ராவணன் கூறலானான், "மாரீச! நீ ஒரு மன்னனிடம் மிகுந்த மரியாதையுடன் பேச வேண்டும். ஆனால் நீ உன்னுடைய தீய எண்ணத்தின் காரணமாக என்னிடம் கடுஞ்சொற்களைப் பேசுகின்றாய். என்னை அவமதிக்கின்றாய். சீதையை கடத்திக்கொண்டு வந்து விட வேண்டும் என்று நான் தீர்மானித்து விட்டேன். எனது இவ்வுறுதியை யாராலும் மாற்ற முடியாது. பலாத்காரமாகவேனும் அவளைக் கொண்டு வந்தே தீருவேன். எனக்கு தர்மம் அதர்மம் பற்றி நீ சொல்லவேண்டியதில்லை. ராமன் பகவானின் அவதாரம் என்றும், பிரம்மாவின் வேண்டுகோளின் படி என்னைக் கொல்வதற்கு மனிதனாகத் தோன்றியுள்ளான் என்பது எனக்குத் தெரியும். நிச்சயமாக அவன் என்னைக் கொல்லவே செய்வான். எந்த வழியிலாவது சீதையை ராமனிடமிருந்து பிரித்து என்வசம் கொண்டுவந்தே ஆக வேண்டும். ராமன் கையால் மரணமடைந்தால்தான் நான் எனது வைகுண்ட பதவியைப் பெறமுடியும்.

எனவே, நீ ஒரு அற்புதமான மானின் உருவத்தை எடுத்துக்கொள், சீதையின் முன்பு அங்குமிங்கும் சஞ்சாரம் செய். ராமனிடம் அந்த மானை கொண்டு வருமாறு சீதை கோருவாள். நீண்டதூரம் ராமனை ஏமாற்றி அழைத்துச்செல். உன்னை உயிருடன் பிடிக்க முடியாது என்று உன்னைக்கொல்வதற்கு பாணத்தைபோடுவான். அப்போது, "ஹா சீதா! ஹா; இலக்ஷ்மணா' என்று பெருங்கூச்சல் போட்டவண்ணம் ராம பாணத்திற்கு' இரையாவாய். இந்த என் ஆணையை நிறைவேற்றாவிடில் இப்பொழுதே உன்னை கொன்று விடுவேன்."

ராவணனின் இப்பேச்சைக் கேட்ட மாரீசன் தனக்குத் தானே எண்ணலானான், "ராமன் கையால் மாண்டால் இவ் வுலக பந்தத்திலிருந்து என் ஆத்மா விடுபடும். நான் சிறந்த வைகுண்ட பதவியை அடைவேன். இந்தப் படுபாவி ராவணன் என்னைக் கொன்றால் நரகத்தில் தான் வீழ்வேன்" என்று இவ் வாறு எண்ணிய மாரீசன் ராவணனைப் பார்த்து, "மன்னர் மன்னா! நீர் கூறியபடியே அச்செயலை நான் நிறைவேற்று கிறேன்" என்றனன்.

## 5. 'மாய மான்'

மாரீசன் ஒரு மானின் உருவத்தை எடுத்துக் கொண்டான். அதன் உடல் உருக்கிவார்த்த தங்கம் போல் ஒளிவீசியது. வெள்ளியாலான புள்ளிகளுடன் கொம்புகள் மாணிக்க மணி களாகக் காணப்பட்டன. கால் குளம்புகள் வைரங்களாகத் தோன்றின. கண்கள் நீலமணிகளாகத்திகழ்ந்தன. அதன் காந்தி மின்னலின் ஒளியை ஒத்திருந்தது. மாரீசமான் பஞ்சவடி சென்று சீதையின் முன்பு நின்று அவளது சித்தத்தை மயங்க வைத்தது.

இந்த அழகிய மானைக் கண்டனள் சீதை. "அதை எனக்கு பிடித்துத் தாருங்கள்," என்று ஸ்ரீ ராமனை வேண்டினாள். "அது எனக்கு பொழுது போக ஒரு விளையாட்டுப் பொருளாக இருக்கட்டும். அயோத்தி சென்றதும் நமது அரண்மனைக்கு ஒப்பற்ற ஓர் அணிகலனாக அது இருக்கும். பரதனும் என் மாமியார்களும் இதைக் கண்டு பெருமகிழ்ச்சிகொள்வார்கள்" என்றாள்.

அப்போது அங்குவந்த இலக்ஷ்மணன் ராமனிடம், 'அண்ணா! உலகில் இப்படி ஒரு மான் தங்கம் நவமணிகளுடன் காணப்படு வதில்லை. இது ஏதோ மாயத்தோற்றம், அந்த மாரீசன் என்ற அரக்கன் சீதையை ஏமாற்றச் செய்யும் ஒருதந்திரம் இது. இதில் சந்தேகமே இல்லை," என்று அறிவுறுத்தினான்.

அதற்கு செவிசாய்க்காத ராமன், '' இலக்ஷ்மணா! எனக்கு உயிரினும் மேலான சீதையை நீ காவல் காத்திரு. மிகக் கொடிய அரக்கர்கள் இக்காட்டில் உள்ளனர். அவன் மாரீசனாக இருப்பின் அவனைக் கொன்று விட்டுத்திரும்புகிறேன். அது மானாக இருக்குமானால் சீதைக்காக அதைப் பிடித்துக் கொண்டு வருகிறேன், '' என்று கூறியவாறு வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு அம்மானைப் பின் தொடர்ந்தான்.

மாரீசன் ராமனை குடீரத்திலிருந்து மிகவும் தூரத்திற்கு தோன்றியும் மறைந்தும் அழைத்துச் சென்றான். இவன் அரக்கனே என்று தெளிந்த ராமன் அவன் மீது ஓர் அம்பை எய்தான். அது அவன் உடலில் பாய்ந்த அளவில் மாரீசன் தன் சுய உருவை எடுத்தான். வாயிலிருந்து இரத்தம் பெருக தரையில் விழுந்தான். உடனே ராமனுடைய குரலைப் போல, '' ஐயோ, நான் செத்தேன். ஆ! சீதா, ஆ இலக்ஷ்மணா'' என்று கூக்குரல் போட்டுக் கொண்டு தனது உயிரை விட்டான்.

அப்போது ஸ்ரீ ராமன், இந்த அற்பஅரக்கன்என் குரலைப்போல பாவனை செய்து ' நான் சாகிறேன். இலக்ஷ்மணா! சீதா! என்று கத்தினானே. அது கேட்டு சீதை என்ன கவலை கொள்கிறாளோ நான் இறந்ததாகவே நினைப்பாளே. எனவே நான் வேகமாகக் குடீரத்திற்குத் திரும்ப வேண்டும்'' என்று நினைத்தார்.

சீதையோ அக்குரலைக் கேட்டு மிகவும் பதட்டம் கொண்டு சஞ்சலப்பட்டாள். இலக்ஷ்மணனைப் பார்த்து, '' இலக்ஷ்மணா! உடனே சென்று பார். உன் அண்ணன் ஏதோ ஆபத்தில் தவிக்கிறார். இந்த குரலோசையை நீ கேட்கவில்லையா?'' என்று கூறி அவனை ராமனிடம் போவதற்கு துரிதப் படுத்தினாள். அது கேட்ட இலக்ஷ்மணன், '' தாயே! இது ஸ்ரீ ராமனின் குரலாக இருக்க முடியாது. உயிர்போகும் தருணம் அந்த அரக்கன் செய்தமுழக்கமே ஆகும். ராமன் நினைத்தால் இம் மூன்று உலகங்களையுமே எரித்து விடும் ஆற்றல் கொண்டவன். தேவர்களே புகழும் ஸ்ரீ ராமபிரான் இவ்வாறு ஈனக்குரல் கொடுப்பாரா? '' என்று, சீதையைத் தேற்றினான். ராமன் தனக்குச் செய்திருந்த கட்டளையை நினைந்து சீதை சொன்னபடி போகாமல் அங்கேயே நின்றான்.

அதனால் கோபமடைந்த சீதை, "ஏ பாதகனே! உன் அண்ணன் ஒழியட்டும் என்று எண்ணுகிறாயா? என்னை அடைய வேண்டும் என்ற தீயஎண்ணம் கொண்டு போகாமல் இங்கேயே நிற்கிறாயா? அது நடக்காது. இதோ உன் முன்பே என் உயிரை மாய்த்துக் கொள்கிறேன். ராமனை அடைந்த பிறகு நான் எப்படி வேறொருவரை விரும்புவேன். நீ இப்படிப்பட்டவன் என்று ராமன் அறியமாட்டான் பாவம். நான் என் ராமனைத் தவிர எதையும் தொடக்கூடமாட்டேன்." என்று வெறுப்பும் கலவரமும் கொண்டு கூறினாள்."

சீதையின் இத்தகைய சொல்லம்புகளால் இலக்ஷ்மணனின் இதயம் துணுக்குற்றது. சீதையிடம் கூறினான், "காதில் நாராசமாய் விழும் இக்கடுஞ்சொற்களை என்னால் பொறுக்க முடியவில்லை. நீயோ எனக்கு தெய்வம். முறைதவறிப் பேசுவது பெண்களின் இயல்பு. அவர்கள் சலனபுத்தியுள்ளவர்கள்; கொடியவர்கள். வாய்ப்புக் கிடைத்தால் தருமநெறியிலிருந்து தவறிவிடுவார்கள். கருத்து வேற்றுமைகளையும், வீண்சண்டைகளையுமே உண்டாக்குவார்கள்." இவ்வாறு சொல்லிக்கொண்டு இலக்ஷ்மணன் ராமனை நோக்கி மெதுவாகச் சென்றான்.

## 6. சீதை சிறைப்படல்

இந்த சிறந்த வாய்ப்பினை எதிர்நோக்கி இருந்த ராவணன் தண்டமும் கமண்டலுவும் தரித்த ஒருசன்னியாசியின் தோற்றம் கொண்டு சீதையின் முன்பு வந்தான். சீதை சன்னியாசியை வலம் வந்து வணங்கி பழங்களையும், கந்தமூலங்களையும் தந்து உபசரித்தாள். அந்த சன்னியாசி, "ஏ பெண்ணே! நீ யார்? உன் கணவன் யார்? அரக்கர்கள் வாழும் இந்தக்காட்டில் நீ ஏன் வசிக்கிறாய்? இவற்றை எனக்குச் சொல். பிறகு நான் என் கதையை உனக்குக் கூறுகிறேன்." என்று உரைத்தான்.

அதற்கு சீதை, " நான் ராமனின் மனைவி. அவர் தசரத சக்ரவர்த்தியின் மூத்தகுமாரர். என்னை சீதை என்று அழைப்பார்கள். என்தந்தை ஜனக மஹாராஜா. தந்தையின் அனுமதி பெற்று 14 ஆண்டுகள் இக்காட்டில் தங்குவதற்காக வந்துள்ளார். இப்போது தாங்கள் யார் என்பதை அறிய விரும்புகிறேன் சொல்லுங்கள்.

சன்னியாசி கூறினர், "ராக்ஷஸர்களின் அரசனும், புலஸ்தியரின் பேரனுமான ராவணன் நான். குபேரனுக்கு மாற்றாந் தம்பி. உன்னை என்னுடைய நகரத்துக்குத் தூக்கிச் செல்லவே இங்கு வந்துள்ளேன். நானே உனக்கு ஏற்ற கணவன். துன்பம் மிகுந்த இந்த காட்டு வாழ்வை விட்டொழி. சாதாரண மனிதனிடம் கொண்டுள்ள காதலை விட்டுவிடு. முனிவனைப் போல வாழும் ராமன் உனக்கு என்ன சுகத்தைக் கொடுக்கப் போகிறன்."

சீதை அது கேட்டு, "இவ்வாறு நீ பேசினல் வீரமும் தீரமும் கொண்ட ராமன் உன்னை இவ்விடத்திலேயே கொன்று விடுவான்" என்று வெறுப்புடன் கூறினள். திடீரென எதிர் பாராதபடி ராவணன் சீதை நின்றிருந்த நிலப்பகுதியை நகங்களால் பெயர்த்தெடுத்து அத்துடன் அவளை தன் விமானத்தில் ஏற்றிக்கொண்டு வான வீதியில் பறந்தான்.

கழுகுகளின் அரசனை ஜடாயு இதைக் கண்ணுற்று வேகமாக மேலே எழும்பிபறந்துவந்து ராவணனின் போக்கைத் தடை செய்து அவனுடன் கடும் போர் புரிந்தான். ராவணன் சிவபெருமானல் கொடுக்கப்பட்ட சந்திரஹாசம் என்ற வாளால் ஜடாயுவின் இறக்கைகளை வெட்டி வீழ்த்தினன். ஜடாயு குற்றுயிருடன் நிலமிசை விழுந்தான்.

ஆகாய வெளியில் அலறிக்கொண்டு சீதை செல்லும்போது ஒரு மலையின் உச்சியில் ஐந்துகுரங்குகள் உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். தன் மேலாடையில் பாதியைக் கிழித்தெடுத்து அதில் தனது ஆபரணங்களை முடித்து அதை மலையின் மீது போட்டாள். இந்த குரங்குகள் தன் நிலையை அறிவிக்கும் என்று சீதை நினைத்து அவ்வாறு செய்தனள்.

ராவணன் கடல் தாண்டி இலங்கையுள் நுழைந்தான். சீதையை அரண்மனைக்கு அடுத்துள்ள அசோகவனத்தில் சிறை வைத்து அரக்கியர் சிலரைக் காவலுக்கும் வைத்தான்.

மாரீசனைக் கொன்ற ராமன் மிகமிக விரைவுடன் பாதையில் நடந்து வந்தான். கொஞ்ச தூரம் வந்ததுமே, எதிரில் இலக்ஷ்மணனைக் கண்டார். "ஏன் சீதையை தனியே விட்டு

இங்கு வந்தாய்?'' எனப் பதறிப்போய் கேட்டார். இலக்ஷ்மணன் சீதை சொன்ன கடுஞ்சொற்களை ஒப்புவித்தான். அதற்கு ராமன், ''தம்பீ நீ பெண்ணின் சொற்களை உண்மை எனக் கொண்டு அறிவில்லாத செயலைச் செய்து விட்டாயே.'' என வருந்தினார். பின்பு பர்ண சாலையை நோக்கி இருவரும் விரைந்தனர். அங்கு சீதையைக் காணாமல் ராமன் துயர் மிக்குற்று அழுது புலம்பினான். ராமனது இச்செயல் சாதாரண மக்களுக்கு அவர் இவ்வுலகியலில் பற்றுதல் கொண்டு நடப்பது போல் தோன்றும். உண்மை ஞானிகளுக்கு அவ்வாறு தோற்றாது.

## 7. ராமன் ஜடாயுவை சந்தித்தல்

காட்டில் எல்லா இடங்களிலும் ராமன் சீதையைத்தேடினான். காண முடியவில்லை. வழியில் ஜடாயுவைச் சந்தித்தான். பார்த்த அளவில் ராமன், ''இவன் ஒரு அரக்கன் சீதையை விழுங்கி விட்டு உட்கார்ந்திருக்கிறான். இவனை இப்போதே கொல்கிறேன்.'' எனப் புறப்பட்டான். அதற்கு முன் ஜடாயு, ''ராமா! என்னைக் கொல்லவேண்டாம். நான் ஜடாயு. சீதையைக் காப்பாற்ற நான் ராவணனுடன் போரிட்டேன். அவன் என் இறக்கைகளை வெட்டி வீழ்த்தி விட்டு சீதையை விமானத்தில் தென்திசை நோக்கி எடுத்துச் சென்று விட்டான். இதனைக் கேட்ட ராமன் மிகவும் வருந்தினான். ராமனின் முன்பே ஜடாயு காலகதி அடைந்தார். ராமன் ஜடாயுவின் இறுதிச் சடங்குகளை முடித்து வாழ்த்தினார். ஜடாயு முக்தி பெற்றார்.

## 8. கபந்தனின் விடுதலை

அதை விடுத்து வேறொரு காட்டிற்குச்சென்று ராமன் சீதையைத் தேடலானார். அங்கே ஆச்சரியமான உருவம் கொண்ட ஒரு ராக்ஷசனைக் கண்டார். அவனுடைய முகம் மார்பிற்கு நேரடியாக இருந்தது. கைகள் ஒருயோஜனை தூரம் நீண்டிருந்தன. ராமனும் இலக்ஷ்மணனும் அவனது கைகளுக்கிடையே அகப்பட்டுக் கொண்டனர். ராமன் அவனுடைய வலதுகையையும் இலக்ஷ்மணன் இடது கையையும் வெட்டி துண்டித்தனர்.

கபந்தன் கூறினான், " நீங்கள் யார்? விண்ணுலகக் கடவுளர்களா? "

ராமன், " நான் தசரத குமாரன் ராமன். இவன் என் தம்பி இலக்ஷ்மணன். நீ எங்களை உன்கைகளால் பிணைத்ததால் நாங்கள் அவற்றை வெட்டினோம். நீயார்? " என்று கேட்டார்.

கபந்தன் சொன்னான், " நீ ராமன் என்றால் நான் பாக்கியவான் ஆவேன். முன்காலத்தில் நான் ஒரு கந்தருவராஜன். என் இளமையிலும், அழகிலும் மிகவும் கர்வம் கொண்டிருந்தேன். அழகிய மங்கையருடன் உலக முழுதும் சுற்றி அலைந்து கொண்டிருந்தேன். பிரம்மா நான் செய்த தவப்பயனாக எனக்கு அழியாத நீண்ட வாழ்வு கொடுத்திருந்தார். முன்னொரு சமயம் அஷ்டவக்கிரர் என்ற முனிவரைக் கண்டு நான் ஏளனமாகச் சிரித்தேன். கோபமடைந்த அம்முனிவர் என்னைப் பார்த்து, " நீ ஒரு ராக்ஷஸனாகக் கடவாய் " என்று சாபமிட்டார். பின்பு மன்னிப்புக் கோரி விடுதலை கேட்டேன். அதற்கு அவர், " திரேதா யுகத்தில் ஹரியானவர் தசரத சக்கரவர்த்தியின் குமாரர் ராமனாக அவதரிப்பார். உனதுகரங்கள் அவரால் வெட்டப்படும். அப்பொழுது நீ சாபவிமோசன மடைந்து சுய உருவைப் பெறுவாய். " எனக் கூறிச்சென்றார்.

" ஒருசமயம் நான் இந்திரனுக்குப் பின்னே ஓடினேன். அவன் என் தலையில் அடித்தான். அதன் விளைவால் என் தலை மார்பிற்குள் விழுந்தது. கால்கள் இரண்டும் இரு பக்கங்களிலும் புகுந்து கொண்டன வஜ்ஜிராயுதத்தால் அடிபட்டபோதிலும் நான்முகனின் வரத்தால் நான் மரண மடையவில்லை. தேவர்கள் என்மீது இரக்கம் கொண்டு, " இவன் எப்படி உணவு உட்கொண்டு வாழ்வான்? " என்று இந்திரனைக்கேட்டனர். அதற்கு இந்திரன், " இவனது வாய் மார்புக்கு நேராகவும் கைகள் ஒரு யோஜனை தூரம் நீண்டும் இருக்கும் எனச் சொன்னான்.

சுய உருவடைந்த கபந்தன் ஸ்ரீ ராமபிரானைப் பலவாறு துதித்தான். ராமன் கபந்தனைப் பார்த்து, " ஓ தேவ கந்தர்வனே! நான் உனது பிரார்த்தனைகளைக் கண்டு மிகவும் மகிழ்கிறேன். நீ உன் இருப்பிடம் செல்வாய். " என்று அனுமதி வழங்கினார்.

## 9 சபரியைச் சந்தித்தல்

தனது கந்தருவ உலகிற்குச் செல்வதற்கு முன்னால் கபத்தன் ஸ்ரீ ராமனை வணங்கி " சுவாமீ சற்று தூரத்தில் சபரியின் ஆச்ரமம் உள்ளது. அவள் உங்கள் வருகையை எதிர் நோக்கியபடி இருக்கிருள். அவளிடம் செல்லுங்கள். சீதையைப் பற்றிய எல்லா விபரங்களையும் கூறுவாள்," என்று வழி காட்டிவிட்டு தன் இருப்பிடம் சென்ருன்.

ராமனும் இலக்ஷ்மணனும் ஒரு அழகிய காட்டைக் கடந்து சபரியின் ஆச்ரமத்தை அடைந்தனர்.

இருவரையும் கண்ட அளவில் சபரி பெருமகிழ்ச்சி அடைந்தாள். தன் இருக்கையிலிருந்து வணங்கியவாறு எழுந்து நின்ருள். கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருக ராமனின் பாதங்களில் நமஸ்காரம் செய்தாள். அவர்களை வரவேற்று தன் ஆசனத்தில் அமரச் செய்தாள். இருவரின் பாதங்களையும் நன்கு அலம்பி அந்த நீரைத் தன் தலையின் மீது தெளித்துக் கொண்டாள். முறைப்படி வழிபாடு செய்தாள். மலர்களைக் கொண்டு பாதங்களில் பூஜை செய்தாள். பிறகு தான் சேமித்து வைத்திருந்த சுவைமிக்க இனிய பழங்களை அவர்கள் உண்பதற்கு ஈந்தாள்.

சபரி:– "பூஜனீய சுவாமி!, என் குருநாதர்கள் இந்த ஆச்ரமத்தில்வசித்தனர். நான் இங்கேயே தங்கி அவர்களுக்குச் சேவைசெய்தேன்.என்னை இங்கேயேதங்குமாறு அவர்கள்சொன்ஞர்கள் அவர்கள் என்னிடம் சொன்னதாவது:– " ஸ்ரீ ராமன் இங்கு வருவார். அவர் வரும்வரை தியானத்தில் ஈடுபட்டுஇரு. ராமனைக்கண்ட பிறகு இவ்வுடலை எரித்த வண்ணம் முக்தி பெறுவாய்." எனவே சுவாமி என் குருநாதர் கூறியபடி தங்கள் ஸ்வரூபத்தை தியானிக்கிறேன்."

ராமன் சபரியைப் பார்த்து, " புண்யவதியே ! தவவாழ்க்கையில் நேரிடும் எல்லா விதமான இடர்ப்பாடுகளையும் நீ தாண்டிவிட்டாயா? கோபத்திற்கு ஆளாகாமல் இருக்கிருயா? ஆஹார நியமங்களை அநுசரிக்கிருயா? அமைதியையும் ஆனந்தத்தையும் அநுபவிக்கிருயா? " என்று கேட்டார்.

முதுமை அடைந்த சபரி கூறினள். ''சுவாமி! நான்இன்று உங்களைக் கண்ணாரக் கண்டேன். இந்த காட்சி என் குருநாதர்களுக்குக் கூடகிடைக்கப் பெறுதது. என்தவம் இன்றே பூர்த்தியானது. பிறவி எடுத்ததின் பயனை அடைந்தேன். தங்கள் அருளால் ஸாயுஜ்ய பதவியை நிச்சயமாக அடையப்போகிறேன் அருள் புரியுங்கள்.''

ராமன் சொன்னர்,''தியானம் ஒன்றினல் மட்டுமே என்னை தரிசிக்க முடியும். அன்றி வேதங்கள் ஓதுவதாலும், யாகங்கள் செய்வதாலும் என்னைக் காணவியலாது. ஆண், பெண், ஜாதி போன்ற உயர்வு தாழ்வுகளை நான் மதிப்பதில்லை. எனது வழிபாட்டுக்கு உண்மை அன்பும் தியானமுமே வேண்டியது.

என் அன்பிற்குரியவளே! உண்மையான பக்தி என்பால் உண்டாவதற்கான வழியைக் கூறுகிறேன், கேட்பாயாக. அதற்கு முதன்மையாக மஹான்களின் தொடர்பு அல்லது ஸத்ஸங்கம் அவசியம், இரண்டாவதாக எனது சரிதத்தையும், லீலைகளையும் பாடவும் கேட்கவும வேண்டும. மூன்றாவதாக எனது குணாதிசயங்களை கானம் செய்ய வேண்டும் நான்காவதாக நான் சொன்னவற்றை எல்லோருக்கும் வெளிப்படுத்த வேண்டும், அத்துடன் தந்திரம், நேர்மையின்மை, வெளிவேஷம் இவை இல்லாமல் தன்குருவை நான் என்றே கருதிச் சேவை செய்யவேண்டும். ஐந்தாவதாக தரும சிந்தனையும் யமநியமங்களை அநுஷ்டிப்பதையும் கைக்கொள்ள வேண்டும. ஆறுவதாக என்னைய விடாமல் வழிபடுதல், ஏழாவதாக என் மந்திரங்களை சொல்லி தியானம் செய்தல் இவ்வாறு என்னை வழிபடும் பக்தர்கள் என் உயிரை விடமேலானவர்கள. அதோடு இந்த ஏழாவது படியில் பற்றின்மை (Nan-attachment) உளளும் புறமும செயல்படும் பொறிபுலன்களை அடக்குதல், இவையும் சேரும். எட்டு ஒன்பதாம் படிகளில் எனது இயல்பை தியானித்தலும் முடிவில் என் மயமாதலுமாகும். இவையே ஒன்பது விதமான பக்திமார்கப் படிகளாகும்.

இவற்றை நன்கு அநுஷ்டிப்பதால் உண்மையான பக்தி உண்டாகிறது. இதில் எவனொருவன மேம்பாடு அடைகிறானோ, அவன் என்னையே இறுதியில் வந்து அடைகிறான். என்னை

எவன் உணர்கிருனே அவனது உயிர் இவ்வாழ்விலேயே முக்தி அடைந்து விடும். பக்தியின் மூலம் முக்தி என்பது நன்கு நிரூபிக்கப்பட்ட உண்மை. முதல் படியான ஸத்ஸங்கம் அல்லது மஹான்களின் சேர்க்கையை ஒருவன் தொடர்ந்து பெறுவானுகில் சிறிது சிறிதாக மற்ற எட்டு படிகளையும் பெற்று முக்தி அடைகிருன். இதில் சந்தேஹமே இல்லை.

'' உனக்கு என்னிடம் உண்மையான பக்தி. ஆகையால் உன்னிடம் வந்தேன். என்னை உள்ளபடி தரிசனம் செய்ததால் உனக்கு முக்தி உண்டு. இதில் எள்ளளவும் சந்தேகமில்லை. என் அன்பான சீதை எங்கே அவளை யார் எடுத்துச் சென்றது என்பதைக் கூறுவாயாக''

ராமனது கேள்விக்கு பின்வருமாறு சபரி பதிலளித்தாள். '' என் சுவாமி தங்களுக்கோ எல்லாம் தெரியும் ஸர்வக்ஞரான தாங்கள் உலகின் போக்கை அநுசரித்து ஒன்றும் தெரியாத மனிதரைப்போல் என்னிடம் கேட்கின்றீர். இதோ சீதையைப் பற்றிக் கூறுகிறேன். ராவணன் சீதையைத் தூக்கிச் சென்று உள்ளான். அவள் இப்போது இலங்கையில் இருக்கிருள். அருகாமையில் அழகிய பம்பா ஏரி உள்ளது. அதனை அடுத்து ரிசய மூகம் என்ற மலை ஒன்று இருக்கிறது. சுக்ரீவன மிகவும் பயந்தவனுக தன் நான்கு ஆலோசகர்களுடன் அங்கே வசிக்கிருன். தன் தமயன் வாலிக்கு பயந்து அங்கே வசிக்கிருன். மதங்க முனிவரின் சாபம் காரணமாக வாலி அவ்விடம் வர மாட்டான். வாலி அங்கே வந்தால் உடனே மாண்டு போவான் வாலி ஒரு சமயம் துந்துபி என்ற அசுரனைக் கொனறு அவன் உடலை அங்கே வீசி எறிந்தான். அவன் வாய்வழி இரத்தம் பெருகி அங்கே விழுந்தது. ஆச்ரமத்தில் இருநத முனிவர் வெகுண்டு சாபத்தை வாலிக்கு அளித்தார்.

'' சுவாமி! தாங்கள் அங்கு சென்று அந்த சுக்ரீவனுடன் நட்புக் கொளளுங்கள். உங்களுக்காக அவன் எதையும் செய்வான். எல்லையற்ற வீரமும், தைரியமும கொண்டவன் அவன். இப்பொழுது தங்கள் முன்னிலையில் நான் தீக்குளிக்கிறேன்.'' என்ருள்.

ஸ்ரீ ராமபிரானின் சன்னிதியில் நெருப்பைமூட்டி அதற்குள் நுழைந்தாள் ராமபக்தை சபரி. தீயின் ஜ்வாலைக்குள்ளே இருந்து பேரொளியுடன் ஒரு தெய்வீக உருவம் எல்லா ஆபரணங்களுடன் அவ்விடத்தைப் பிரகாசப் படுத்திக் கொண்டு பெரும் புகழுடன் ஸ்ரீ ராமபிரான் அருளால் பிறவா நிலையான பேற்றை எய்தினாள். அவள் தாழ்ந்த பிறப்பினளாய் இருந்தும் ஸ்ரீ ராமனின் அருளால் வீட்டுப் பேற்றினை அடைந்தாள். தெய்வீக அருள் கிடைத்துவிட்டால் எதைத்தான் அடையமுடியாது? ராமபக்தி பிறவா ஆனந்தம் அளிப்பதாகும். ஆகையால் அவன் நாமத்தை ஜெபியுங்கள். அவன் புகழைப் பாடுங்கள். அவன் சேவடிகளுக்குத் தொண்டு செய்யுங்கள். சிவபெருமானின் இதயத்தில் பிரதிபலிக்கும் நீல வண்ண ராமனை உங்கள் இதயத்தில் கோயில் கொள்ளச் செய்யுங்கள்.

## 4. கிஷ்கிந்தா காண்டம்.

### 1. சுக்ரீவனுடன் நட்பு.

குமுத மலர்களும் தாமரைகளும் எங்கு பார்த்தாலும் பூத்திருக்கும் இயற்கைவளம் கொழிக்கும் பம்பை ஏரிக்கரையின் வழியாக ராமபிரானும் இலக்ஷ்மணனும் மெதுவாக நடந்து சென்றார்கள். சீதையின் பிரிவாற்றாமையால் ராமன் அழுது புலம்பிக் கொண்டே சென்றான். தனக்குள் புலம்பினான், "ஜனக மன்னர் கேட்டால் சீதையைப்பற்றி நான் என்னசொல்வேன். என்தாய் கௌசல்யை தன் மருமகள் சுகமா என்று கேட்டால் என்னபதில் கூறுவேன்" என்று இவ்வாறு எண்ணியபடி நடந்து சென்றார்.

இளைய பெருமான் ராமனை சமாதானம் செய்யும் வகையில் பின்வருமாறு கூறினான்.

"யாவும் அறியும் அண்ணா! மனதை சிதற விடாதீர்கள். துக்கத்திற்கு இடமளிக்காதீர்கள். நம்பிக்கை மிகவும் சக்தி வாய்ந்தது. பூரண நம்பிக்கை கொண்டவனுக்கு இவ்வுலகில் அடைய முடியாதது ஒன்றுமே இல்லை. நாம் நிச்சயமாக சீதையைத் திரும்ப அடைவோம். சுவாமி நம்புங்கள். துக்கம் கொள்ளாதீர்கள்."

தம்பியின் தைரிய மூட்டும் சொற்களைக் கேட்டு ராமபிரான் ஒருவாறு சமாதான மடைந்தார். பின்பு பம்பை ஏரியின் நீரை கொஞ்சம் அருந்தினார். இது அவரது களைப்பைச் சற்று போக்கியது. பிறகு இருவரும் ரிசியமூக மலையின் ஓரமாகச் செல்லும் பாதையில் நடந்து சென்றனர். இவர்களைக் கண்ட சுக்ரீவனின் மனதில் ஐயம் எழுந்தது.

சுக்ரீவன் அநுமாரிடம், "இ ந் த இ ர ண் டு வீரர்கள் யார்? ஒரு பிரம்மச்சாரியின் உருவம் பூண்டு சென்று அறிந்து வா." அவர்கள் வாலியால் அநுப்பப்பட்டவர்களா? அவர்கள் நோக்கம் என்ன என்பதையும் நன்கு அறிந்து என் உயிருக்கு ஆபத்து என்று தெரிந்தால் கை வீசி அடையாளம் காட்டு. உண்மையை ஆராய்ந்து தெரிந்துகொள்" என்று சொன்னான்.

அநுமார் நேராக ராமன் முன்பு தோன்றி அவரதுதிருவடிகளில் விழுந்து வணங்கினார். பின்பு கூறலானார், "நீங்கள் காட்டின் இப்பகுதியில் எதற்காக வருகிறீர்கள்? இங்கு சஞ்சாரம் செய்வதன் நோக்கம் என்ன? வானர ராஜனாகிய சுக்ரீவனின் மந்திரி நான். என் பெயர் அநுமான்; வாயு பகவானின் புதல்வன். சுக்ரீவன் துயரத்தில் மூழ்கியுள்ளான். அவன் வாலியின் தம்பி. வாலியால் ஏமாற்றப்பட்டவன். அவன் மனைவி ருமாவை வாலி அபஹரித்துக் கொண்டான். நாட்டை விட்டும் துரத்தி விட்டான்."

ஸ்ரீராமபிரான் அநுமாரிடம், "வீர அநுமானே! நான் தசரத சக்ரவர்த்தியின் மகன் ராமன். இவன் என் தம்பி இலக்ஷ்மணன். என் தந்தையின் கட்டளையை நிறைவேற்ற தண்டகாருண்யத்தில் சீதையுடன்வந்து வசித்து வந்தோம் அங்கு சில அரக்கர்கள் என் மனைவியைக் கடத்திச் சென்று விட்டனர். அவளைத்தேடிக் கொண்டு வருகிறோம்" என்றியம்பினார்.

அநுமான் அதற்கு, "சுக்ரீவன் வாலிக்குப் பயந்துகொண்டு இப்பொழுது ரிசியமுக பர்வதத்தில் வசிக்கிறார். சுக்ரீவனுடன் தாங்கள் நட்புக் கொள்வது உசிதமாகும். சீதையை எடுத்துச் சென்ற அரக்கனை கொல்வதில் சுக்ரீவன் உதவி புரிவார். இது உங்கள் விருப்பமானால் நாம் இப்பொழுது அங்கே செல்வோம.

அது கேட்ட ராமன், "வீரமும் மதி நுட்பமும் உள்ள அநுமானே! சுக்ரீவனுடன் நட்பு கொள்ளவே நான் இங்கே வந்திருக்கிறேன். என் நண்பனுக்காக எந்தக் காரியத்தையும் நான் செய்யத்தயார்" எனக் கூறினார்.

பிறகு அநுமான் தனது சுயஉருவம் எடுத்துக் கொண்டு ராமனையும், இலக்ஷ்மணனையும் தன்தோளின்மீது அமரச்செய்து நொடிப்பொழுதில் சுக்ரீவனின் இருப்பிடம் அடைந்தார். அங்கு அவ்விருவரையும் ஓர் இடத்தில் இருக்கச்செய்து விட்டு நேராக சுக்ரீவனிடம் சென்று, "அரசே! பயத்தை விட்டு விடுங்கள். ராமனும் இலக்ஷ்மணனும் வந்துள்ளனர். உம்முடன் ராமன் சினேகம் செய்து கொள்வதற்கான ஏற்பாடு செய்துள்ளேன். தீயைவளர்த்து அக்கினி சாட்சியாக நீங்கள் இருவரும் நட்புக்கொள்ளுங்கள்" எனக் கூறி வேண்டினார். சுக்ரீவன் மிக்கமகிழ்ச்சியுடன் ஸ்ரீராமனைக் காணவந்தான். இலக்ஷ்மணன் சுக்ரீவனுக்கு ராமனின் வரலாறு முழுவதும் எடுத்துரைத்தான். சுக்ரீவன் ராமனிடம், "சுவாமி! நான்சீதையை எப்படியாவது தேடித்தருகிறேன். விரோதியைக் கொல்வதற்கான உதவியைச் செய்கிறேன். நிற்க, அன்பரே! நான் ஒரு விஷயம் உம்மிடம் கூறவிரும்புகிறேன். சில நாட்களுக்கு முன்பு இம்மலையின் உச்சியில் என் மந்திரிகளுடன் நான் உட்கார்ந்துகொண்டிருந்தேன். ஓர் அழகியபெண்ணை ஆகாய மார்க்கமாக எவனோ தூக்கிச்செல்வதைக் கண்டேன். அவள் அழுத வண்ணம் 'ராம ராம' என்று அலறினாள். மலை மீதிருந்த எங்களைக் கண்டதும், தனது ஆபரணங்களை துணியில் முடித்து எங்களிடம் போட்டாள். அவற்றை நீங்கள் காண்பீர்களாக" எனக் கூறி ஒரு துணிமுடிப்பைக் கொண்டு வந்து ராமனிடம் கொடுத்தான்.

ஸ்ரீராமன் அம் முடிப்பை அவிழ்த்தான். சீதையின் அணிகலன்களைக் கண்டான். அவற்றைத் தன் மார்போடு பொருந்தி வைத்துக் கொண்டு' சீதாசீதா' என்று அலறி அழுதார். பிறகு வெளியே சென்றிருந்த இலக்ஷ்மணன் அங்கு வர அவனிடம் நகைகளைக் காட்டி, "இலக்ஷ்மணா! இதில் உனது அண்ணியின் ஆபரணங்கள் ஏதாவது உள்ளனவா என்று பார்" எனக் காட்டினார்.

இல்க்ஷ்மணன் அதைப்பார்த்து விட்டு '' அண்ணா! குண்டலங்களும், தங்க மாலைகளும் கங்கணங்களும் யாருடையவை என எனக்குத் தெரியவில்லை. ஆனால்அண்ணியின் கால் கொலுசுகள் மட்டும் எனக்குநன்றாக அடையாளம் தெரிகிறது. ஏனென்றால் தினமும் அண்ணியின் பாதங்களையே நான்கண்டு வணங்கியுள்ளேன்'' என்றான்.

அதன்பிறகு இலக்ஷ்மணன், ''அண்ணா! கவலை வேண்டாம் சீதையைத் தூக்கிச் சென்ற அரக்கன் சுக்ரீவன் உதவியால் கொல்லப்பட்டு ஜானகியைத் தாங்கள் வெகு விரைவில் அடைவீர்கள். அமைதியாக இருங்கள்'' என்றான்.

சுக்ரீவனும், ''ராம! நான் நிச்சயம் அந்த ராவணனைக் கொன்று சீதையை தங்களிடம் மீட்டிக்கொடுக்கிறேன்'' என்று உறுதிமொழி கூறினான்.

அநுமார் தீயை வளர்த்தார். ராமனும் சுக்ரீவனும் தத்தம் வாக்குறுதிகளைக் கூறிக்கொண்டு அவ்வக்கினியின் முன்பு ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டனர். பின்பு சுக்ரீவன் ராமனின் பக்கத்தில் அமர்ந்து தனது வரலாற்றைக் கூறலானான்.

''நண்ப! வாலி எனக்குச் செய்துள்ள தீங்கினைக் கேட்பீராக. வாலி என் அண்ணன். நான் அவனைப் பெருமதிப்புடன் நடத்திவந்தேன். பரம்பரையான இந்த வானர ராஜ்ஜியம் முழுவதையும் அவனே ஆண்டு வந்தான். நான் ஒரு வேலைக்காரனைப்போல அவனிட்ட பணிகளைச் செய்து வந்தேன். மாயாவி என்ற ஒரு மிகவும் கொடிய அரக்கன் ஒருவன் இருந்தான். அவன் துந்துபி என்ற தானவனின் மகன். வாலி ஏற்கனவே ஒரு பெண்ணின் காரணமாக அவனோடு பகைமை கொண்டிருந்தான். ஓர் இரவு மாயாவி கிஷ்கிந்தை நகரின் கோட்டை வாயிலை அடைந்து அட்டகாசம் செய்து வாலியைப் போருக்கு அழைத்தான். கடுங்கோபம் கொண்ட வாலி நகருக்கு வெளியே வந்து அவ்வரக்கனைப் பின் தொடர்ந்தான். மாயாவி பயந்து ஓடலானான். நானும் வாலியும் அவன் பின்னாலே ஓடினோம். அந்த அரக்கன் ஓர் இருண்ட குகைக்குள் ஓடி மறைந்தான்.

வாலி என்னிடம், "சுக்ரீவா, ஜாக்கிரதையுடன் இந்தகுகையின் வாயிலில் நின்றுகொண்டிரு. நான் உள்ளே சென்று அந்த அரக்கனைக் கொன்று விட்டுத் திரும்புகிறேன்" எனக்கூறி விட்டுக் கடுங்கோபத்துடன் குகைக்குள்ளே பாய்ந்து சென்றான். சென்ற வாலி மீண்டும் வரவே இல்லை. ஓராண்டு கழிந்தது. ஒருநாள் குகைக்குள்ளே இருந்து வெதுவெதுப்பான இரத்த வெள்ளம் வெளிப்பட்டது. அசுரனின் கூக்குரல் எனக்கு கேட்டது; ஆனால் வாலியின் குரல் கேட்கவே இல்லை. எனவே வாலி அசுரனால் கொல்லப்பட்டிருப்பான் என்று எண்ணினேன்.

இந்த அறிகுறிகளின் காரணமாக நான் அந்த குகை வாயிலை நன்றாக மூடி விட்டேன். அண்ணனுக்குச் செய்யவேண்டிய கடமைகளை முடித்துக்கொண்டு, கிஷ்கிந்தை திரும்பினேன். வாலி பற்றிய இவ்விபரங்களை யாருக்கும் தெரியாமல் இரகசியமாக வைத்திருந்தேன். பிறகு எப்படியோ மந்திரிகளுக்கு இவ்விஷயம் தெரிய வந்தது. அவர்கள் என்னை நான் விரும்பாவிடினும் மிகவும் வற்புறுத்தி கிஷ்கிந்தைக்கு மன்னனாக்கினார்கள்."

கொஞ்சகாலம் ராஜ்யத்தை ஆண்டு வந்தேன். தன் பகைவனைக் கொன்று விட்டு வாலி திரும்பி வந்தான். நான் அரசபதவியில்இருக்கக்கண்டு கடுங்கோபம்கொண்டான். கடுஞ்சொற்களைக் கூறி என்னை மிகவும் ஏசினான். அவனை தக்க மரியாதையுடன் வரவேற்றேன். அரண்மனையில் நுழைந்ததும் என் தலையில் சூடி இருந்த கிரீடத்தைஎடுத்து அவனது காலயிடில் வைத்தேன். வணங்கி நின்றேன். ஆயினும் அவனுடைய சினம் தணியவில்லை. மகிழ்ச்சியான முகக்குறியையே காட்டவில்லை."

"நடந்தவற்றை எல்லாம் ஒன்று விடாமல் விளக்கிக் கூறினேன். அப்படியிருந்தும் அவன் என்னை மன்னிக்கவில்லை. "அண்ணா! நீ எனது மதிப்பிற்குரிய மன்னனே. நான் உன் சேவகன். முன்பு போல நாம் ஒற்றுமையாக வாழ்வோம். உம்முடைய ராஜ்யம் என்னிடம் மந்திரிகளின் வற்புறுத்தலால் இதுகாறும் ஒப்புவிக்கப்பட்டது. இது தற்காலிகமே. இப்போது தாங்கள் நான்செய்தது தவறுஎன்றால் அன்புடன் மன்னித்து இதை ஏற்றுக்கொள்ளவேண்டும். நாடு மன்னன் இல்லாவிடில் கெட்டு [illegible] எனவேதான் அமைதியையும், ஒழுங்கை

யும் நிலைநாட்டவே அரசினை ஏற்றேன்'' என்று பணிவுடன் சொன்னேன்.

''வாலியோ இதை முற்றிலும் பொருட்படுத்தாமல் என்னைக் கண்டபடி திட்டினன். பிரபுக்கள், மந்திரிகள் எவ்வளவு சொல்லியும் கேளாமல் அவர்கள் முன்னிலையில் கண்டபடி இழிவாகப் பேசினன்.

வாலி மந்திரிகளிடம், ''நான் அந்த மாயாவியைப்பின் தொடர்ந்து குகைக்குள் சென்றேன். சுக்ரீவனை குகை வாயிலில் வரும் வரை காத்திருக்கச் சொன்னேன். மாயாவியை அங்கு தேடிக்கண்டுபிடிக்க எனக்கு ஓராண்டுபிடித்தது. அவனை இறுதியில் கொன்றுவிட்டு வெளியே வரலானேன். சுக்ரீவனைப் பெருங்கூச்சலிட்டு அழைத்தேன். யாதொரு பதிலும் இல்லை, குகை வாயில் பெரிய பாறையால் மூடப்பட்டிருந்தது. என் இதயம் வெடித்து விடும்போல தோன்றியது. அப்பாறையின் மீது பலம் கொண்ட மட்டும் பல தடவைகள் காலால் எத்தினேன். பாறை திறந்து கொண்டது. வெளியேறினேன். இந்த சுக்ரீவன் சகோதர அன்புப்பிணைப்பை அறுத்துக்கொண்டுவிட்டான். குகைக்குள் என்னை மூடியதிலிருந்து இது வெளியாகிறதல்லவா!'' என்று மனம் வருந்தியபடி சொன்னன்.

''என் அன்புக்குரிய ராம, அதன்பின் என் மீதுள்ள வைரம் தணியாம் உடுத்திய உடையுடன் என்னை நாட்டைவிட்டு துரத்திவிட்டான். அத்துடன் என் மனைவி ருமாவையும் தானேவைத்துக்கொண்டான் அவனுக்குப் பயந்து நான் இவ்வுலகம் முழுவதும் சுற்றித் திரிந்தேன். என் மனைவியை இழந்ததால் தாங்க முடியாத துயரம் அடைந்தேன். கடைசியாக இந்த ரிசிய முக மலையில் வந்து தங்கினேன். மதங்க முனிவரின் சாபம் காரணமாக வாலிஇவ்விடம் வரமாட்டான். நண்பா, வாலிக்கும் எனக்குமிடையே நேர்ந்தபகைமைக்கு காரணம் முழுவதையும் உண்மையாகக் கூறிவிட்டேன். நான் ஒரு பாவமும் அறியாதவன். எனக்கு ஆதரவு அளித்து என் அச்சத்தை நீர்தான் போக்க வேண்டும்.''

ஸ்ரீ ராமன் சொன்னர், ''நண்ப, உன்மனைவியை அபகரித்துக் கெடுத்த உன் பகைவனை சீக்கிரமாகவே கொன்று ஒழித்து

வாலி என்னிடம், ''சுக்ரீவா, ஜாக்கிரதையுடன் இந்தகுகையின் வாயிலில் நின்றுகொண்டிரு. நான் உள்ளே சென்று அந்த அரக்கனைக் கொன்று விட்டுத் திரும்புகிறேன்'' எனக்கூறி விட்டுக் கடுங்கோபத்துடன் குகைக்குள்ளே பாய்ந்து சென்றான். சென்ற வாலி மீண்டும் வரவே இல்லை. ஓராண்டு கழிந்தது. ஒருநாள் குகைக்குள்ளே இருந்து வெதுவெதுப்பான இரத்த வெள்ளம் வெளிப்பட்டது. அசுரனின் கூக்குரல் எனக்கு கேட்டது; ஆனால் வாலியின் குரல் கேட்கவே இல்லை. எனவே வாலி அசுரனால் கொல்லப்பட்டிருப்பான் என்று எண்ணினேன்.

இந்த அறிகுறிகளின் காரணமாக நான் அந்த குகை வாயிலை நன்றாக மூடி விட்டேன். அண்ணனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை முடித்துக்கொண்டு, கிஷ்கிந்தை திரும்பினேன். வாலி பற்றிய இவ்விபரங்களை யாருக்கும் தெரியாமல் இரகசியமாக வைத்திருந்தேன். பிறகு எப்படியோ மந்திரிகளுக்கு இவ்விஷயம் தெரிய வந்தது. அவர்கள் என்னை நான் விரும்பாவிடினும் மிகவும் வற்புறுத்தி கிஷ்கிந்தைக்கு மன்னனாக்கினார்கள்.''

கொஞ்சகாலம் ராஜ்யத்தை ஆண்டு வந்தேன். தன் பகைவனைக் கொன்று விட்டு வாலி திரும்பி வந்தான். நான் அரசபதவியில்இருக்கக்கண்டு கடுங்கோபம்கொண்டான். கடுஞ்சொற்களைக் கூறி என்னை மிகவும் ஏசினான். அவனை தக்க மரியாதையுடன் வரவேற்றேன். அரண்மனையில் நுழைந்ததும் என் தலையில் சூடி இருந்த கிரீடத்தைஎடுத்து அவனது காலயிடில் வைத்தேன். வணங்கி நின்றேன். ஆயினும் அவனுடைய சினம் தணியவில்லை. மகிழ்ச்சியான முகக்குறியையே காட்டவில்லை.''

''நடந்தவற்றை எல்லாம் ஒன்று விடாமல் விளக்கிக் கூறினேன். அப்படியிருந்தும் அவன் என்னை மன்னிக்கவில்லை. 'அண்ணா! நீ எனது மதிப்பிற்குரிய மன்னனே. நான் உன் சேவகன். முன்பு போல நாம் ஒற்றுமையாக வாழ்வோம். உம்முடைய ராஜ்யம் என்னிடம் மந்திரிகளின் வற்புறுத்தலால் இது காரும் ஒப்புவிக்கப்பட்டது. இது தற்காலிகமே. இப்போது தாங்கள் நான்செய்தது தவறுஎனில் அன்புடன் மன்னித்து இதை ஏற்றுக்கொள்ளவேண்டும். நாடு மன்னன் இல்லாவிடில் கெட்டு அழிந்து விடுமல்லவா? எனவேதான் அமைதியையும், ஒழுங்கை

யும் நிலைநாட்டவே அரசினை ஏற்றேன்'' என்று பணிவுடன் சொன்னேன்.

''வாலியோ இதை முற்றிலும் பொருட்படுத்தாமல் என்னைக் கண்டபடி திட்டினான். பிரபுக்கள், மந்திரிகள் எவ்வளவு சொல்லியும் கேளாமல் அவர்கள் முன்னிலையில் கண்டபடி இழிவாகப் பேசினான்.

வாலி மந்திரிகளிடம், ''நான் அந்த மாயாவியைப்பின் தொடர்ந்து குகைக்குள் சென்றேன். சுக்ரீவனை குகை வாயிலில் வரும் வரை காத்திருக்கச் சொன்னேன். மாயாவியை அங்கு தேடிக்கண்டுபிடிக்க எனக்கு ஓராண்டுபிடித்தது. அவனை இறுதியில் கொன்றுவிட்டு வெளியே வரலானேன். சுக்ரீவனைப் பெருங்கூச்சலிட்டு அழைத்தேன். யாதொரு பதிலும் இல்லை. குகை வாயில் பெரிய பாறையால் மூடப்பட்டிருந்தது. என் இதயம் வெடித்து விடும்போல தோன்றியது. அப்பாறையின் மீது பலம் கொண்ட மட்டும் பல தடவைகள் காலால் எத்தினேன். பாறை திறந்து கொண்டது. வெளியேறினேன். இந்த சுக்ரீவன் சகோதர அன்புப்பிணைப்பை அறுத்துக்கொண்டுவிட்டான். குகைக்குள் என்னை மூடியதிலிருந்து இது வெளியாகிறதல்லவா!'' என்று மனம் வருந்தியபடி சொன்னான்.

''என் அன்புக்குரிய ராம, அதன்பின் என் மீதுள்ள வைரம் தணியாம் உடுத்திய உடையுடன் என்னை நாட்டைவிட்டு துரத்திவிட்டான். அத்துடன் என் மனைவி ருமாவையும் தானேவைத்துக்கொண்டான் அவனுக்குப் பயந்து நான் இவ்வுலகம் முழுவதும் சுற்றித் திரிந்தேன். என் மனைவியை இழந்ததால் தாங்க முடியாத துயரம் அடைந்தேன். கடைசியாக இந்த ரிசிய முக மலையில் வந்து தங்கினேன். மதங்க முனிவரின் சாபம் காரணமாக வாலிஇவ்விடம் வரமாட்டான். நண்பா, வாலிக்கும் எனக்குமிடையே நேர்ந்தபகைமைக்கு காரணம் முழுவதையும் உண்மையாகக் கூறிவிட்டேன். நான் ஒரு பாவமும் அறியாதவன். எனக்கு ஆதரவு அளித்து என் அச்சத்தை நீர்தான் போக்க வேண்டும்.''

ஸ்ரீ ராமன் சொன்னார், ''நண்ப, உன்மனைவியை அபகரித்துக் கெடுத்த உன் பகைவனை சீக்கிரமாகவே கொன்று ஒழித்து

விடுகிறேன். அஞ்சாதே நீ உன் நாட்டையும் மனைவியையும் திரும்பப் பெறுவாய். இது உறுதி.''

## 2. வாலி வதம்

ஸ்ரீ ராமன் சுக்ரீவனைப் பார்த்து நீ சென்று வாலியை உன்னுடன் போரிட அழைப்பாயாக என்றனன். சுக்ரீவனும் உடனே கிஷ்கிந்தையின் கோட்டைவாயிலை அடைந்து சிங்கம்கர்ஜிப்பது போல பெருங்கூச்சலிட்டு வாலியைப் போருக்கு அழைத்தான். இதைக்கேட்டு வாலி வெளியே வந்தான். வாலியின் மார்பின் மீது சுக்ரீவன் தன் முஷ்டியால் ஒரு பலமான குத்து விட்டான். அதேபோல வாலியும் சுக்ரீவனின் மார்பில் தன் கையால் பலமாகத் தாக்கினான். சுக்ரீவன் அந்தத் தாக்குதலால் இரத்தம் கக்கியபடி அவ்விடம் விட்டு வேகமாக ஓடி விட்டான். ராமனிடம் வந்து கூறினான். ''ராமா நீர் வாலியைக் கொன்று எனக்குத் துணைபுரிவதாகக் கூறினீர்கள். ஏன்இப்படி என்னைப்புறக்கணித்து விட்டீர்? வாலியுடன் போர் புரியுமாறு நீர்தானே என்னைத் தூண்டினீர். உமது நடத்தையை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லையே.''

ராமன் சுக்ரீவனை தேற்றிச் சமாதனப்படுத்திக் கூறினார். ''அன்புள்ள என் நண்ப, நான்ஏன் அம்பை வாலியின் மீது ஏவவில்லை தெரியுமா? நீயும்வாலியும் எல்லாவகையிலும் ஒரேதோற்றம் கொண்டு காணப்பட்டீர்கள். யார் வாலி? யார் சுக்ரீவன் என்றே என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆகையால் தான் நான் அம்பைப் போடவில்லை. இப்பொழுது மறுபடியும் நீ சென்று வாலியுடன் போர் புரி. உனக்கு ஓர் அடையாளம் தருகிறேன்.'' இவ்வாறு கூறிய ராமன் லக்ஷ்மணனிடம், ஒரு மலர் மாலையைச் சுக்ரீவன் கழுத்தில் அணிவிக்குமாறு பணித்தான். லக்ஷ்மணனும் அவ்வாறே செய்தனன்.

மாலை அணியப்பெற்றதும் சுக்ரீவன் மறுபடியும்கிஷ்கிந்தை சென்று சிங்கப் பேரொலி எழுப்பி வாலியை மறுபடியும் சண்டைக்கு அழைத்தான். இதைக் கேட்டதும் வியப்படைந்த வாலி மிகுந்த கோபத்துடன் போரிடக் கிளம்பினான். அப்போது வாலியின் மனைவி தாரை அவனைத் தடுத்து நிறுத்திக் கூறலானாள், ''சுவாமி, மறுபடியும் உங்கள் தம்பி போருக்கு வந்திருப்ப

தைப் பார்த்தால் ஏதோ ஒரு பலமான துணையுடன் வந்திருப்ப தாகத்தெரிகிறது. அங்கதன் சொன்னான் சுக்ரீவன் ராமனுடன் சினேகம் செய்து கொண்டிருப்பதாக. எனவே, சுக்ரீவனை மன்னித்து அவன் மீது கொண்டுள்ள பகையை விட்டுவிடுங்கள். அவனை அழைத்து வந்து யுவராஜாவாக முடிசூட்டி ராமனுடன் தாங்களும் நட்புக் கொள்ளுங்கள்.'' தாரையின் இப்பேச்சை வாலி சிறிதும் சட்டை செய்யவில்லை.

''அன்புத்தாரையே, தன் பகைவன் சூழுரை கூறிப்போருக்கு அழைக்கும்போது ஒரு சுத்த வீரன் தன் வீட்டில் பயந்து இருப்பதும் அழகோ. அவனை விரைவில் சென்று அவனைக் கொன்று ஒழித்து வெற்றியுடன் திரும்புகிறேன். நீ அஞ்சவேண்டாம்'' என்று வீராவேசத்துடன் கூறிவிட்டு போரிடக் கோட்டையை விட்டு வெளியே வந்தான் வாலி.

வாலிக்கும் சுக்ரீவனுக்கும் இடையே பயங்கரப்போர் மூண்டது. ராமன் ஓர்அம்பை எடுத்து இந்திரனின் வில்லில்வைத்து நாண் ஏற்றினான். ராமன் ஒரு மரத்தின் மறைவில் நின்றிருந்தான். தக்கதோர் சமயம் வந்ததும் ராமபிரான் அந்த அம்பை வாலியின் மார்பின் மீது பாய்ச்சினான். வாலி தரையில் சாய்ந்தான்.

வாலி ராமனைப்பார்த்து, ''நீ ஒருமரத்தின் மறைவில்நின்று என் மார்பில் அம்பை எய்தாய். ஒரு திருடனைப்போல போர் புரிந்ததால் நீ என்ன புகழை அடையப்போகிறாய்? மிகவும் இழிந்த நிந்தனைக்குரிய செயல் அல்லவா இது? ஓர் அரசனின் அறநெறியை நீ உணர்ந்தாய் இல்லை. என்னுடன் நேரில் வந்து எதிர்த்தல்லவா நீ சண்டை செய்யவேண்டும். நான்செய்யாத என்ன நல்ல காரியத்தை சுக்ரீவன் உனக்குச் செய்திருக்கிறான். ஏ ராம, உலகம் நன்கு அறியும் எனது வலிமையை நீ அறிய மாட்டாயா? ராவணனையும் அவன் குடும்பத்தினரையும் ஒரு நொடிப்பொழுதில் சீதையுடன் கொண்டு வந்து உன் முன் நிறுத்திவிடுவேனே. நீயோ தர்மம் அறிந்தவன் என்று உலகத்தினரால் புகழப்படுகிறாய். ஒரு சாதாரண வேடனைப்போல மறைந்திருந்து என்னைக் கொன்றது என்ன தர்மம் என்று கூறுவாய். எனது புலாலோ உன்னால் உண்ணப்படாதது. பிறகு ஏன் என்னை இவ்வாறு கொன்றாய்?'' என்று வாலி கூறினான்.

அதற்கு ஸ்ரீ ராமபிரான் கீழ்க்கண்டவாறு கூறலானார்; "நான் தீயவர்களை மாய்த்து தருமத்திற்குப் பாதுகாப்பு அளிக்கிறேன். நீ உன்தம்பியின் மனைவியை பலாத்காரமாக கவர்ந்து கொண்டாய். தன் மகள், தங்கை, சகோதரனின் மனைவி இவர்கள் யாவரும் சமமாகக் கருதப்பட வேண்டும். அதற்கு மாறாக இவர்களை அடைந்தவன் அரசர்களால் கொல்லப்பட வேண்டியவர்களே ஆகின்றனர். அண்ணன், தந்தை, குரு ஆகியவர்களை அறநெறியிற் செல்பவன் தனது பெற்றோராகவே மரியாதையுடன் கருதவேண்டும். ஒருவன் தனது தம்பி, மகன், சீடன் ஆகியவரை தன் மகனாகவே கொள்ளல் வேண்டும்."

இவ்வுரை கேட்டபின் வாலி தான்செய்த தவறைஉணர்ந்து ராமபிரானிடம் குற்றம் காண்பதை விட்டுவிட்டான். ராமனை அஞ்சலி செய்து பேசலானான், "நீர் சொன்னவை யாவும் முற்றிலும் உண்மை. அறியாமையால் நான் கூறியவற்றை மன்னித்தருளும். உமது தரிசனம் யோகிகளுக்குக் கூட கிடைப்பது அரிது. எவருடைய நாமத்தை மரணத் தறுவாயில் ஒருவன் உச்சரிக்கின்றானோ அவன் அப்பொழுதே முக்தி அடைகின்றான்; அந்த நாமத்திற்குரிய பரம்பொருள் இதோ என் எதிரே காட்சி அளிக்கிறது. நானும் மரணம் அடையப்போகிறேன். சுவாமி, என் மகன் அங்கதன்பால் இரக்கம் கொள்ளுங்கள். சுக்ரீவன் என் மனைவியையும், மகனையும் கொடுமைப்படுத்தாமல் இருக்க அருள் புரியுங்கள்.

இவ்வாறு கூறி முடித்தவுடன் வாலி தனது குரங்கின் உருவைநீக்கிக் கொண்டு அக்கணமே தேஜோ மயமான தெய்வீக உடலை அடைந்தான்.

தாரை தன் கணவன் வாலியின் மரணம் குறித்து வருந்தி அழுது புலம்பினாள். ராமபிரான் அவளைத் தேற்றினார். பிறகு சுக்ரீவன் தனது அண்ணனின் அந்திமக் கிரியைகளை முறைப்படி நிறைவேற்றினான்.

ஸ்ரீராமபிரான் சுக்ரீவனுக்குச் சொன்ன உரையாவது, "நீ விரைவில் சென்று கிஷ்கிந்தையின் மன்னனாக முடி சூட்டிக் கொள். இது எனது ஆணை. நானோ பதினான்கு ஆண்டுகள்

முடியும்வரை எந்த நகரத்திற்குள்ளேயும் வரமாட்டேன். என் தம்பி இலக்ஷ்மணன் வந்து உனக்கு முடி சூட்டுவான். அங்க தனை யுவராஜாவாக பட்டம் சூட்டுங்கள். இந்த மழைக்காலம் முழுவதும் நானும் தம்பியும் இம்மலையின் குகையிலேயே தங்கு வோம். சீதையைத் தேடுவதற்கான தீவிர முயற்சியை மேற் கொள்வாயாக.''

சுக்ரீவன் கூறினான், ''ராம! தங்களுடைய ஆணை எதுவோ அதனை அப்படியே நிறைவேற்றுகிறேன்.'' பிறகு சுக்ரீவன் இலக்ஷ்மணனுடன் கிஷ்கிந்தைக்குச் சென்றான். ராமபிரான் கூறியபடியே இலக்ஷ்மணனால் கிஷ்கிந்தையின் மன்னனாக முடி சூட்டப்பட்டான். பின்பு இராம லக்ஷ்மணர்கள் இருவரும் பிர வர்ஷண மலையை அடைந்து அங்கே ஒருகுகையில் மழைகாலத் தைக் கழித்தனர்.

## 8. சீதையைத் தேடுதல்

ஸ்ரீ ராமன் இலக்ஷ்மணனிடம், ''சீதை இது காலம் வரை உயிரோடு இருப்பாளோ அன்றி இறந்திருப்பாளோ என்று என் னால் நிச்சயமாக தெரிந்து கொள்ள முடியவில்லை. சுக்ரீவனோ நன்றி உணர்வு இல்லாதவன் போல்வும் காணப்படுகிறான். அவனோ ராஜ்யத்தை அடைந்து விட்டான். அவனை எதிர்ப்ப தற்கு இனி பகைவர் யாருமே இல்லை. மது அருந்திக்கொண்டு பெண்களுடன் இன்பப் பொழுது போக்கிக் கொண்டிருக்கிறான். அவன் இன்னும் சீதையைத் தேடுவதற்கு முயலவில்லை. அந்த நன்றி கெட்டவன் என்னை முற்றிலும் மறந்து போனான். நீ கிஷ்கிந்தைக்குச் சென்று அவனை பயமுறுத்திவா'' என்று வருத் தத்துடன் கூறினார்.

இலக்ஷ்மணன் கோபத்துடன் கிஷ்கிந்தை சென்று, ''சுக்ரீவ நன்றி கெட்ட பாதகனே! நீ ஸ்ரீ ராமனை மறந்து போனாய். வாலியைக் கொன்ற ராமனது ஆழி உன் உயிரையும் மாய்க்கக் காத்திருக்கிறது'' என்று கண்களில் அனல் வீச கர்ஜித்தான்.

அப்போது ஹனுமான், ''இலக்ஷ்மணா! வானரத் தலைவன் ஸ்ரீ ராமனது பணியை மறக்கவில்லை. இலட்சக் கணக்கான வானரப்படைகள் எல்லா திசைகளிலிருந்தும் வந்து கொண்டி

ருக்கின்றன. வெகு விரைவில் அவைகள் சீதாபிராட்டியைத் தேடப்புறப்பட்டுவிடும். சுக்ரீவன் ராமனது வேண்டுகோள் எது வாயினும் நிச்சயமாக நிறைவேற்றுவான். அவன் தங்களைவிட ராமனிடம் சிறப்பான பக்தி கொண்டவன்'' என மிகவும் சாதுரியமாகக் கூறி இலக்ஷ்மணனின் கோபத்தைத் தணித்தார்.

அதன் பிறகு சுக்ரீவன், ஹனுமான், அங்கதன், நீலன் ஆக இந்த வானர வீரர்கள் இலக்ஷ்மணனையும் அழைத்துக்கொண்டு ஸ்ரீ ராமபிரானிடம் வந்தனர்.

சுக்ரீவன் ஸ்ரீ ராமனை அடிபணிந்து வணங்கி, ''நண்பரே! எண்ணற்ற வானர வீரர்கள் குலசல் மலை அடிவாரத்தில் வந்து தங்கியுள்ளனர். அவர்கள் யாவரும் தெய்வாம்சம் கொண்டவர்கள். எந்த உருவத்தையும் எடுத்துக் கொள்ளும் ஆற்றல் கொண்டவர்கள்; போர் திறமையும் தந்திரமும் அறிந்தவர்கள். சிலர் யானை பலம் கொண்டவர்கள். இன்னும் பலர் பத்து, நூறு யானைகளின் உடலுறுதி படைத்தவர்கள். கருத்த மலைகளைப் போன்ற தோற்றமுடையவர்களும், தங்கத்தின் நிறம் கொண்டவர்களும், சிவந்த முகம் கொண்டவர்களும், பளிங்கு நிறம் வாய்க்கப்பெற்றவர்களும் கணக்கில்லாமல் வந்துகூடியுள்ளனர்.

''எனது முதல் மந்திரியும் கரடிகளின் தலைவனுமான ஜாம்பவான் ஒருஇலக்ஷம் படைவீரர்களின் சிறந்த தலைவன். இவன் தான் இணையற்ற பராக்கிரமம் கொண்ட ஹனுமான். மேலும் நளன், நீலன், கவயன், கவாக்ஷன், சுஷேணன் போன்ற மஹா வீரர்களும் இங்கு உள்ளனர். அவர்கள் யாவரும் இந்திரனுக்கு ஒப்பான பலமுடையவர்கள். ஒவ்வொருவரும ஒருகோடி வானரப்படைக்குத் தலைவர்கள். அவர்கள் யாவரும் ஹே ராம, உமக்காகத் தங்கள் உயிரைத் துரும்பாக மதித்து வந்துள்ளனர். மரங்கள், பாறைகள், குன்றுகள் இவற்றை ஆயுதங்களாகக் கொண்டு போரிடுவதில் மிகவும் வல்லவர்கள்'' என்று தனது படைபலத்தை விளக்கி ராமபிரானுக்கு நம்பிக்கையூட்டினன்.

ஸ்ரீராமபிரான் சுக்ரீவனை தழுவிக் கொண்டார். சீதையை தேடுமாறு துரிதப்படுத்தினர்.

மிக்க வலிமையுள்ள வானர வீரர்களை எல்லா திசைகளிலும் சென்று சீதையைத் தேடும்படி ஆணை பிறப்பித்தான்.

தென் திசைக்கு யாவரிலும் வலிமை மிக்க வானரத் தலைவர்களை செல்லும்படி நியமித்தான். அவர்கள் அங்கதன், ஜாம்பவான், ஹனுமான், நளன், சுஷேணன், சரபன், மைந்தவன், துவிதன் முதலானோர் ஆவார்கள். சுக்ரீவன் அவ்வீரர்களிடம், ''நீங்கள் மிகவும் ஜாக்ரதையாக சீதையைத் தேடுங்கள். ஒருமாதக் காலத்திற்குள் திரும்ப வந்து விடுங்கள். ஜானகியைக்கண்டு பிடிக்காமல் ஒரு மாதத்திற்கு மேல் ஒரு நாள் கழிந்தாலும் நீங்கள் யாவரும்என்னால் கொல்லப்படுவீர்கள்'' என்று கூறினான்.

பிறகு ஸ்ரீ ராமபிரான் ஹனுமானைத் தனியாக அழைத்து, ''என்னுடைய கணையாளியை (மோதிரத்தை) எனக்கான ஓர் அடையாளமாக எடுத்துச்செல். அதில் என்பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. இதை தக்கசமயம் பார்த்து ஜானகியிடம் கொடு. இந்தகாரியம் நிறைவேற உன்னையே நம்பி இருக்கிறேன் உனதுஆற்றல் எத்தகையது என்பதை நான் நன்கு அறிவேன்'' என்று சொன்னார்.

அங்கதன் முதலான வானரங்கள் அங்கும் இங்குமாகப் பல இடங்களிலும் சீதையைத் தேடலானார்கள். காலம் செல்லச் செல்ல எல்லோரும் சீதையைப்பற்றிய எந்த செய்தியும் கிடைக்காமல் சோர்வடைந்தனர். கடைசியில் எல்லோரும் மஹேந்திர மலையின் அடிவாரத்தை அடைந்தனர். அம்மலை தென்மாக்கடலின் கரையில் உள்ளது. அங்கதன் எல்லோரையும் அழைத்துக் கூறலானான், ''நாம் இதுவரை சீதையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சுக்ரீவமன்னனின் கட்டளையை நிறைவேற்றியே ஆக வேண்டும். இப்படியே கிஷ்கிந்தைக்குச் செல்வோமானால் சுக்ரீவன் நம் எல்லோரையும் கொன்று விடுவார். அங்கு சென்று நமது இயலாமையைக்காட்டி கொல்லப்படுவதைவிடஇங்கேயே இருந்து உயிர் விடுவோம். இம்மாபெரும் கடலோ கடக்க முடியாதது; மிகுந்த ஆழமும் கொண்டது. எனவே நாம் என்ன செய்யலாம்'' அதன்படி எல்லோரும் உயிரை மாய்ப்பதற்காக உட்கார்ந்தனர்.

## 4. சம்பாதியும் வானரரும்

அந்தச் சமயம் மஹேந்திர மலையின் ஒரு குகையிலிருந்து மிகப்பெரிய கழுகு ஒன்று வெளியே வந்தது. அது இந்த வான

ரைப் பார்த்து, "எனக்கு இன்றைக்கு சாப்பிட ஏராளமான இரை கிடைத்துள்ளது" எனக் கூறியது. இதைக்கேட்ட வானரங்கள் கூறிக்கொண்டன, "இந்தக் கழுகு நம் எல்லோரையும் நிச்சயமாக தின்று விடும். ராம கைங்கரியத்தில் ஒரு சிறிதும் நாம் செய்து முடிக்கவில்லை. அதோடு சுக்ரீவனுடைய ஆணையையும் நிறைவேற்ற முடியவில்லை. இந்த கழுகு நம்மைக் கொல்லத்தான் போகிறது. நாம் யாவரும் பரமபதத்தையே அடைவோமாக. ஆஹா! ஜடாயு எவ்வளவு பாக்கியவான். நல்ல அறிவாளி ஆவான். தர்மத்தையே பின்பற்றி நடந்தவன். யோகிகளுக்கும் கிடைப்பதற்கரியதான ஆனந்த முக்தியை அல்லவா அடைந்து விட்டான்."

சம்பாதி வானர வீரர்கள் கூறிய வார்த்தைகளைக் கேட்டு விட்டு கூறலாயிற்று, "நீங்கள் யார்? எனது சகோதரன் ஜடாயுவைப் பற்றி பேசியதைக் கேட்டதும் அச்சொற்கள் என் காதுகளில் அமுதம் பெய்ததுபோல் இருந்தன. பயப்படாதீர்கள். வீரர்களே! ஜடாயுவைப் பற்றி தெரிவியுங்கள். நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்."

அங்கதன் சொன்னான், "தசரத சக்ரவர்த்தியின் புதல்வன் ஸ்ரீ ராமன் தம்பி இலக்ஷ்மணனுடனும் மனைவி சீதையுடனும் காட்டில் அலைந்து கொண்டிருந்தார். அவருடைய மனைவி சீதையை கொடிய இராவணன் கவர்ந்து கொண்டு போய் விட்டான். அவள் 'ராம ராம' என்று அலறும்போது பறவைகளின் வேந்தனை ஜடாயு அதைக் கேட்டனன். இராவணனுடன் பெரும்போர் தொடுத்தான். ஜடாயு முடிவில் மாண்டான். ஸ்ரீ ராமர் ஜடாயுவை தானே அடக்கம் செய்தார். பிறகு ஸ்ரீ ராமன் சுக்ரீவனுடன்சென்று நட்புக் கொண்டார். வாலியைக் கொன்று சுக்ரீவனுக்கு கிஷ்கிந்தையை முடிசூட்டினார்.

"சுக்ரீவன் இப்பொழுது சீதை இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்க எங்களை அநுப்பியுள்ளார். அவர் ஆணையின் படி ஒரு மாதத்திற்குள் சீதையைக் காணாமல் கிஷ்கிந்தை சென்றால் நாங்கள் கொல்லப்படுவோம். காடுகள் எல்லாம் இது வரை ஓரிடம் கூடவிடாமல் தேடியாகி விட்டது. கிட்டத்தட்ட ஒரு மாதம் முடியப்போகிறது; சீதையின் இருப்பிடம்பற்றி ஒன்றுமே

தெரியவில்லை. ஆகவே, இக்கடற் கரையிலே உயிரைப் போக்கிக் கொள்ள விரும்புகிறோம். நீ ஒருக்கால் சீதையைப் பற்றி ஏதாவது அறிந்திருந்தால் கட்டாயம் எங்களுக்குக் கூறு. உனக்கு என்றென்றும் நாங்கள் நன்றியுள்ளவர்களாய் இருப்போம்."

அங்கதனின் இவ்வினிய சொற்களைக் கேட்ட அக்கழுகரசு சம்பாதி எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தான். சொல்ல ஆரம்பித்தான், "வானரோத்தமர்களே! ஜடாயு எனது அன்புக்குரிய சகோதரன். அவனைப்பிரிந்து பலஆண்டுகளுக்குப் பிறகு இப்போது தான் உங்கள் மூலம் அவனைப்பற்றிக் கேள்விப்படுகிறேன். என்னை நீங்கள் கடலுக்கு அருகே தூக்கிச் செல்லுங்கள் என் சகோதரனுக்குச் செய்யவேண்டிய நீர்க்கடன்களை சமர்ப்பிக்கிறேன். அதன் பிறகு உங்களோடு பேசுகிறேன். நீங்கள் நிறைவேற்ற வேண்டிய காரியத்திற்கு வழிகாட்டுகிறேன்."

குரங்குகள் அப்பறவையை கடற்கரைக்குத் தூக்கிச் சென்றன. சம்பாதி நீராடி நீர்க்கடன்களைத் தீர்த்தான்.

பிறகு பழைய இடத்திற்குக் கொண்டு வரப்பட்டான். சம்பாதி:– "திரிகூடமலையின் மீது இலங்கை என்ற ஒருநகரம் உள்ளது. அங்கே அசோகவனத்தில் சீதை சிறைப்பட்டு வாழ்கிறாள் அவளை அரக்கியர்கள் நாற்புறமும் பாதுகாத்து வருகின்றனர். அந்த இலங்கை கடலின் நடுவே அமைந்துள்ளது. இங்கிருந்து அந்நகரம் நூறுயோசனை தூரமுள்ளது. நான் இலங்கையையும் அங்குள்ள சீதையையும் காண்கின்றேன். இதில் ஒரு சிறிதும் ஸந்தேகத்திற்கு இடமில்லை. நான் ஒரு கழுகாக இருப்பதால் அவ்வளவு தூரம் என்னால் பார்க்க முடிகிறது. இந்த நூறுயோசனை தூரம் கடலைத் தாண்டிச் செல்பவர் யாரோ அவர் சீதையைக் கண்டு திரும்பக் கூடும்."

எல்லாவானரங்களும், "ஓ! சம்பாதியே! உனது வரலாறு யாது என்பதை ஆரம்பத்திலிருந்தே கூறுவாய்" என்று வேண்டிக் கொண்டன. உடனே சம்பாதி தன் கதையைக்கீழ்க் கண்டவாறு கூறலானார்.

"நானும் ஜடாயுவும் சகோதரர்கள். எங்களுடைய வலிமையில் கர்வம் கொண்டிருந்தோம். அகந்தையின் காரணமாக இருவரும் சூரியமண்டலம் வரை செல்ல முயன்றோம். அநேக ஆயிரம் யோசனை தூரம் ஆகாயத்தில் பறந்தோம் ஜடாயுவால் சூரியவெப்பத்தைத் தாங்க முடியவில்லை. அவனை நான் என் சிறகுகளால் மறைத்தபடி மேலும் பறந்தோம். என் சிறகுகள் வெப்பத்தால் எரிந்தன. அப்போது நான் பறக்க முடியாமல் விந்திய மலையின் உச்சியில் விழுந்தேன். மூன்று நாட்கள் எனக்கு பிரக்ஞையே இல்லாது போயிற்று. பிறகு நான் மெதுவாகக் கண் திறந்து பார்த்தேன். அங்கு ஒரு முனிவரின் ஆச்ரமத்தைக் கண்டேன். மெதுவாக நகர்ந்து அங்கு சென்றேன். முனிவர்களின் தலைவரான சந்திரமா என்னிடம், "ஓ சம்பாதி! உன் சிறகுகள் ஏன் எரிந்துள்ளன?,, எனக் கேட்டார். அதற்கு நான் நடந்த நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் விவரமாக அவருக்குச் சொன்னேன். பிறகு அந்த முனிவர் கூறலானார், "திரேதாயுகத்தில் நாராயணர் தசரதரின் புத்திரராக அவதரிக்கப் போகிறார். இராவணனை சம்ஹாரம் செய்வதற்காக அவர் தம் மனைவி சீதையுடனும் தம்பி இலக்ஷ்மணனுடனும் தண்டகாரண்யம் வருவார். ஒரு திருடனைப்போல இராவணன் சீதையை இலங்கைக்குக் கடத்திச் செல்லப் போகிறான். பின்பு சுக்ரீவனின் ஆணைப்படி வானர வீரர்கள்சீதையைத் தேடிக்கொண்டு கடற்கரைக்கு வருவார்கள். சீதையின் இருப்பிடத்தை அவர்களுக்கு கூறுவாயாக. அப்பொழுது உன் உடலில் புதியஇரண்டு சிறகுகள் முளைக்கும் "

இவ்வாறு முனிவர்களின் தலைவரான சந்திரமா எனக்கு அறிவுரை கூறினார். பாருங்கள்! எனக்குப் புதிய இறக்கைகள் முளைத்துள்ளன. அவை மிகவும் மிருதுவாக உள்ளன. நான் சென்று வருகிறேன். நீங்கள் நிச்சயமாகச் சீதையைக் காண்பீர்கள். கடலைக்கடந்து செல்வதற்கு முயற்சி செய்யுங்கள்.

பாவிகளும்கூட ராம நாமத்தைச் சொல்வதின் மூலம் இந்த சம்சாரமாகிய கடலை எளிதில் தாண்டி விடுகிறார்கள். அப்படி இருக்க உண்மையான ஸ்ரீராமனின் பக்தர்களாகிய உங்களால் இந்த சாதாரண கடலையா கடக்கமுடியாது? உங்களுக்கு எல்லா நலன்களும் உண்டாகட்டும்."

## 5. ஹநுமான்

ஸம்பாதி சென்ற பின்பு எல்லா வானரர்களும்தங்களுக்குள் கடலைக் கடந்து செல்வதைப் பற்றி ஆலோசித்தனர். அங்கதன் எல்லோரையும்பார்த்து, "உங்களில் யார் அரசனுடைய ஆணை யாகிய கடலைத் தாண்டும் இப்பணியைச் செய்யக்கூடும்? அத் தகைய மாவீரன் எழுந்து முன்வரட்டும். அவனே ஸ்ரீராமன், சுக் ரீவன், வானரர்கள் எல்லோரையும் ஆதரிப்பவன் ஆகிறான்" என்று சொன்னான்.

அங்கதன் கூறிய இதைக் கேட்ட எல்லா வானரங்களும் பேசாமல் அமர்ந்திருந்தன. அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்த வண்ணம் மௌனமாய் இருந்தனர்.

மறுபடியும்,அங்கதன் சொன்னான்,"ஒவ்வொருவரும் தங்க ளுடைய திறமையையும், இக்காரியத்தில் தனக்குள்ள வலிமை யின் அளவையும் கூறுங்கள். பிறகு இதை யார் முற்றிலும் செய்து முடிப்பார் என்பதைத் தீர்மானிப்போம்."

அதன்படி ஒவ்வொரு வானர வீரனும் தனக்குள்ள, தனக் குள்ள, திறமை, வலிமைகளைக் கூறலானான்.

ஒருதலைவன், "நான் பத்து யோசனை தூரம் தாண்ட முடி யும்" வேறொருவன், "நான் இருபது யோசனை செல்வேன்" மூன்றாமவன், "நான் முப்பது யோசனை தாண்டுவேன்" பிறகு ஜாம்பவான்சொன்னார், "நான் தொண்ணூறு யோசனை தூரம் இக்கடலைத்தாண்ட முடியும்." முடிவில் அங்கதன் கூறினான், "நான்எப்படியும் இக்கடலைத்தாண்டி சென்றுவிடுவேன். ஆனால் திரும்பவும் தாண்டி இங்குவர என்னால் முடியுமோ என்று எனக்குத்தெரியவில்லை."

இதைக்கேட்ட ஜாம்பவான், "அங்கதனே! நீயோ எங்களு டையஅரசனும் வழிகாட்டியுமாவாய். எனவே இந்த வேலையை நீ செய்ய நான் சம்மதிக்க மாட்டேன். உன்னால் அது முடியு மானாலும் உன்னைச் செய்யத்தூண்டுவது பொருந்தாது" என்று சொன்னார்.

அதற்கு அங்கதன், "அப்படியானால் நாம் எல்லோரும்

முன்பு முடிவு செய்தபடி புல்தரையில் படுத்துத் தூங்குவோம். நம்மிடையே ஒருவராலும் இதைச் செய்ய முடியாவிடில், சுக்ரீவனின் கைகளால் மரணத்தை சந்திக்கத்தயாராக வேண்டியதுதான்'' என்று வருத்தத்துடன் சொன்னான்.

உடனே ஜாம்பவான், ''மனம் தளர வேண்டாம் கடலைக் கடந்து சென்று, காரியத்தை முடித்துக் கொண்டு மீண்டும் திரும்பக் கூடியவரை நான் இப்பொழுது குறிப்பிடுகிறேன் பாருங்கள்.'' என்றார்.

ஹநுமானைப்பார்த்து ஜாம்பவான் கீழ்க்கண்டவாறு பேசலானார். '' ஓ ஹனுமானே! நம் கையில் ஒரு மஹத்தான வேலை காத்திருக்கும்போது, நீ ஏன் மௌனமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்? உனதுவலிமையை இன்று காட்டுவாயாக. நீயோ ஆற்றலில் காற்றுக்கடவுளான வாயுவுக்கு நிகரானவன். ஸ்ரீ ராம கைங்கரியத்திற்காகவே நீ பிறவி எடுத்துள்ளாய். பிறந்த உடனேயே காலையில் உதய சூரியனைப் பார்த்து, இந்த நன்கு பழுத்த பழத்தை நான் சாப்பிடப் பிடிக்கப் போகிறேன்,' என்று சொல்லிக்கொண்டு ஆகாயத்தில் ஐநூறுயோசனைதூரம் பறந்து சென்றாயல்லவா? ஆகையால் உனதுபலத்தை யாரால் விவரிக்க முடியும்? இப்பொழுது எழுந்திரு. ராம காரியத்தை செய்துமுடி. எங்களைக் காப்பாற்று. நீ ஒரு காரியத்தைத் தீர்மானிப்பதில் அக்கினி போன்றவன்.''

ஜாம்பவானின் சொற்களைக் கேட்ட ஹனுமான் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார். சிங்கத்தைப்போல் கர்ஜனைசெய்தார். தன் உடலைமலைபோலப் பெருக்கினார். பிறகு சொன்னார், ''நான்இப்பொழுதேகடலைத் தாண்டிச்செல்கிறேன். இலங்கையைத் தீக்கு இரையாக்குகிறேன். இராவணனை அவன் குலத்தோடு நாசம் செய்து விட்டு சீதையை இங்கே அழைத்துக் கொண்டு வருகிறேன். இல்லாவிடில் இராவணனை கயிற்றால் அவன் கழுத்தில் கட்டி இழுத்து வருகிறேன். இலங்கையை வேருடன் மலைகளுடன் பெயர்த்தெடுத்து இராமனின் முன்பு கொண்டு வைத்து விடுகிறேன்.''

ஜாம்பவான், ''ஓ ஆஞ்சநேய! தெய்வம் உனக்கு அருள் புரியட்டும். உன்னை ஆசீர்வதிக்கட்டும். இப்பொழுதே அந்தக்

காரியத்தைச் செய்ய முற்படு'' என்று சொன்னார்.

ஹநுமான் ஜாம்பவானின் ஆசிகளைப் பெற்றுக் கொண்டு மஹேந்திர மலையின் உச்சியை அடைந்து தன்உடலை வியக்கும் படி பெரிதாக்கிக் கொண்டார். ராம நாமத்தை மனதில் தியானம் செய்தவாறு ஆகாய வழிப் பயணத்திற்குத் தயாரானார்.

## 5. சுந்தர காண்டம்

### 1. ஹநுமான் கடலைத் தாவுதல்

ஹநுமான் தனக்குள்ளே, ''ஸ்ரீ ராமனை என் இதயத்தே தியானம் செய்து கொண்டு நூற்றுக் கணக்கான யோஜனை தூரம் நீண்டிருக்கும் இக்கடலை கடக்கப் போகிறேன்'' என்று சொல்லிக் கொண்டார். உடனே கடலின் மேலாக காற்றின் வேகம் கொண்டு பாய்ந்தார்.

விண்ணவர்கள் ஹனுமான் இலங்கையை அடையும் ஆற்றல் உள்ளவரா எனச் சோதிக்க விரும்பினார்கள். நாகர்களின் தாயாரான சுரசை என்பவளை ஹநுமானின் மார்க்கத்தில் தடை செய்யுமாறு ஏவினர். அவள் ஹநுமானின் முன்பு தோன்றி, ''நீ எனக்கு உணவாக வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறாய் எனவே எனக்கு பசி அதிகரிக்கிறது. வந்து என் வாய்க்குள் சீக்கிரம் நுழைந்து விடு.'' என்று சொன்னாள்.

அதற்கு ஹநுமான், '' ஓ அம்மையே! நான் இப்பொழுது ராமபிரானால் ஏவப்பட்டுச் சீதையைக் கண்டுபிடிக்கச் செல்கிறேன். சீதையைக் கண்டு ராமனது நலனைக் கூறிவிட்டு வந்து உன் வாயில் நுழைகிறேன். இப்பொழுது எனக்கு வழி விடு,'' என விடையளித்தார்.

சுரசை மறுபடியும், '' நான் இப்போது மிகுந்த பசியோடிருக்கிறேன். நீ என் வாய்க்குள் நுழைந்த பிறகு போவாய். இல்லாவிடில் நான் உன்னைத்தின்று விடுவேன், '' என்றனள்.

''உன் வாயைத்திற. சீக்கிரம் நான் உள்ளே நுழைந்து பின்பு போகிறேன். எனக்கு மிகவும் அவசரம்''என்று அனுமான் அவளை துரிதப்படுத்தினார்.

அப்போது அனுமான் தன் உடலை ஒரு யோஜனை விஸ்தீர் ணம் பெரிதாக்கிக் கொண்டு சுரசையின் முன்னே நின்ருர். சுரசை தனது வாயை ஐந்து யோஜனை அளவு பெரியதாக்கினுள் பிறகு ஹநுமான் தன் உருவத்தை பத்து யோஜனை பரிமாண மாகப் பெரிதாக்கினுர். சுரசை பிறகு தன் வாயை இருபது யோஜனை அகலமாக விரித்தாள். ஹநுமான் தன் உடலை முப்பது யோஜனைக்குப் பெரிதாக்கினுர். அதுகண்ட சுரசை தன் வாயை ஐம்பது யோஜனை அகலமாய் விரித்தாள். உடனே ஹநுமான் தன்னை கட்டை விரல் அளவுக்குச் சிறியதாக்கிக் கொண்டு சுரசையின் வாயினுட் புகுந்து காதின்வழியாக வெளி யேறினுர்.

சுரசை அநுமானை நோக்கி ''அப்பனே! நீ இனிசென்று ஸ்ரீ ராமபிரானின் காரியத்தை செய்து முடி,'' எனக்கூறினுள்.

அதன் பிறகு மைனுகம் என்ற மலை கடல் அரசனின் ஆணை யின்படி கடலுள்ளே இருந்து வெளிப்பட்டது. ஹனுமானை நோக்கி, ''ஓ வானர வீரனே! நான் தான் மைனுகம் என்றகிரி. கடலரசன் உன்னை என்மீது சற்று ஓய்வு எடுத்துக் கொண்டு மேலே செல்லுமாறு ஆணையிட்டிருக்கிருன். எனவே வா, என்மீது சற்று அமர்ந்து நான் தரும் இனிய கனிகளை உண்டு களித்து பின் செல்வாயாக'' எனக் கூறியது.

அதற்கு அநுமன். ''நான் ஒன்றும் உண்ணவோ ஓய்வு எடுத்துக் கொள்ளவோ முடியாது. இராம காரியமாக நான் போய்க் கொண்டிருக்கிறேன் நான் வெகுவிரைவாகச் செல்ல வேண்டும்,'' என்று கூறிக் கொண்டே அம்மலையின உச்சியை தடவி விட்டு அதிவேகமாக தன் பயணத்தைத் தொடர்ந்தார்.

கொஞ்ச தூரம் சென்றதும், சிம்ஹிகை என்ற ஓர் அரக்கி கடலில் விழும்ஹநுமானின் நிழலைப் பற்றி இழுக்க ஹநுமானுல் மேலும் செல்ல முடியவில்லை. கீழே பார்த்தார். திடீரென்று அவ்வரக்கியின் மீது பாய்ந்து தன் காலால் உதைத்து அவ்வரக் கியைக் கொன்று வீழ்த்தினுர்.

கடலைக் கடந்ததும் ஹநுமான் இலங்கை நகரை எதிரே கண்டார். அது திரிகோணமலையின் சிகரத்தின் மீது அமைக்

கப்பட்டிருந்தது. பலவகை மரங்களாலும், செடிகொடிகளாலும் கனிதரும் விருட்சங்களாலும் இயற்கை கொழிக்க அந்நகரம் காட்சி அளித்தது.

## 2. இலங்கையில் ஹநுமான்

ஹநுமான்ஒரு சிறு உருவமாகத் தன்னை மாற்றிக்கொண்டு இலங்கையின் கோட்டை வாயிலை இருள் சூழ்ந்ததும் அடைந்தார். அங்கே ஓர் அரக்கி அவரைத்தடுத்து நிறுத்தி,''நான்இலங்கையை காவல் புரிகிறவள். நீ யார்?. ஒரு திருடனைப் போல குரங்கு உருவத்துடன் உள்ளே நுழையப் பார்க்கிறாய்? நீ என்ன விரும்புகிறாய்?'' என்று சொல்லிக் கொண்டே தன் காலால் அவரை அடித்தாள். உடனே ஹநுமார் மிகவும் பலமாக தன் முஷ்டியால் அவள் தலையில் அறைந்தார். அவள் இரத்தம் கக்கிக் கொண்டு கீழேவிழுந்தாள். பிறகு எழுந்திருந்து ஹநுமானை நோக்கி சொன்னாள், ''உள்ளே செல். நீ இலங்கையை வெற்றி கொண்டு விட்டாய். முன்பு ஒரு சமயம் நான்முகன் சொன்னதாவது ஸ்ரீ மன்நாராயணன் இராமனாக இருபத்தெட்டாவது திரேதாயுகத்தில் அவதரிப்பார். இராமன் தன் மனைவி சீதையுடன் காட்டிற்குப் போவார். இராவணன் சீதையை கடத்தி வந்து இந்த இலங்கையில் சிறைவைப்பான். பிறகு இராமன் சுக்ரீவனுடன் நட்புக் கொண்டு சீதையைக் கண்டு பிடிக்க குரங்குகளை அநுப்புவான். அவைகளுள் ஒன்று இங்கு வரும், நீ அவனை எதிர்ப்பாய். அவன் உன் தலையில் அறைவான். பிறகு தான் இராவணனது முடிவு காலம். ''

''இராவணனது அரண்மனைக்குள் ஒரு சிறந்த உத்தியான வனம் உள்ளது. அதன் நடுவே ஒரு சிம்சுபா மரம் உள்ளது. அதனடியில் சீதை அமர்ந்திருக்கிறாள். அவளை கொடிய அரக்கியர்கள் காவல் காக்கின்றனர். நீ அவளை சந்திப்பாயாக. அவளுடன்சம்பாஷித்து விட்டு அந்த நற்செய்தியை இராமபிரானிடம் சென்று தெரிவி. இராமனின் ஞாபகம் இன்று எனக்கு வருகிறது. அவரை மனமாற தியானிக்கிறேன். இனி எனக்கு பிறப்பு மரணம் என்ற சுழற்சி இல்லை. பக்திமான்களின் சேர்க்கை கிடைப்பது மிகவும் கஷ்டம். ஸ்ரீ ராமனின் அருள் எனக்குக் கிடைக்கட்டும். என் இதயத்தில் அவர் வீற்றிருப்பாராக. ''

ஹநுமான் சிறிய உருவத்துடன் இலங்கைக்குள் இங்கு மங்கும் அலைந்துதிரிந்தார். இராவணனின் அரண்மனைக்குள் சென்று எல்லா இடங்களிலும் சீதையைத் தேடினார். சீதை காணப்படவில்லை. தனக்குள்ளே பேசலானார், ''சம்பாதி சீதை இராவணனுடைய மாளிகையில் இருப்பதாகச் சொன்னானே. அங்கே காணவில்லையே.'' பிறகு இலங்கிணி கூறிய சொற்கள் ஹநுமானுக்கு ஞாபகம் வந்தன. உடனே வேகமாக அந்த அழகிய அசோகவனத்தை நோக்கிப் பாய்ந்தார். இரத்தினங்களாலும் மணிகளாலும் அமைக்கப்பட்ட தடாகங்கள் அங்கே காணப்பட்டன. பொன்னால் நிர்மாணிக்கப்பட்ட கட்டிடங்கள் அதைச் சூழ்ந்திருந்தன. அங்கே ஒரு சிம்சுபா விருட்சத்தை ஹநுமார் கண்டார். அதனடியில் அவர் சீதை உட்காந்திருப்பதைப் பார்த்தார். அவள் அரக்கியர்களால் சூழப்பட்டிருந்தாள். மேலும் மிகவும் மெலிந்து அழுக்கு ஆடை அணிந்து கொண்டு அமர்ந்திருந்தாள். தரையில் படுத்து உறங்கினாள். அவளது உதடுகள் ஸ்ரீ ராமநாமத்தை உச்சரித்துக் கொண்டிருந்தன.

ஹநுமான் தனக்குள் சொல்லிக்கொண்டார், ''நான் எனது நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டேன். நான் சீதையைக் கண்டு கொண்டேன். இராமனது காரியத்தை பூர்த்தி செய்து விட்டேன்'' இவ்வாறு எண்ணியபடி மரக்கிளைகளுக்குள் ஹநுமான் தன்னை மறைத்துக் கொண்டு அமர்ந்திருந்தார்.

அப்போது இராவணன் அங்கு வந்து சீதையிடம் சொன்னான், ''ஏ அழகியபெண்ணே! நான் உன்னைக் காதலிக்கிறேன். என்து பட்டத்து ராணியாக வந்துவிடு. இந்த அவல நிலை உனக்குவேண்டாம். எனது சிறந்தசெழுமையைப்பார். புகழைப் பார். தேவர்களும் கண்டு அஞ்சும் அதிகாரத்தைப் பார். மரவுரி அணிந்து காட்டில் வசிக்கும் இராமனிடம் நீ என்ன சுகம் கண்டாய். ராமனைக்கண்டுபிடிக்க நான்பலரை அநுப்பினேன். அவன் எங்கேயும் காணப்படவில்லை. உன் மீது அவனுக்கு ஒரு சிறிதும் விருப்பம் இல்லை. நீ அவனுக்கு எவ்வளவு சுகத்தைக் கொடுத்தாலும், எவ்வளவு சேவை செய்தாலும் அவற்றையெல்லாம் அவன் அநுபவிப்பதாகவே தெரியவில்லை. அவன் ஒரு நன்றி கெட்டவன். நல்ல குணங்கள் இல்லாதவன். உன்மீது

அவனுக்குக் கொஞ்சம் கூட பிரியமில்லை. நீயோ துயரத்தில் ஆழ்ந்துள்ளாய். உன்னைத்தேடி அவன் வருவதாகவே இல்லை. தன் பொருளைக்கூட விரும்பாத மூடன் அவன்; தன்னை மிகவும் அறிவாளியாக நினைக்கிறான்.

நான் உன்னை மிகமிக நேசிக்கிறேன். எனக்கு மனைவியாக வந்துவிடு. ராமனோ காட்டில் திரிபவன். அவன் இப்போது உயிருடன் இருக்கிறானோ என்னவோஎன்று சந்தேகப்படுகிறேன். நீ என்னை விரும்பினால் பெண்கள், கந்தர்வப் பெண்கள், தேவ மாதர்கள், எல்லோருக்கும் அரசியாவாய். அவர்கள் நீ இடும் பணிகளைச் செய்வார்கள்.''

இராவணனுடைய கண்ணியமற்ற சொற்களைக் கேட்டசீதா பிராட்டி ஒரு சிறு துரும்பைக் கீழே போட்டு அதைப் பார்த்து கூறலானாள், ''ராகவனுடைய மனைவியாகிய என்னை நீ அவ ருக்கு பயந்து அவரும் தம்பி இலக்ஷ்மணனும் இல்லாத சமயத் தில் ஒரு திருடனைப்போல் என்னைக் கடத்தி வந்தாய். அதன் விளைவை கூடிய சீக்கிரம் நீ காணப் போகிறாய். ஸ்ரீராமபிரான் இக்கடலைத் தன் பாணங்களால் வற்றவைத்தோ அல்லது குறுக் கே பாலம் கட்டியோ வந்து உன்னுடன் போர் செய்து உன்னை மாய்க்கப் போகிறான். உன் மக்கள் குடும்பம் இவற்றோடு உன்னையும் கொன்றுவிட்டு என்னை அயோத்திக்குத் திரும்பவும் அழைத்துச் செல்வான். நான் ஒரு பதிவ்ரதை. கணவனையே தெய்வமாகக் கருதுபவள். அறநெறியை நீ பின்பற்றி நட. மற்றவர்களுடைய மனைவிகளை காப்பதே அரசனின் கடமை. நீமிகவும் கீழ்த்தரமான மனம் படைத்தவன் கேவலம் ஐம்பொறி களின் சுகபோகத்தை அதர்ம முறையில் நாடாமல் என்னை ஸ்ரீராமபிரானிடம் கொண்டு சேர்த்து அவரிடம் தஞ்சம் அடை வாய். இல்லாவிடில் நீஉன் மரணத்தைச் சந்திப்பது நிச்சயம்''

சீதையின் இக்கடுஞ்சொற்களைக் கேட்ட இராவணன் கோப மடைந்தான். தன் உடைவாளை உருவி சீதையைக் கொல்வ தற்கு முயன்றான். அத்தகைய கொடுஞ்செயலை அவன் மனைவி மண்டோதரி தடுத்து நிறுத்தினாள்.

பிறகு இராவணன் சீதையைப் பார்த்து, ''இரண்டு மாத தவணைதருகிறேன் அதற்குள் ஒரு முடிவுக்கு வந்து எனக்கு

மனைவியானால் உயர்ந்த சுகபோக வாழ்க்கையை நீ அநுபவிக்கலாம். அக்கால அளவுக்குள் என் படுக்கையின் ஒரு பகுதியை நீ அடையாவிடில், உன்னை என் காலை உணவிற்கு பயன் படுத்திவிடுவேன்,'' என்று சொல்லி விட்டு இராவணன் தன் அரண்மனைக்குத் திரும்பிச் சென்றான்.

சீதையைச் சூழ்ந்திருந்த அரக்கியர்கள் அவளை பலவழிகளிலும் பயமுறுத்தி வசப்படுத்த முயன்றனர். ஒருத்தி, ''நான் சீதையின் உடலை துண்டுதுண்டாக வெட்டுவேன்'' என்றாள். மற்றொருவள் தன் வாயை அகலவிரித்து, சீதையை பயமுறுத்தினாள். வேறொருத்தி, ''ஐயோ, உன் இளமைப் பருவம் வீணாகிறதே இராவணனோடு உறவு கொள் அது பயன்தரும்'' என்றனள்.

வேறொருபெண் விபீஷணரின் மகள் திரிஜடை சீதைக்கு சற்று ஆதரவாகப் பேசலானாள், ''ஏ, அரக்கியரே அழும்சீதையை மேலும் கொடுமைப் படுத்தாதீர்கள். அவளை அடிபணிந்து, வணங்குங்கள். நான் ஒரு கனவு கண்டேன். அதில் இராமனோடு இலக்ஷ்மணனும் வந்தனர். இலங்கை முழுவதையும் தீக்கு இரையாக்கி விட்டு இராவணனைக் கொன்று போரில் அவன் உற்றார் உறவினரையும் நாசம் செய்து விட்டு சீதையை தன்னுடன் அழைத்துச் சென்றார். இராவணன் தன் பிள்ளைகளின் மண்டை ஓடுகளை மாலையாக அணிந்திருந்தான். விபீஷணன் ஸ்ரீ ராமனுடன் சேர்ந்து அவருக்குச் சேவை செய்யலானான்.''

''ராமன் ராவணனை குலத்தோடு அழித்து விபீஷணனுக்கு லங்காராஜ்யத்தைக் கொடுக்கப் போகிறான். சீதையை தன்கையுடன் அழைத்துக் கொண்டு தன் நாட்டிற்கு செல்லப் போகிறான். இதில் சந்தேகத்திற்குக் கொஞ்சம் கூட இடமில்லை'' திரிஜடையின் இச்சொற்களைக் கேட்ட அரக்கியர்கள் நடுநடுங்கினர். பிறகு எல்லோரும் தூங்கினார்கள்.

சீதைநீண்ட நேரம் உரத்த குரலில் அழுதாள். மரத்தின் ஒரு கிளையைப் பிடித்த வண்ணம் உயிர் துறக்கத் துணிந்தாள். ''இந்த அரக்கியர்கள் என்னை கொன்று தின்று விடுவார்கள். இந்த உடலை தூக்கிலிட்டு நானே மாய்த்து கொண்டுவிடுகிறேன்.

இந்த ராக்ஷஸப் பெண்களின் நடுவே நான் வாழ்வதில் என்ன பயன்? எனது நீண்ட ஜடையே தூக்குப் போட்டுக் கொள்வதற்கு போதுமான ஒரு கயிருக உள்ளது,'' என்று தன்க்குள்ளே சிந்தனை செய்தாள்.

## 3 ஹநுமான் சீதையை சந்தித்தல்

இராவணனுக்கும் சீதைக்கும் இடையே நடந்த உரைகளை ஹனுமான் கேட்டார். உயிரைப் போக்க முயற்சிக்கும் அவளுக்கு ஆறுதல் கூறலானார். மரத்திலிருந்தவாறே மென்மையான குரலில் கீழ்க்கண்டபடி சொன்னார்.

''அயோத்திக்கு சிறப்புமிகுந்த தசரதன் வேந்தனுக இருந்தான். அவருக்கு நான்கு புதல்வர்கள். அவர்களின் பெயர்கள் ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்ன என்பன. தந்தையின் ஆணையின்படி ராமன் இலக்ஷ்மணன் இருவரும் சீதையுடன் தண்டகாரண்யம் வந்தனர். கோதாவரி நதிக்கரையில் உள்ள பஞ்சவடியில் அவர்கள் தங்கி இருந்தனர். அங்கு ராமனும் தம்பி லக்ஷ்மணனும் இல்லாத சமயம் இந்த இராவணன் சீதையைக் கடத்திக் கொண்டு வந்தான். ராமனும் தம்பியும் சீதையைத் தேடிக் கொண்டு பல காடுகளைக் கடந்து தெற்கே வந்தனர். வழியில் பறவைகளுக்கு அரசனை ஜடாயுவைக் கண்டனர். அவன் தரையில் குற்றுயிருடன் கிடந்தான். ஜடாயுவை சுவர்க்கம் அநுப்பிவிட்டு இருவரும் ரிஷ்யமுககிரிக்கு வந்தனர்.

''இராமன் வானர ராஜனை சுக்ரீவனுடன் நட்புச் செய்து கொண்டார். சுக்ரீவனுடைய அண்ணன் வாலியை சம்காரம் செய்து சுக்ரீவனுக்கு பட்டம்சூட்டினார். பிறகு சுக்ரீவன் வானரப் படைகளை எல்லா திசைகளுக்கும் அநுப்பி சீதையைத்தேடச் செய்தான். நான் அந்த வானரங்களில் ஒருவன்; சுக்ரீவனின் மந்திரி. சம்பாதியின் அறிவுரையைக் கேட்டு நூறு யோஜனை தூரம் விரிந்த இக்கடலைத்தாண்டி இங்கே வந்துள்ளேன். சீதையை இலங்கை முழுவதும் தேடிக்காணுமையால் இந்த அசோக வனம் வந்துள்ளேன். இப்பொழுது இந்த சிம்சுபா மரத்தின் கீழே துயரத்தில் மூழ்கி இருக்கின்ற சீதையைக் கண்டு கொண்டேன். என் முயற்சியில் வெற்றியடைந்தேன்.''

சீதை ஹநுமானின் சொற்களை ஒன்று விடாமல் நன்றாகக் கேட்டாள். மிகுந்த ஆச்சரியம் கொண்டாள். தனக்குள்ளே, "இது என்ன ஆகாய வாணியின் குரலா? இது ஒரு வேளை கனவா? அல்லது என் மனதின் பிரதிபலிப்பா? இவையெல்லாம் உண்மைதானா?" என்று நினைத்தாள்.

சீதை சொன்னாள், "இதைச் சொன்னவர் யாராக இருந்தாலும் சரி. அச்சொற்கள் என் காதில் அமுதத்தையே பொழிந்தன. இதைச் சொன்ன மஹாத்மா தன்னை எனக்குக் காட்டிக் கொள்ளட்டும்."

ஹனுமான் சீதையின் இச்சொற்களைக் கேட்டார். அவர் மெதுவாக மரத்திலிருந்து இறங்கி சீதையின் முன்னால் அடக்கத்துடன் நின்றார். தரையில் விழுந்து வணங்கிவிட்டு எழுந்து கைகளைக் கட்டிக் கொண்டு மௌனமானார்.

இதுகண்ட சீதை இராவணன் தான் தன்னை மயக்கி ஏமாற்றுவதற்காக ஒரு குரங்கின் வடிவுடன் வந்து இப்படி நடிக்கிறானோ என்று அஞ்சினாள். பிறகு ஹனுமான பேசலானார். "ஓ கற்பிற்கரசியான தாயே! நான் நீங்கள் சந்தேகப்படும படியான மனிதனோ அரக்கனோ அல்ல. உங்களுடைய சந்தேகத்தை விட்டு விடுங்கள். நான் ராமதாஸன். பரம்பொருளாகிய ஸ்ரீராமபிரானின் அடிமை. சுக்ரீவனின் அமைச்சன். வாயு தேவரின் புதல்வன்."

உடனே சீதை, "மனிதருக்கும் குரங்குகளுக்கும் இடையே எப்படி நட்பு ஏற்பட முடியும்? நீயோ இராமனுக்கு அடிமை என்கிறாய்." எனக் கேட்டாள்.

அதற்கு ஹனுமான் கூறிய விளக்கமாவது:- "சபரியின் வேண்டுகோளின்படி ஸ்ரீராமன் ரிஷியமூக மலைக்கு வந்தார். சுக்ரீவன் ராமலக்ஷ்மணர்களைப் பார்த்தார். என்னை அவர்களுடைய மனநிலையை அறிந்து வருமாறு அனுப்பினார். நான் ராமனிடம் வந்து அவருடைய தூயமனப்பாங்கை அறிந்து கொண்டேன். இருவரையும் என்தோள்களில் சுமந்து சென்று சுக்ரீவனோடு நட்புக்கொள்ளுமாறு செய்தேன்.

''சுக்ரீவன் மனைவியை வாலி வைத்திருந்தான். ஸ்ரீராமன் வாலியைக் கொன்று சுக்ரீவனை கிஷ்கிந்தைக்கு மன்னனாக்கினார். உங்களைத்தேடுவதற்கு சுக்ரீவன் வலிமை மிகுந்த வானர வீரர் களை எல்லா திசைகளுக்கும் அனுப்பினார். அப்போது ஸ்ரீராம பிரான் என்னிடம், '' எனது இந்த வேலை உன்னையே மிகவும் பொருந்திருக்கிறது. நீ சீதையிடம் எங்கள் இருவரின் நலன் களைத் தெரிவி. நம்பகமான அடையாளமாக என் பெயர் பொறிக்கப்பட்ட இந்தக் கணையாளியை (மோதிரம்) அவளிடம் கொடு.''

'' என்று கூறிக்கொண்டே தன் மோதிரத்தை கைவிரலில் இருந்து கழற்றி என்னிடம் தந்தார். நான் அதை மிகவும் ஜாக்ரதையுடன் கொண்டு வந்திருக்கிறேன், தாயே! அதை இதோ பாருங்கள்.'' ஹநுமான் ராமநாமம் பதிந்துள்ள அந்த அங்குளியத்தை சீதாதேவியிடம் சமர்ப்பித்து விட்டு தூர விலகி கைகளைக் கட்டிக் கொண்டு நின்றார்.

மோதிரத்தையும் அதில் காணும் ராமநாமத்தையும் கண்ட ஜானகி மட்டில்லா மகிழ்ச்சி கொண்டாள். அதைத் தன் சிரசின் மீது வைத்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள்.

பிறகு சீதை ஹநுமானிடம், ''நீ என் நிலையை ஸ்ரீராம னிடம் எடுத்துச் சொல். அவருக்கு என்மீது இரக்கம் ஏற்படட் டும். என்வாழ்வு இன்னும் இரண்டே மாதங்கள்தான் நீடிக்கும். ராமன் வரவில்லையானால் இராவணன் என்னைக் கொன்று சாப் பிட்டு விடுவான்'' என்று கூறினாள்.

அதற்கு ஹநுமான், '' ராமன், லக்ஷ்மணன் இருவரும் சுக்ரீவனுடன் பெரும் வானரப் படைகளை கூட்டிக் கொண்டு வெகுவிரைவில் வரப் போகிறார்கள். நிச்சயமாக அவர் இந்த இராவணனைக் கொன்று உங்களை அயோத்திக்கு அழைத்துச் செல்வார். இதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. ஓ தேவி! ஸ்ரீராமனிடம் உங்களைசந்தித்ததற்கு அடையாளமாக ஏதாவது ஒன்றைக் கொடுங்கள். அதனால் ஸ்ரீராமனுக்கு என்மீது நம்பிக்கை உண்டாகட்டும்'' என பணிவுடன் கூறினார்.

சீதாதேவி சொன்னாள், ''முதலில் நீ இராமலக்ஷ்மணர்களிடம் நான் அவர்களுடைய நலனை மிகவும் கேட்டதாகவும் அவர்களைக் காண துடித்துக் கொண்டிருப்பதாகவும் சொல்'' பிறகு தன் தலையில் அணிந்திருந்த சூடாமணி என்ற நகையை ஹநுமானிடம் கொடுத்தாள். ''நீ இதை ராமனிடம் தந்து உன்மீது அவருக்கு நம்பிக்கை ஏற்படச் செய்,'' என்று கூறினாள்.

ஹநுமானே! இத்துடன் மேலும் ஒருவிஷயம் சொல்கிறேன் கேள், நாங்கள் சித்திர கூடத்தில் இருந்த பொழுது ஸ்ரீராமன் தலையை என் மடியின்மேல் வைத்தபடி நித்திரை செய்து கொண்டிருந்தார். அப்பொழுது இந்திரனின் புதல்வன் ஒரு காக்கையின் உருவெடுத்துக் கொண்டு என் கால் விரலைக் கொத்தி இரத்தம் பீறிட்டு வரும்படிச் செய்தான். ராமபிரான் எழுந்துஎன்காலில் இருந்த புண்ணைக்கவனித்தார். என் முன்றல் அலகில் இரத்தம் சொட்ட நின்ற அந்தக் காகத்தையும் கண்ணுற்றார். உடனே ஒரு தர்ப்பைப் புல்லை எடுத்து பிரம்மாஸ்திர மந்திரத்தால் காகத்தின் மீது அதை ஏவினார். காகம் மூவுலகங்களும் சுற்றித் தப்ப முயன்றது. இந்திரனும், நான்முகனும் கூடதொடரும் அந்த அஸ்திரத்திலிருந்து காகத்தைக் காப்பாற்ற முடியவில்லை. கடைசியாகஅது இராமபிரானின், காலடியிலேயே வந்து விழுந்தது. ராமபிரான், ''இந்த ஆயுதம் எய்யப்பட்டு விட்டால் பயனற்றுப்போவதில்லை. எனவே உன் கண்களில் ஒன்றை இதற்கு பலியாக்கிவிட்டு ஓடிப்போ'' என்றார். காகம்தனது இடது கண்ணை இழந்து விட்டு ஓடிப்போயிற்று, ஹநுமானே! இந்த நிகழ்ச்சியை நீ இங்கு வந்து என்னைக்கண்டதற்கு அடையாளமாக ஸ்ரீ ராமனிடம் கூறுவாய்.''

சீதை தந்த சூடாமணியை மிக்க மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்ட ஹநுமான் சீதைக்கு அடிபணிந்து தன் வணக்கங்களைச் செலுத்தினார். பிறகு சீதை ஹநுமானிடம் கூறினாள், ''நீ எப்படி இந்த அரக்கர்களுடன் போரிடப் போகிறாய்? எல்லாக் குரங்குகளும் உன்னைப்போல சிறிய உருவங்களுடனே தான் இருக்குமல்லவா?'' உடனே ஹநுமான் தான் கடல் தாவும் போது எடுத்துக்கொண்ட மேரு, மந்தரமலைகளைப் போன்ற

பேருருவமுடன் காட்சி தந்தார். இதைக்கண்டு வியந்த சீதை, ''அப்பா! நீ நிச்சயமாகவே வெற்றி அடைவாய்'' என்று வாழ்த்தினாள்.

பின்பு ஹநுமான் தனக்குள்ளே, ''நான் என் தலைவன் ர்ராமபிரானின் காரியமாக இங்கு வந்துள்ளேன். இன்னும் சில காரிங்களையும் செய்து முடிக்கிறேன். நான் இராவணனைக் கண்டு பேசவேண்டும்'' என்று எண்ணினார். திடீரெனக் கிளம்பி அந்த அசோக வனத்திலுள்ள பெரிய பெரிய மரங்களை வேரோடு பிடுங்கி ஆகாயத்தில் எறிந்தார். அவ்வனம் முழுவதையும் நாசமாக்கினார். அங்கிருந்த அரக்கியர் பலரைக் கொன்றார். அவர்களில் சிலர் சென்று ஹநுமானின் இச்செயலை ராவண னிடம் கூறினர். ராவணன் ஒரு அரக்கர் படையை ஹநுமானை எதிர்க்க அநுப்பினான். ஹநுமான் ஒரு நீண்டதடியைக் கொண்டு அவர்கள் எல்லோரையும் அடித்து நொறுக்கி தூளாக்கினார். இது கேட்ட இராவணன் மிகவும் ஆக்ரோஷமடைந்தான். பிறகு தனது போர்த்தலைவர்கள் ஐவரையும், மந்திரிகளின் புதல்வர் களையும் பெரும் படையுடன் அநுப்பினான். ஹனுமான் அவர்கள் எல்லோரையும் கொன்று வீழ்த்தினார் அதன் பிறகு இராவ ணன் தன் புதல்வனை அக்ஷயகுமாரனை படையுடன் அநுப் பினான். ஹநுமான் அவன்தலையில்தடியால் அடித்துக்கொன்றார்.

கடைசியாக, இந்திரஜித்து தானே நேரில்வந்து ஹநுமானை எதிர்த்தான். அம்புகளால் ஹநுமானின் உடலைத் துளைத்தான். ஹநுமான் அவ்வம்புகளை கைகளில் பிடித்து ஒடித்து எறிந்தார். பிறகு சிங்கம் போல் கர்ஜனை செய்தார். பிறகு ஹநுமான் அங்கிருந்த ஒரு தூணை எடுத்து இந்திரஜித் தின் தேரோட்டியை அடித்துக் கொன்றார். அவனுடைய தேரையும் குதிரைகளையும் நொறுக்கி நாசமாக்கினார். இந்தி ரஜித்து ஹநுமானை பிரம்மாஸ்திரத்தால் கட்டி இராவணன் முன்பு கொண்டு நிறுத்தினான். அந்த அஸ்திரத்துக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும் என்பதற்காக அனுமான் தான் அதில் கட்டுண்டது போல நடித்தார்.

அனுமானுக்கு நான்முகன் கொடுத்திருந்த வரத்தால் பிரம்மாஸ்திரம் அவரைக் கட்டவில்லை. இராவணன் பிரஹஸ் தனைப் பார்த்து, '' பிரஹஸ்தா ! இந்த குரங்கு இங்கு ஏன்

வந்திருக்கிறது. வந்த காரணம், எங்கிருந்து வந்தது, அசோக வனத்தை ஏன் அழித்தது, என் அரக்கர்களை ஏன் கொன்றது என்ற விவரங்களைக் கேள்? என்று மிடுக்குடன் கேட்டான்.

பிரஹஸ்தன் சொன்னான், ''ஏ குரங்கே! நீ யாரால் இங்கு அனுப்பப்பட்டாய்? பயப்படாதே. உன்னை நான் விடுவித்து விடுகிறேன். அரசன் முன்பு உண்மை முழுவதையும் ஒன்று விடாமல் கூறிவிடு.''

அங்கே அனுமான் பேசலானார்; ஓ இராவணா! நான் சொல்வதை நன்றாய் கேள். எல்லாருடைய இதயங்களிலும் நிலை கொண்டுள்ள ஸ்ரீராமனுடைய தூதன் நான்.. ஒரு பெண் நாய் ஹோமதிற்காக வைத்திருந்த ஆஹூதிப் பொருளைத் திருடிக் கொண்டு போவதைப் போல நீ அவருடைய தர்ம பத்னியான சீதையை கடத்திக்கொண்டுவந்துள்ளாய். ஸ்ரீராமன்இப்போது மதங்கமலைக்கு வந்து சுக்ரீவனுடன் அக்கினி சாட்சியாக நட்பு உறவு செய்து கொண்டிருக்கிறார். ஒரே அம்பால் அவர் வாலியை கொன்றார். சுக்ரீவனுக்கு முடிசூட்டினார்.''

''வானரப் படைகளின் தலைவனான சுக்ரீவன் உன் மீது கடுங்கோபம் கொண்டுள்ளான். சுக்ரீவனின் வீரத்தையும் ஆற்றலையும் போரிடும் திறமையையும் நீ அறியமாட்டாய். அவர் இப்போது வார்ஷா மலையில் கோடிக்கணக்கான வானரப் படைகளுடன் போர் செய்ய ஆயத்தமாய் இருக்கிறார். மேலும் இராமனும் லக்ஷ்மணனும் அவருக்கு உற்ற நண்பர்களாய் உள்ளனர். சுக்ரீவனின் ஆணையால் சீதையைத் தேட எல்லா திசைகளுக்கும் வானரவீரர்கள் அனுப்பப்பட்டுள்ளனர். நான் வாயுவின் புதல்வன். நானும் சீதையைத் தேடி வந்துள்ளேன். இங்கு அவளைக் கண்டு கொண்டேன். நான் ஒரு குரங்காக இருப்பதால் இந்தவனத்தை நாசம் செய்தேன். என்னை காத்துக் கொள்ள அரக்கர்களைக் கொன்றேன். மேகநாதன் பிரம்மாஸ்திரத்தால் என்னைக் கட்டி இங்கே கொண்டு வந்துள்ளான்.''

அந்த பிரம்மாஸ்திரம் பிரமனிடம் நான் பெற்றுள்ள வரத்தால் என்னைக் கட்டவில்லை. உன்மீது இரக்கம் கொண்டு உனக்கு நல்லுரை கூறுவதற்காக கட்டுப்பட்டவன் போல் நடித்து வந்திருக்கிறேன்.''

"இராவணு! அதர்மத்தை விட்டு தூய தெய்வீகவாழ்க்கையை நடத்து வாயாக. அதுவே உன்னை பிறவா நன்னிலைக்கு இட்டுச்செல்லும். நீ சிறந்த பிராமண குலத்தில் பிறந்தவன். புலஸ்தியரின் பேரனும் குபேரனின் சகோதரனும் ஆனவன் நீ. நீ ஒரு அரக்கன் அல்ல. இந்த வெளித்தோற்றமான பௌதீக பருவுடல் அல்லநீ. மாறுதல்களுக்கு இடமான இவ்வுலக இயல்புகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் நீ. கவலையும் துன்பங்களும் இந்த பருவுடலிலிருந்து தான் தோன்றுகின்றன. துயரம் அறியாமையால் கனவுகளில்காணும் காட்சிகள் போல உண்டாகிறது. உண்மையில் நீ ஆத்மாவின் சாரமே. ஆகாயம் எதனுடனும் ஒட்டாமல் எல்லாவற்றின் மாறுதல்களுக்கும் இருப்பிடமாய் அமைந்துள்ளதோ அதே போல நீ ஆத்மஸ்வரூபமாக எதிலும் படாமல் மாறுதலற்ற நிலையில் இருக்கின்ருய். இந்த உடலே தான் ஆத்மா என்ற கருத்துக் கொண்டிருப்பதே எல்லா வகைத்துன்பங்களுக்கும் மூலகாரணம்."

"இந்த உடல் உயிர் அல்லது ஜீவன் அல்ல. இது பிருதிவியின் (Easir) விகாரத்தோற்றமாகும். சுவாசம் காற்றின் மாறுபட்ட நிலையாகும்; மனமும் ஜீவனல்ல. அது இயற்கையின் மாறுதலாகும்."

ஆத்மாவோ ஆனந்த விஞ்ஞானத்தின் உருவகம். எல்லா மாறுதல்களுக்கும் அப்பாற்பட்டது. அதுஉடல் மனம் இவற்றின் சேர்க்கையை விட்டு விலகி தனித்து நிற்பது அதுவே இவையாவற்றையும் இயக்கும் தலைமை பீடம். "நான் உண்மை அறிவேயாகும்; நான் ஆனந்தமே; நான் பிறப்பு மறைவு அற்றவன். இதை உய்த்து உணர்வதால் முக்தியை அடைகிருன். இந்த ஆத்மா தொடர்பும் பிழைகளும் அற்றதாகும். இது எல்லா உபாதிகளுக்கும் (குறைபாடுகள்) அப்பாலே பூரணமாய் உள்ளதாகும். இவ்வாறு இந்த ஜீவனின் உண்மை நிலையை அறிவதால் பிறப்பு இறப்பு இல்லாத விடுதலையை ஒருவன் பெறுகிருன்.

"பிறப்பு இறப்பு என்ற சுழற்சியிலிருந்து முற்றிலும் விடுதலை பெறுவதற்கான வழியை உனக்குச் சொல்கிறேன். விஷ்ணுவிடம் பக்தி செய்வது இதயத் தூய்மைக்கு மிகவும் சிறந்ததாகும். அந்த பக்தியிலிருந்து ஞானம் உண்டாகிறது. ஞானத்திலிருந்து புனித ஜீவாத்மாவின் உணர்வு ஏற்படுகிறது.

இந்தமுறையை நன்கு அறிந்து நடப்பவன் பரமாத்மாவில் இணைந்து ஒன்றி விடுகிறான்.

"எனவே நீ இன்று சீதையின் கணவரும் மஹாவிஷ்ணுவின் அம்சமுமான ஸ்ரீ ராமபிரானை வழிபடுவாயாக. சீதை மஹாலக்ஷ்மி. முட்டாள்தனமான பகைமையை முற்றிலும் ஒழித்துவிடு. ஸ்ரீராமனைச்சேவி. சீதையை அழைத்துக்கொண்டு உன்மனைவி மக்களுடன் சென்று ஸ்ரீ ராமனைத் தஞ்சமடை. அதனால் உனது பயம் யாவும் நீங்கி சுகமடைவாய்."

ஸ்ரீராமனிடம் பக்தி செலுத்தாமல் எவன் இந்த சம்ஸாரம் என்ற துன்ப அலைகள் நிறைந்த கடலைக் கடக்க முடியும்? ஸ்ரீ ராமன் எல்லாருடைய இதயங்களிலும் குடிகொண்டுள்ளான். அவனே ஆத்மாராமன். அவனே ஆனந்தராமன். அவனே பரம்பொருள். இதை நீ நன்கு அறிவாயாக."

"நான் கூறுவதை நீ கவனிக்காவிடில் அறியாமை நெருப்பில் எரிந்து நாசமடைவாய்; உன்னுடைய தீயசெயல்கள் உன்னை அறியாமை நரகத்தில் வீழ்த்திவிடும். முக்தியின் நிழல் கூடஉன்மீது விழாது. இராமனிடம் நீ பகைகொண்டால் உன்னையே உன்னால் காப்பாற்றிக்கொள்ள முடியாது."

இராவணன் ஹநுமானின் பேச்சைக்கேட்டு அளவு கடந்த கோபமடைந்தான். அவன் கூறினான்:–

"நீ ஏன் என் முன்பு சிறிதும் பயமில்லாமல் பொருளற்ற சொற்களைப் பேசுகிறாய்? குரங்குகளில் நீ மிகவும் அற்பமானவன். மனிதர்களில் மிகவும் இழிவான இராமனை சுக்ரீவனுடன் சேர்த்து நான் கொல்லப் போகிறேன். இன்று முதலில் உன்னைக் கொன்று விட்டு, சீதையையும் கொல்வேன்."

இதைக்கேட்ட ஹநுமான், "தீயகுணம் கொண்ட அரக்கனே! உன்னைப் போன்ற வலிமை மிகுந்தவர் ஒரு கோடி வந்தாலும் எனக்கு இணையாக மாட்டார்கள்" என்று மிகவும் ஏளனமாகக் கூறினார். உடனே இராவணன் அங்கிருந்த அரக்கரைப் பார்த்து, "இந்தக் குரங்கை துண்டு துண்டாக வெட்டிக் கொல்லுங்கள்" என்றான். அப்போது இராவணனின் தம்பி விபீஷணன் இடை மறுத்து, "மன்னவ! வேறு ஒரு மன்னனால்

அனுப்பப்பட்ட தூதனைக் கொல்வதுதகாது. இவனைக் கொன்று விட்டால் நீர் கொல்ல எதிர் பார்க்கும் இராமனிடம் இச்செய்தியை யார் போய்ச் சொல்வார்கள்? எனவே கொல்வதற்கு சமமான வேறு ஏதாவது ஒரு தண்டனையை கொடுப்பீராக. அந்த அடையாளத்தை இராமனிடம் காட்டினால் அவரும் சுக்ரீவனும் உம்முடன் போர் செய்ய வருவார்கள். நீரும் போரில் உமது விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம்'' என்று உரை செய்தான்.

## 4. ஹநுமான் இலங்கையை எரித்தல்

இராவணன் சொன்னான், ''குரங்குகளுக்கு அவற்றின் வாலின் மீதுதான் பிரியம் அதிகம். இவனுடைய வாலைத் துணிகளால் நன்றாகச் சுற்றி எண்ணெய் ஊற்றி அதில் தீயை மூட்டுங்கள். நகரம் முழுவதும் அழைத்துச் சென்று பிறகு விட்டு விடுங்கள். நகரமக்கள் கண்டு களிக்கட்டும்.''

அரக்கர்கள் ஹனுமானின் வாலில் துணிகளை எண்ணெயில் நன்றாக நனைத்து சுற்றினார்கள். பிறகு அதன்மேல் தீயிட்டார். அவரை கயிறுகளால் கட்டி இலங்கை வீதிகளில் இழுத்துச் சென்றார்கள். அப்போது மேளவாத்தியங்கள் முழங்கின. ''இந்த குரங்கு ஒரு திருடன்'' என்று அரக்கர்கள் கூவிக் கொண்டு சென்றனர்.

திடீரென்று ஹநுமான் தனது உருவத்தை சிறியதாக்கிக் கொண்டு கட்டுக்களிலிருந்து விடுபட்டு வெளியேறினார். உடனே மலைஅளவாகத் தன்உருவை மாற்றிக் கொண்டார். அங்கிருந்த தூண் ஒன்றைப் பிடுங்கி அரக்கர் கூட்டத்தை அடித்து நொறுக்கினார். ஒவ்வொரு வீடாகத் தாவிக் குதித்து இலங்கை நகரம் முழுவதையும் தீக்கு இரையாக்கினார். விபீஷணன் வீடு நீங்கலாக இலங்கை முழுவதும் எரிந்து சாம்பலாயிற்று.

பிறகு அனுமான் கடலுக்குள்ளே பாய்ந்து தன்மீது எரியும் நெருப்பை அணைத்தார். அனுமானின் வாலை தீ ஒன்றுமே செய்யவில்லை. ஸ்ரீராம நாமத்தை மனதில் கொண்டால் ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம் என்ற சம்ஸார அக்கினிகளான மூன்றுமே அணைந்து விடும். அப்படி இருக்க

ஸ்ரீராமபிரானின் சிறந்த தூர்தரான அனுமானை சாதாரண நெருப்பு என்ன செய்ய முடியும்.

அதன் பிறகு அனுமான் மறுபடியும் சீதையைக் காணச் சென்றார். தான் செய்துள்ள யாவற்றையும் அவளிடம் கூறி அடிபணிந்து வணங்கினார். " நான் ஸ்ரீராமபிரானிடம் செல்கி றேன். அவர் விரைவில் தன் தம்பியுடன் தங்களைக் காண வருவார்'' என்றார்.

அதற்கு சீதை, ''நான் உன்னைக்கண்ட பிறகு எனது துயரங்கள் யாவற்றையும் மறந்து விட்டேன். இப்பொழுது நீ போய் விடுவாய். நான் எப்படி ஸ்ரீராமபிரானின் க்ஷேமத் தை அறியாமல் வாழ்வேன்? என்றாள்.

''அப்படியானால் நீங்கள் என் தோள்மீது அமருங்கள் நான் நொடிப்பொழுதில் ராமபிரானிடம் கொண்டு சேர்த்து விடுகி றேன்'' என்றார் ஹநுமான்.

அதற்கு சீதை, ''ஸ்ரீராமபிரான் இங்கு வரவேண்டும், இராவணனுடன் போர்செய்து அவனைக் கொன்று விட்டுப் பிறகு தான் என்னை அழைத்துச் செல்லவேண்டும். அப்பொழுது தான் அவருடைய வீரத்தை உலகம் பேசும்,

பிறகு அனுமான் மலையடிவாரம் சென்று கடலைத் தாண்ட ஆரம்பித்தார். சற்றுநேரத்தில் மிகுந்த வேகத்தோடு ஆகாய மார்க்கமாகப் பாய்ந்தார். தான் அடைய வேண்டிய இடத்தை நெருங்கியதும் வீரகர்ஜனை செய்தார். அதைக் கேட்டு எல்லா வானரர்களும்அனுமான் வெற்றியோடுவருகிறார் என்றுமகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். பதிலுக்கு அவர்களும் கூச்சலிட்டனர்.

''அனுமான் காரியத்தைச் சாதித்துக் கொண்டுவருகிறார்'' என்று சொன்னார்கள். அனுமான் மலையின் சிகரத்தில் இறங் கியதும், '' நான் சீதையைப் பார்த்து விட்டேன். இலங்கை யையும் அதன் உபவனங்களையும் நாசம் செய்தேன். இராவ ணனுடன் நேரடியாகப் பேசினேன்.'' என்று பெருமிதத் தோடு கூறினார். எல்லா வானர வீரர்களும் அநுமானை மார்பு றத்தழுவிக் கொண்டனர். அவர்கள் சொன்னார்கள்,'' நாம்

எல்லோரும் ஸ்ரீராமபிரானிடமும் சுக்ரீவராஜாவிடமும் உடனே புறப்பட்டுச் செல்வோம்.

பிறகு அவர்கள் எல்லோரும் வேகமாக சுக்ரீவனையும் ஸ்ரீராமனையும் காணச் சென்றனர். வழியில் சுக்ரீவனின் மதுவனத்தைக்கண்டனர். எல்லோரும் அவ்வனத்துள் சென்று அதன் காவலாளிகளை நன்றாக அடித்து விரட்டி விட்டு பழங்களையும் தேனையும் வயிறார உண்டு மகிழ்ந்தனர்.

## 5. ஹநுமான் ஸ்ரீராமனைச் சந்தித்தல்

அனுமான், அங்கதன் ஜாம்பவான் முதலிய வானரத்தலைவர்கள் ஸ்ரீராம சுக்ரீவர்களின் முன்பு சென்று நின்றனர். அனுமான் ராமபிரானை அடிபணிந்து வணங்கி விட்டு கூறலானார். "கண்டேன் சீதையை சுவாமி! அவர் நலமாக இருக்கிறார். தங்களுடைய நலத்தையும் இலக்ஷ்மணனின் நலத்தையும் மிக ஆவலுடன் கேட்டார்கள். அசோகவனத்தில் சிம்சுபா மரத்தின் அடியில் அமர்ந்துள்ளார். அவருடைய உடல் மிகவும் இளைத்து காணப்படுகிறது. அரக்கியரின் கூட்டம் அவரைச் சூழ்ந்துள்ளது. அழுக்கான ஆடை அணிந்துள்ளார். உணவு உட்கொள்ளவில்லை. எப்போதும் 'ராம, 'ராம' என்றபடியே இருக்கிறார். நான் மரக்கிளைகளின் நடுவே மறைந்தபடி இருந்து கொண்டு தங்களுடைய பிறப்பு, விவாஹம், தண்டகவனம் வந்தது, தாங்கள் இல்லாத சமயம் இராவணன் சீதையை அபகரித்துச் சென்றது, சுக்ரீவனுடன் ஏற்பட்ட நட்பு, ஜானகியைத் தேட வானரர்கள் எல்லா திசைகளிலும் சென்றது, வாலி வதம் ஆகிய வரலாறுகள் யாவற்றையும் ஒன்று விடாமல் கூறினேன். மேலும் தொடர்ந்து சொன்னேன், "வலிமை மிகுந்த வானரர்கள் எல்லா திசைகளுக்கும் சென்றுள்ளார்கள். அவர்களில் நானும் ஒருவன் இங்கு வந்துள்ளேன்." அவர் இதைக் கேட்டு எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தார்கள். அவர், 'யார் அமிர்தத்திற்கு ஒப்பான சொற்களை என் காதுகள் இனிக்கக் கூறுவது? அவர் என் முன்பு வந்து நிற்கட்டும்' என்று புகன்றார். உடனே அவர் முன்பு இறங்கி அடிபணிந்து வணங்கி விட்டு கை கூப்பி நின்றேன்."

"நான் யார் என்று அம்மையார் கேட்டார். நான் எல்லா விபரங்களையும் ஒன்றுகூட விடாமல் தெளிவாகச் சொன்னேன். பிறகு தாங்கள் என்னிடம் கொடுத்திருந்த மோதிரத்தை அவர்களிடம் அளித்தேன். அதன் பிறகுதான் என் மீது அவர்களுக்கு முழு நம்பிக்கை உண்டாயிற்று. அனுமானே ஸ்ரீராமனிடம் இந்த அரக்கிகள் என்னைப் படுத்தும் பாட்டை விளக்கமாகக் கூறுவாய் என்றார். நான் சொன்னேன், " மதிப்பிற்குரிய அம்மையே! ஸ்ரீராமன் எப்போதும் உங்கள் நினைவாகவே இருக்கின்றார். இரவு பகலாக உங்களை எண்ணியே வருந்துகிறார். அசோக வனத்தில் நீங்கள் இருப்பதை அறிந்தவுடன் சற்றும் தாமதியாமல் சுக்ரீவன், தம்பி லக்ஷ்மணனுடன் வானரப் படைகளைத் திரட்டிக் கொண்டு இலங்கைக்கு வந்து விடுவார். நிச்சயமாக இராவணனை வதம் செய்து உங்களை அயோத்திக்கு அழைத்துச் செல்லப் போகிறார். இது நிச்சயம். ஸ்ரீராமபிரானுக்கு நான் உங்களைக் கண்டதற்கு அடையாளமாக ஏதாவது கொடுங்கள்" " என்றேன்.

"அதற்கு அவர் தன் தலையில் அணிந்திருந்த சூடாமணியைத் தந்தார். அத்துடன் தாங்கள் சித்திர கூடத்தில் தங்கி இருந்த போது நிகழ்ந்த காக்கையின் வரலாற்றையும் கூறினார். மேலும் சொன்னார், " இரண்டு மாதங்களுக்குள் தாங்கள் வராவிடில் இராவணன் தன்னை கொன்று உணவாக உட்கொண்டு விடுவான்" " என்றார்.

பிறகு ஹனுமான் ஸ்ரீராமபிரானிடம் சீதை தந்த சூடாமணியை ஸமர்ப்பித்தார்.

ஸ்ரீராமன் அதை வாங்கிக் கொண்டு, "இந்தச் சூடாமணி சீதையின் தலையில் ஒளி வீசிக்கொண்டிருந்ததை நான் கண்டிருக்கிறேன். இதைப் பார்க்கும்போது சீதையையே நேரில் காண்பது போல் உணர்கிறேன்" என்று கூறி வருந்தினார்.

பிறகு ஹநுமார் தொடர்ந்து பேசலானார். "சுவாமி! கண்களில் நீர் மல்க தேவியார் என்னிடம் சொன்னதாவது, "நீ இராமபிரானிடம் கூறுவாய், "நான் தைரியமாய் இருக்கிறேன். எனது க்ஷேமத்தை இலக்ஷ்மணரிடமும் சொல். நான் ஒரு சமயம் ... வரைப் பார்த்துச் சொன்ன கடுஞ் சொற்களை மன்னிக்கும்

படி நான் சொன்னதாகவும் அதற்காக் வருந்துவதாகவும் சொல் வாய், என்று சொல்லிக் கொண்டே அழுதார்.

நான் சமாதானம் செய்து, ''நான் எல்லாவற்றையும் விவ ரமாக ஸ்ரீ ராமனிடம் கூறுவேன். நீங்கள் வருந்த வேண்டாம். ராமனும் லக்ஷ்மணனும் வெகு விரைவில் உங்கள் முன்பு தோன் றுவார்கள். அவர்கள் இராவணனையும் அவன் மக்களையும் கொடிய அரக்கர்கள் எல்லோரையும் அழிக்கப் போகிறார்கள். சீக்கிரமாகவே ஸ்ரீராமபிரான் தங்களுடன் அரியணையில் அமர்ந்து அயோத்தியில் முடி சூட்டிக்கொள்ள போகிறார்.''

''பிறகு நான் அசோக வனத்தை அழித்தேன். எதிர்த்து வந்த பல அரக்கர்களைக் கொன்றேன். இராவணனின் புதல் வன் அக்ஷயகுமாரன் என் கையால் மாண்டான். இலங்கை முழு வதையுமே நெருப்புக்கு இரையாக்கினேன்.''

ஆஞ்சனேயரின் பேச்சைக் கேட்ட பிறகு ஸ்ரீ ராமன் அள வற்ற ஆனந்தம் கொண்டார். உடனே அஞ்சநேயரிடம், ''ஆற் றல் மிகுந்த வீரனே! நீ செய்துள்ள இச் செயல் தேவர்களால் கூட செய்ய முடியாததாகும். எனக்குச் செய்துள்ள இந்த சேவைக்குக் கைம்மாறாகவோ பரிசாகவோ கொடுக்க என்னிடம் ஒன்றுமே இல்லை.''

'' மாருதி! இப்போது என்னிடமுள்ள எல்லாவற்றையும் உனக்கு அளிக்கிறேன்'' என்றவாறு ஹனுமானை மார்புறத் தழுவிக் கொண்டு கண்ணீர் சொரிந்தார். '' நீ என்க்கு யாவரி னும் மிக உகந்த அன்பன். இந்த ஆலிங்கனம் உலகில் எவரா லும் அடைய முடியாதது'' என்று கூறி ஸ்ரீ ராமபிரான் மகிழ்ந்தார்.

ஜனங்கள் ஸ்ரீ ஹரியின் பரம பதத்தை அவரது இணையடி களில் துளஸிதளங்களால் அர்ச்சித்து அடைகின்றனர். அப்படி இருக்க மகத்தான அறச்சேவை செய்து ஸ்ரீராமபிரானின் ஆலிங்கனத்தை அடையப் பெற்ற ஹநுமானைப் பற்றி என்ன சொல்வது?

# 6. யுத்த காண்டம்

ஸ்ரீராமன் சுக்ரீவனிடம், "இதுதான் நல்ல புனிதமான காலம். போருக்கான படைகளைத் திரட்டுவீராக," என்று கூறினார். உடனே படைத்தலைவனான சுக்ரீவன் வானரப் படைகளை நடத்தினான். எல்லாப் படைகளும் கடற்கரை வந்து சேர்ந்தன.

தேவர்களால் கூட செய்ய முடியாத செயலைச் செய்து விட்ட ஹனுமானைப்பற்றி நினைக்கும்போது இராவணன் வெட்கத்தால் தலை குனிந்தான். தன்து மந்திரிகளை சபை கூட்டி அவர்களிடம், "இராமன் இலங்கையை நோக்கி வந்து கொண்டிருக்கிறான். எளிதாக கடலைக் கடந்து வந்து விடுவான். ஒரே குரங்கு இவ்வளவு பெரிய விஷமம் செய்து விட்டது. நகரம் முழுவதையும் ஹநுமான் எரித்து விட்டான். சீதையும் கண்டு பிடிக்கப்பட்டு விட்டாள். எனவே உங்களிடம் இப்போது ஆலோசனை கேட்க விரும்புகிறேன்," என்று சொன்னான்.

"அவர்கள் வரட்டும் நாங்கள் ராமன், இலக்ஷ்மணன், சுக்ரீவன், ஹநுமான் எல்லோரையும் இன்றே கொன்று விடுவோம்" என்று வலிமையுள்ள சில அரக்கர்கள் ஆவேசத்துடன் கூறினார்கள். அது சமயம் விபீஷணர் நடுவே எழுந்து கீழ்க்கண்டவாறு பேசலானார், "அன்புக்குரிய அண்ணா! கும்பகர்ணனோ அல்லது இந்திரஜித்தோ ஸ்ரீராமனைப் போரில் எதிர்த்து நிற்க முடியாது. இராமன் உமக்கு ஒரு தவறும் செய்யவில்லை. நீங்களோ சீதையை யாருக்கும் தெரியாமல் தூக்கி வந்துள்ளீர்கள். ஸ்ரீராமன் எப்போதும் தர்ம வழியையே பின்பற்றி நடப்பவர். பிறருடைய மனைவியை விரும்புவதே மகப் பெரிய பாவமாகும். இது உங்களுடைய நல்ல பெயரைக் கெடுத்துவிடும். அதோடு உங்கள் வாழ்விற்கும் உலை வைத்துவிடும். எனவே உடனேயே சீதையை ஸ்ரீராமனிடம் கொண்டு சேர்த்து மன்னிப்புக் கோருங்கள். ராமன் ஆற்றல் மிகுந்தவர். எல்லா தேவர்கள் வந்தாலும், ஏன், நீங்கள் வழிபடும் சிவபெருமானே வந்தாலும் இராமனிடமிருந்து உங்களைக் காப்பாற்ற முடியாது."

கொடிய இராவணன் விபீஷணன் கூறிய நன்மை பயக்கும் அறிவுரையை கொஞ்சமும் காதில் வாங்கவில்லை. இராவணன் சொன்னான், "நான் இராமனுக்குப் பயப்படவில்லை. சீதையை

யும் அவனிடம் கொண்டு சேர்க்கப்போவதில்லை. எல்லா தேவர்களின் உதவியுடன் அவன் என்னோடு போருக்கு வந்தாலும் என்னை அவனால் வெல்ல முடியாது. நீ ஒருநண்பன் உருவில் உள்ள எனது பரமவிரோதி. எனது உப்பைத்தின்று வாழ்கிறாய். இருந்தும் எனக்கு எதுநன்மையோ அதைச்செய்ய நீ விரும்பவில்லை. நீ ஒரு இழிந்த நன்றி கெட்ட நாய். ஒருவனுடைய உறவினன் அவனுக்கு நன்மையே செய்வான். உன்னைப் போல அவனுடைய விநாசத்திற்கு அடிகோல மாட்டான். ஒருவன் விஷமுள்ள பாம்புடன் கூடவாழலாம் ஆனால் உன்னைப் போல நண்பனைப்போல பேசி உயிருக்கு உலை வைப்பவனோடு ஒருபோதும் வாழக்கூடாது. ஆபத்து வேளையில் பகைவனாக மாறும் சகோதரன் எனக்குத் தேவையில்லை. வேறொரு அரக்கன் இப்படி ஒருவார்த்தை சொல்லி இருந்தால் இதற்குள் அவன் தலை கீழே உருண்டிருக்கும். சீ! நீ ராக்ஷஸனா? அரக்கரின் குலத்திற்கே ஒரு சாபக்கேடு.'' நீ போய் இராமனுடன் சேர்ந்து கொண்டு அவனுக்குச் சேவை செய்.''

வீபிஷணன் உடனே அந்தசபையிலிருந்து வெளியேறினான் இராவணனைப் பார்த்து, ''உமக்கு நன்மை பயக்கும் வாசகங்களை நான் சொன்னேன். நீரோ என்னைப் புண்படுத்தி இழிவு செய்தீர். இருந்த போதிலும் நீர் எனக்கு மூத்த சகோதரர், தந்தைக்கு நிகரானவர். ஆனாலும் அறநெறிவழுவி செல்லாதீர். உம்முடைய உயிருக்கு நீரே நாசத்தை விளைவித்துக் கொள்ளாதீர். ராமன் உம்மையும் உமது பிள்ளைகளையும் கொல்லவே போகின்றார். நான் ஸ்ரீ ராமனிடம் போகின்றேன் '' என வருத்தத்துடன் சொல்லி அந்த இடம் விட்டு நீங்கினான்.

## வீபீஷண சரணாகதி

விபீஷணன் தன் குடும்பம் இலங்கையில் தனக்கிருந்த எல்லாவிதமான தொடர்பு இவற்றை முற்றிலும் நீக்கிக் கொண்டு ஸ்ரீராமபிரானுக்கே சேவை செய்ய வேண்டும் என்ற தீவிர ஆசையுடன் வெளியேறினான்.

ராமபிரான் தங்கியுள்ள கடற்கரையை அடைந்து அவரிடம் சொன்னான், '' ஓ ராகவ! நான் இராவணனுடைய தம்பி என் பெயர் விபீஷணன். என் அண்ணனால்-தேச பிரஷ்டம் செய்யப்

பட்டுள்ளேன்; எனவே உம்மிடம் அடைக்கலம் அடைந்து உள்ளேன். சீதையை தங்களிடம் கொண்டுவிடும்படி பலதடவைகள் எடுத்துச் சொன்னேன். ஆனால் அவன் அதற்குச் சிறிதும் காது கொடுக்கவில்லை. விதியின் விளைவு அப்படி இருக்கிறது.''

அப்போது சுக்ரீவன் இராமனிடம் சொன்னான்; ''சுவாமி! இந்த தீய அரக்கனை நம்பக்கூடாது. இவன் ஆற்றல் மிகுந்த இராவணனின் சகோதரன். நம்மிடம் காணும் பலவீனத்தை அறிந்து நம்மைக் கொல்லவே வந்துள்ளான். இப்பொழுதே எனக்கு உத்தரவிடுங்கள். வானர வீரர்களைக்கொண்டுஇவனைக் கொன்று விடுகிறேன்.''

அனுமான் கூறியது, '' இந்த விபீஷணன் தங்களுடைய வீரத்தைக் கேள்விபட்டவன். இராவணனுடைய துர்நடத்தையை முற்றிலும் வெறுப்பவன். அவனைத் திருத்த முயன்றும் முடியாததால் இங்கே வந்துள்ளான். அண்ணனின் இராஜ்யத்தை தான் அடையவேண்டும் என்ற உட்கருத்தோடு தங்களிடம் வந்திருக்கிறான்.'' அதற்கு ஸ்ரீராமன், '' என்னை ஒருவன் சரண் அடைந்து விட்டால் அவனை நான் கைவிடமாட்டேன். அவன் எப்படிப்பட்டதீய எண்ணம் கொண்டவனானாலும் சரியே. இவனோ எனது பாதுகாப்பை நாடிவந்துள்ளான். இராவணனே இவ்வாறு வருவானானாலும் அவனுக்கும் நான் பாதுகாப்பு அளித்தே தீருவேன். விரோதியே அடைக்கலமாக வந்தாலும் ஒருவன் தன் உயிருக்கு ஹானி வருவதையும் கூடப்பொருட்படுத்தாமல் அவனுக்குத் தக்க பாதுகாப்பு தரவேண்டும். இது ஒரு சிறந்த கடமை எவராயினும் என்னிடம் வந்து, 'நீரே எனக்கு கதி' என்றால் நான் அது பிராணிகளாக இருந்தாலும் கூட பாதுகாப்பு அளிப்பேன். இது எனது விரதம்'' என்று விளக்கமாக எடுத்துச் சொன்னார்.

பிறகு ஸ்ரீராமபிரான் விபீஷணனை வரவேற்று நட்பின் அறிகுறியாக அவனை ஆலிங்கனம் செய்து கொண்டார். உடனே இலக்ஷ்மணனை கடலிலிருந்து தண்ணீர் கொண்டுவரச் சொன்னார். அதனால் விபீஷணனுக்கு அங்கேயே பட்டாபிஷேகம் செய்வித்தார்.

'' சந்திர சூரியர் உலகில் ஒளி வீசும் வரை பூமண்டலம்

இருக்கும் வரை எனது வரலாறு மக்களால் பேசப்படும் வரை இந்த விபீஷணன் இலங்கையை ஆட்சி செய்வானாக'' என்று ஸ்ரீராமபிரான் கூறி ஆசீர்வதித்தார்.

கடலரசன் ஸ்ரீராமன் வேண்ட அவர் முன் தோன்றவில்லை. உடனே கோபத்தை வரவழைத்துக் கொண்டு கடல் முழுவதையும் வற்றிப் போகும்படிச் செய்ய விரும்பினார். கையில் வில்லையும் அம்பையும் எடுத்தார். அந்த அளவிலேயே கடல் நீர் கரையிலிருந்து ஒருயோஜனை தூரத்திற்குக் கொதித்துக் கொந்தளிக்க ஆரம்பித்தது. உடனேயே சமுத்திர ராஜன் ஓடோடி வந்து ராமனின் அடிபணிந்து ''மன்னியுங்கள். நளன் என்ற வானர வீரன் கடலின்மீது ஒரு பாலத்தைக் கட்டட்டும்'' என்றான். நளன் மற்ற வானரர்களின் துணை கொண்டு நூறு யோஜனை தூரத்திற்கு பாலம் கட்டி முடித்தான். அதன் வழியாக எல்லா வானரப் படைகளும் கடலைக் கடந்தன.

ஸ்ரீராமபிரான் வாலியின் மைந்தனான அங்கதனிடம் இராவணனிடம் சென்று தான் கூறியதாகக் கீழ்க்கண்ட வற்றைச் சொல்லும்படி அனுப்பினார். ''ஏ அற்ப அரக்கனே! நான் இப்பொழுது இலங்கையின் தலைவாயிலில் காத்துக் கொண்டிருக்கிறேன். நான் உன்னை உனது தவறுக்காக தண்டிக்க வந்துள்ளேன். திருட்டுத்தனமாக சீதையைக் கவர்ந்து வந்த உனது போர்த் திறமையைக் காட்டு. சீதையை என்னிடம் சேர்த்து தஞ்சம் புகாவிடில், அரக்கர்குலம் முழுவதையும் வேருடன் நாசம் செய்து விடுவேன். தர்மத்தைக் கடைபிடிக்கும் விபீஷணன் இலங்கைக்கு மன்னன் ஆவான். நீ ஒரு முறை என் முன்பு தோன்றுவாயானால் திரும்ப உயிருடன் செல்ல மாட்டாய்.

ஸ்ரீராமபிரான் கூறிய இச்செய்தியை அங்கதன் சென்று இராவணனிடம் ஒப்புவித்தான். இராவணன் மிகவும் கோபமடைந்து அரக்கர்களைப் போருக்குத் தயாராகும்படி கட்டளையிட்டான்.

வானர போர் வீரர்களான படைத் தலைவர்கள் ஹநுமான், அங்கதன், குமுதன், நீலன் நளன், சரபன், மைந்தன், த்விவிதன், ஜாம்பவான், தஹிவக்ரன், கேசரி, தாரன் முதலானோர் கோடிக்

கணக்கான வானரப் படைகளுடன் இலங்கையை நான்கு புறமும் முற்றுகைபிட்டனர். அப்பொழுது ஸ்ரீராமபிரான் தனதுகோதண்டத்தில் பிறை வடிவாகவுள்ள ஓர்அம்பைவைத்து நாணைக் காது வரை இழுத்து இலங்கைக்குள் எய்தார். அது இராவணனுடைய அரியணை மீதிருந்த கொற்றக் குடையையும் அவன்து மகுடத்தையும் துண்டித்து விட்டு இமைப் பொழுதில் இராமனிடம் திரும்பியது.

அதிகாயன், பிரஹஸ்தன், மேஹநாதன் மஹோதரன், தேவசத்ரு, நிகும்பன். (கும்ப கர்ணனுடைய மகன்) தேவ தாங்கன், நரௌதகன் முதலிய ராட்சத வீரர்கள் தைரியத்துடன் போர்க்களம்வந்து வானர வீரர்களை எதிர்த்துப் போர் புரிந்தனர். வில் அம்புகள் ஈட்டிகள், கத்திகள் போன்ற விதவிதமான ஆயு தங்களைக் கொண்டு ஒருவரையொருவர் தாக்கி சண்டை யிட்டனர்.

ஸ்ரீராமனால் சில அரக்கர்கள் மாண்டனர். வேறு பலர் சுக்ரீவனால் உயிர் துறந்தனர். அனுமான் கையால் மாண்டவர் எண்ணிலடங்காதார். அங்கதனும் இலக்ஷ்மணனும் எவ்வள வோ பேரைக் கொன்றனர். ஸ்ரீராமன் எல்லா ஜீவராசிகளுக்கும் இறைவனாக இருந்தாலும் மனிதனாக உலகில் தோன்றி விளை யாட்டாக போர்களைப் புரிந்து எவ்வளவோ அறச்செயல்களையும் செய்துள்ளார்.

இராவணன் வித்யுஜ்ஜிஹ்வன என்ற மாயாவியை இராம னுடைய தலையையும், வில்லையும் ஜாலவித்தை மூலம் உண் டாக்கும்படிச் செய்தான். அவனும் அப்படியே வில்லையும் தலையையும் மாயவித்தையால் செய்தனன். அதைக் கண்டு இராவணன் மிகவும் மகிழ்ந்தான். பிறகு அந்த ராமசிரசுடன் அசோகவனத்தை அடைந்தான்.

சீதையிடம் அதைக் காட்டி, ''ஏ புத்தி கெட்ட பெண்ணே! இராமனை எண்ணி எண்ணி என்ன அடையப் போகிறாய்? அவனே போரில் மாண்டான். அவன் மீதுள்ள பற்றுதலை விட்டொழி. என் அரண்மனை ராணியாக வந்து விடு'' என்று சொன்னான்.

பிறகு வித்யுஜ்ஜிஹ்வனை அவள் முன்பு ராமனின் தலையை வைக்கச் சொன்னான். "அவள் தன் கண்களாலேயே அதைப் பார்க்கட்டும். தன் கணவனின் அவல நிலையைத் நன்றாகத் தெரிந்து கொள்ளட்டும்" என்று ஏளனமாகச் சிரித்தான்.

"சீதே! இது இராமனின் தலை. வீரமுள்ள பிரஹஸ்தன் இராமனைக் கொன்றான். அவனுடைய வில்லும் அம்புகளும் இதோ பார். எனவே இனி என்னை அடை" என்று கொஞ்சும் குரலில் கூறினான்.

சீதை தன் கண்களாலேயே இராமபிரானின் தலையையும் கோதண்டத்தையும் கண்டாள். எல்லையற்ற, கரை காணாத சோகக் கடலில் மூழ்கினாள். இராவணனைப் பார்த்து, "என்னை என்கணவரின் சவம் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்று அதன்மீது வீழ்த்தி என்னைக் கொன்றுவிடு" அதற்கு ஒன்றும் பேசாமல் இராவணன் தன் அரண்மனைக்குச் சென்று தவிர்க்க முடியாத மந்திராலோசனை செய்வதற்காக அழைக்கப்பட்டு விரைந்து சென்றான். இராவணன் அவ்விடம் விட்டு அகன்ற சற்று நேரத்தில் அந்தத் தலையும் வில்லும் மறைந்தன.

## கும்பகர்ணனின் மரணம்

பிறகு இராவணன் தூக்கம் விட்டு கும்பகர்ணனை எழுப்ப அரக்கர்களை ஏவினான். அரக்கர் அவ்வாணையை நிறைவேற்றினர். கும்பகர்ணன் இராவணனை அணுகி, "அன்பு மிக்க அண்ணா! நான் இப்பொழுது என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான்.

அதற்கு இராவணன் கூறியதாவது:- "தம்பி! நீ ஆழ்ந்த தூக்கத்தில் இருந்ததால் உனக்கு நடந்தவை ஒன்றுமே தெரியவில்லை. இராமனால் எனக்கு மிகுந்த பயம் உண்டாகியுள்ளது. இராமனும் அவனுடைய ஆட்களும் கடல் கடந்து இங்கே வந்துள்ளனர், அவர்கள் இலங்கையை முற்றுகையிட்டு நம் அரக்கரில் பெரும் பகுதியைப் போரில் அழித்து வருகின்றனர். இப்போது வானரப் படைகள் பெரும் வெற்றியுடன் இலங்கையினுள் நுழையவிருக்கின்றனர். எனவே நீ சென்று குரங்குகளையும் அந்த இரு சகோதரர்களையும் கொன்று விட்டுவா."

கும்பகர்ணன் சொன்னான், "அரசே! முன்பு நீ மந்திராலோசனை செய்த பொழுது நான் என்ன சொன்னேனோ அது இப்பொழுது உன் தீய செயலின் பலனாக உண்மையாயிற்று. விபீஷணன் சொன்ன அறிவுரையை பின் பற்றி நடப்பாயாக. அதுவே நம் எல்லோருக்கும் நன்மை விளைவிப்பதாகும். மேலும் உன் விருப்பம் எதுவோ அதன்படி நடந்து கொள்."

கும்பகர்ணனின் இந்த சொற்களைக் கேட்டு இராவணன் பெருங்கோபம் கொண்டான். "ஏ கும்பகர்ணா! உன்னை எனக்கு புத்திமதி சொல்வதற்கு இங்கே நான் அழைக்கவில்லை. ஓ மஹரிஷி! ஒரு ஸத்குருநாதர் தன் சீடனுக்கு உபதேசிப்பது போன்று எனக்கு பாடம் சொல்ல வந்து விட்டாயே. உன் கடமை என்னவென்றால் போர் புரிய வேண்டியதே. இல்லையெனில் போய்படுத்துத் தூங்கு."

கும்பகர்ணன், "அரசே! மகிழ்வாயாக, நான் உடனே சென்று இராமனது தலையை உன் முன்பு கொண்டு வந்து சமர்ப்பிக்கிறேன்" என்று கூறிவிட்டுப் போர்க்களம் நோக்கி சிங்கம் போல் கர்ஜித்துக் கொண்டு பெரும் அரக்கர் படையுடன் கிளம்பிச் சென்றான்.

பெரும் போர் மூண்டது. கும்பகர்ணன் வானரப் படைகளில் பாபெரும் பகுதியைக் கொன்று வீழ்த்தினான். தனது கதையை வீசி நாலாபக்கங்களிலும் விரோதிப்படையை அடித்து வீழ்த்தினான்.

ஸ்ரீராமபிரான் பெரும் அழிவைச் செய்து கொண்டு வருகின்ற கும்பகர்ணனின் வலது கையை வாயுவாஸ்திரம் கொண்டும் அவனது இடது கையை இந்திராஸ்திரம் கொண்டும் துண்டித்து வீழ்த்தினார். பிறகு மறுபடியும் இந்திராஸ்திரத்தை அவன் மீது எய்தார். அது அவனது சிறத்தைக் கொய்து கீழே தள்ளியது.

ஸ்ரீராமனால் தன் அன்புக்குரிய தம்பி கும்பகர்ணன் மாண்டதைக் கேட்ட இராவணன் ஆழ்ந்த துயரக் கடலில் மூழ்கினான். தனக்குள்ளே இராவணன் சொல்லிக் கொண்டான், "மிகுந்த தைரிய சாலியான கும்பகர்ணன் மாண்டான். இராமனை நான்

எப்படி வெற்றிக்கொள்ளப் போகிறேன். தம்பி விபீஷணன் சொன்னதைக் கேட்காமல் போனேனே! அதனால் இப்போது சங்கடப்பட வேண்டி இருக்கிறது. உண்மையில் இராமன் மிகுந்த பலசாலியேதான். நான் இப்படி நடந்தது எனது அறியாமையால்தான். அறநெறியைப் பின்பற்றும் விபீஷணனை விரட்டி விட்டேனே. இராமனுடைய ஆயுதங்கள் மிகுந்த சக்தி வாய்ந்தனவாகத் தெரிகிறது. அதனால் அரக்கரின் படை பெரும் பகுதி நாசம் அடைந்துள்ளது.''

## மேக நாதனின் மரணம்

இராவணன் தன் மகன் மேகநாதனை ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடன் போர் தொடுக்குமாறு ஆணையிட்டான். வெற்றி பெறுவதற்காக மேகநாதன் அக்னிஷ்டோமம், அஸ்வமேதம், ராஜஸூயம் கோமேதம், வைஷ்ணவம் முதலான வேள்விகளைச் செய்துமுடித்தான். சிவபெருமானைக் குறித்து மிகவும்கடினமான ஒரு யாகத்தைச்செய்து பற்பல வரங்களையும் பெற்றான். அதனால் அவன் எந்த இடத்திற்கும் போக முடிந்தது. ஆகாயத்தில் மறைந்து வாழும் தாமஸீ மாயையின் ஆற்றலையும் பெற்றிருந்தான். அதன் மூலம் எங்கும் இருளை அவனால் உண்டாக்க முடியும். அவன் இருக்கும் இடத்தை எவராலும் கண்டுபிடிக்க முடியாது. எதிரிகளை வெல்லும் பொருட்டு பிளக்க முடியாத வில்லும் எடுக்க எடுக்கக் குறையாமல் அம்புகள் வரும் அம்புராத் தூணியும், இன்னும் பலவிதமான பயங்கர ஆயுதங்களையும், அவன் பெற்றிருந்தான். இந்த வேள்விகளை நிகும்பிலா என்ற இடத்தில் வைத்து யாரும் அறியா வண்ணம் செய்யலானான். அவனுக்கு இந்திரஜித் என்ற பெயரும் உண்டு. அதற்குக் காரணம் அவன் இந்திரனையும் போரில் வெற்றி கண்டவன்.

இந்திரஜித் தன் தந்தை இராவணனிடம் சொன்னதாவது:- ''பூஜிக்கத்தக்க தந்தையே! உங்கள் கவலைகளை எல்லாம் விட்டு விடுங்கள். தங்களுடைய பகைவர்களை நான் ஒருவனாகவே சென்று ஒழித்து விடுகிறேன். நான் நிகும்பிலா சென்று அக்கினி பகவானுக்கு சிறந்த வேள்வியைச் செய்து, மகிழ்வித்து, அவரிடமிருந்து சிறந்த ஆயுதங்களையும் ரதத்தையும், பெற்றுக் கொள்கிறேன். அதன்பின் என்னை எவராலும்

வெல்ல முடியாது. பகைவர்களால் நான் வெல்லப்படவோ கொல்லப்படவோ மாட்டேன்.'' என்று கூறியபடி அந்த ஹோமம் செய்யக் கூடிய இடம் சேர்ந்தான். சிவந்த ஆடைகளை அணிந்து கொண்டான் பின்பு நிகும்பிலாவில் அமைக்கப்பட்டிருந்த ஹோம குண்டத்தில் மௌனமாக அமர்ந்து வேள்வியைச் செய்யலானுன்.

விபீஷணன் இதை அறிந்து ஸ்ரீராமபிரானிடம் சென்று கீழ்க்கண்டபடி சொன்னுர்,

''பரமபூஜ்ய சுவாமி! இந்த ஹோமம் நிறைவேறி விடுமானுல், இந்திரஜித்தை தேவர்களும் மனிதர்களும் போரில் வெல்லவே முடியாது. எனவே அவன் உடனே இளைய பெருமானுல் கொல்லப்பட வேண்டும். உணவும் தூக்கமும் இல்லாமல் பன்னிரண்டு ஆண்டுகள் யார் இருக்கிருர்களோ அவரால்தான், அவன் கொல்லப்படுவான். இவ்விதம் நான்முகனிடம் அவன் வரம் பெற்றுள்ளான், அயோத்தியிலிருந்து தங்களுக்குச் சேவை புரிய வந்ததிலிருந்து இலக்ஷ்மணன் உணவும் கொள்ளவில்லை தூங்கவும் இல்லை. தாங்கள் இலக்ஷ்மணரை என்னுடன் அனுப்ப ஆணையிடுங்கள். நிச்சயமாக இந்திரஜித்தைக் கொன்று விடுவார்.''

அதன்பிறகு ஸ்ரீராமபிரான் இலக்ஷ்மணனை விபீஷணருடன் போகுமாறு ஆணையிட்டார். விபீஷணரும் இலக்ஷ்மணரும் நிகும்பிலா என்ற இடத்தை அடைந்தனர். விபீஷணர் சொன்னுர், '' இந்த அரக்கர்களைப் பாருங்கள். உங்கள் கண்களுக்கு இருண்ட மேகங்களைப் போலத் தோன்றுவதெல்லாம் இந்த அசுரரின் படைகளாகும். பெரும் முயற்சி எடுத்து இவற்றையெல்லாம் நாசம் செய்யத் தயாராகுங்கள். அப்போதுதான் இந்திரஜித்தை நீங்கள் பார்க்க முடியும். அவன் செய்யும் வேள்வி முடியும்முன்பே அவனை எதிர்த்துப் போர் செய்யுங்கள்.

இந்திரஜித்தை காவல் செய்து கொண்டிருந்த அசுரப் படைகளை மழைபோல பாணங்களைப் பெய்து நாசம் செய்தார் இளையபெருமாள். ஹோமம் செய்து கொண்டிருந்த இந்திரஜித் அதை விட்டு எழுந்து வந்தான். தேரின் மீது வில் அம்புகளுடன் ஏறி இந்திரஜித் எதிர்த்துப்போரிடலானுன். போர் இருபக்கமும்

வெற்றி தோல்வி காணமுடியாதபடி அவ்வளவு கடுமையாக நடந்தது. இலக்ஷ்மணன் இந்திராஸ்திரத்தை எடுத்து தன் வில்லில் நாணேற்றி கூறினார்.

" தர்மாத்மாவும் தசரதரின் புத்திரனுமான ஸ்ரீராமன் வீரத்தில் தனக்கு இணை மூவுலகிலும் எவரும் இல்லாதவராயும், ஸத்யத்தையே கடைப்பிடிப்பவராயும் இருப்பாரானால், இந்த அஸ்திரம் (அம்பு) இராவணனின் புதல்வனைக் கொல்லட்டும்" என்று சொல்லிக் கொண்டே அவ்வம்பை இந்திரஜித்தின் மீது எய்தினார். அது இந்திரஜித்தின் தலையைத்துண்டித்து நிலத்தின் மீது விழச் செய்தது.

அதன் பிறகு விபீஷணரும் இலக்ஷ்மணனும் ஸ்ரீராம பிரானிடம் சென்று இந்திரஜித்தின் மரணத்தைத்தெரிவித்தனர். அது கேட்டு, " இலக்ஷ்மணா! உலகிற்கு ஒரு நல்ல காரியம் செய்தாய். நான் எல்லை கடந்த மகிழ்ச்சி அடைகிறேன். எவராலும் செய்யமுடியாத ஒரு செயலை நீ செய்துள்ளாய். நாம் எல்லா வெற்றியுமே அடைந்த மாதிரிதான் இந்த மேகநாதன் மாண்ட பிறகு.

தன் மகன் மாண்டதைக் கேள்விப்பட்டதும் இராவணன் மூர்ச்சையாகி கீழே சாய்ந்தான். பிறகு பிரக்ஞை ஏற்பட்டு மகனின் முடிவு கருதி மிகவும் துக்கப்பட்டான். மந்திரிகளும் அசுரப் பிரதானிகளும் இராவணனைத் தேற்றினார்கள். அதன் பிறகு தானே இராமனுடன் போர் புரிவது என்ற முடிவுக்கு இராவணன் வந்தான். அதற்கான யோசனைகளை மந்திரிகளைக் கூட்டி ஆலோசித்தான்.

## இராவணன் செய்த ஹோமம்

இராவணன் அசுரர்களின் குருவாகிய சுக்கிராசாரியாரிடம் சென்று, "சுவாமி! எல்லா அரக்கர்களும் நாசமடைந்தனர். நான் மிகுந்த ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். எப்படி இந்தப் போரில் நான் வெற்றி அடைவது?" என்று கூறி வருந்தினன்.

அதைக் கேட்ட சுக்கிராசாரியார் கூறியதாவது, "இரா

வனே! அக்கினிக்கு கொடுக்க வேண்டிய ஆஹுதிகளை மிகவும் கவனமாகக் கொடு. எந்தத் தடையும் இல்லாமல் ஹோமம் நிறைவேறினால் அதிலிருந்து மிகச் சிறந்த ஒரு ரதமும் வில்லும் அம்புகளும் அம்பராத் தூணியும் உனக்குக் கிடைக்கும். அதைக் கொண்டு நீ போர்புரிந்தால் உன்னை யாராலும் வெல்லமுடியாது. ஹோமத்திற்கான மந்திரங்களை பெற்றுக்கொள். முயன்று ஹோமத்தை விரைவில் செய்து முடி.''

இராவணன் மௌனமாக அந்த வேள்வியைச் செய்ய ஆரம்பித்தான். விபீஷணன் ஸ்ரீ ராமனுக்கு அந்த ஹோமப்புகையை சுட்டிக்காட்டி, '' பிரபோ! இராவணன் ஏதோ ஒரு ஹோமத்தைச்செய்து முடிக்கத் துவங்கியுள்ளான். இதை அவன் செய்து முடித்துவிட்டால் அவனை எவராலும் வெல்ல முடியாது. எனவே வானரத்தலைவர்களைப் படைகளுடன் அனுப்பி அதற்கு இடையூறு செய்யுங்கள்.'' என்று வேண்டினார், அதுகேட்ட ஸ்ரீ ராமன் சுக்ரீவன், அங்கதன், அனுமான் முதலிய ஆற்றல் மிகுந்த வீரர்களை அனுப்பினார். விபீஷணரின் மனைவியான ஸரஸா என்பவள் ஹோமம் நடக்கும் இடத்தைக் காண்பித்தாள்.

வானர வீரர்கள் அந்த குகைக்குச் சென்று வேள்வி செய்யும் புரோஹிதர்களை அடித்து விரட்டி வேள்வித் தீயையும் அணைத்தனர். ஹநுமான் இராவணன் கையில் இருந்த வேள்விக்கான கரண்டியைப் பிடுங்கி அதனால் அவனை பலமாக அடித்தார். அங்கதன் அரண்மனைக்குள் சென்று மண்டோதரியைக் கூந்தலைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தான். வானரர்கள் வேள்வியை உடைத்து நிர்மூலமாக்கி விட்டு காட்டிற்குள் நுழைந்தனர்.

இராவணன் தன் மனைவியைச் சமதானம் செய்து சொன்னான். '' என் அன்பே! இவை யெல்லாம் விதியின் விளைவால் நேர்ந்துள்ளன. நான் இப்பொழுதேசென்று இராமனையும்அவன் தம்பியையும் கொன்றுவிட்டு வருகிறேன். இல்லாவிடில் இராமன் தன் அம்புகளால் என்னைக் கொன்றுவிடுவான். நான் வைகுண்டபதவியை அடைந்து விடுவேன். பிறகு நீ எனது இறுதிச்சடங்குகளைச் செய்து சீதையையும் கொன்று விட்டு தீக் குளிப்பாயாக.''

மண்டோதரி சொன்னாள்:-"சுவாமி! இராமனிடம்எவருமே வெற்றி கொள்ள முடியாது. அவர் ஸாக்ஷாத் திருமாலின் அவதாரம். அவர் உமது அழிவுக்காகவே மனிதனாகத் தோன்றியுள்ளார். நீர் ஏன் சீதையை வலுக்கட்டாயமாக அவர் இல்லாத போதுகடத்தி வந்தீர்? அது உம்முடைய அழிவுக்கும் என் மகன் இந்திரஜித் மாண்டதற்கும் அல்லவா காரணமாயிற்று. அதனால் உமது எண்ணம் நிறைவேறியதா? எனவே நான் இப்போதும் சொல்கிறேன். தட்டாமல் சீதையை இராமனிடம் ஒப்படைத்து விட்டு விபீஷணனுக்கு முடிசூட்டி இலங்கையை அவனுக்களித்து நாம் இருவரும் தபோவனம் செல்வோம்."

இராவணன் பதிலுரைத்தான்:- "நான் எப்படி வனவாசம் செய்வது? எனது பிள்ளையை இழந்தேன். சகோதரரை இழந்தேன் உறவின்ரையும் ராக்ஷஸ பிரதானிகளையும் முற்றிலும் இழந்தேன். எனவே இராமனை எதிர்த்துப்போர் செய்து அவனால் கொல்லப்பட்டு அவனது இருப்பிடமான வைகுண்ட பதவியை அடைவேன் இராமன் திருமால் என்றும் சீதை இலக்குமிதேவி என்றும் எனக்கு நன்றாகத் தெரியும். இது தெரிந்தே தான் நான் சீதையைக் காட்டிலிருந்து கடத்திக் கொண்டு வந்தேன். இவ்வுலகமாகிய கடலில் ஐந்து கிலேச அலைகள் வீசுகின்றன. நான்கு யுகங்களாகிய நீர்ச்சுழிகள் சுழன்று சுழன்று வருகின்றன. மனைவி, மக்கள், உறவினர், செல்வம் நண்பர்கள் ஆகிய முதலைகள் நிறைந்துள்ளன. கோபமாகிய வாடவாக்னி - பற்றுதல் என்ற வலை இவைகளிலிருந்து விடுபட்டு ஸ்ரீ ஹரியின் பாதார விந்தங்களை அடைய விரும்புகிறேன்.

## இராவணனின் முடிவு

போரில் இராவணன் தனது சக்தி என்ற ஆயுதத்தை இலக்ஷ்மணன் மீது வீசினான். அது இலக்ஷ்மணனுடைய இதயத்தைப் பிளந்தது. உடனே அவன் கீழே விழுந்தான். இராமன் அது கண்டு தாங்க முடியாத வேதனை அடைந்தார். அவர் சொன்னார், " என் தம்பி இறந்தானானால் வாழ்க்கை எனக்கு தேவையே இல்லை. அதே போல சீதையும் எனக்கு வேண்டாம். போரில் இலக்ஷ்மணன் போனபின் வெற்றி பெற்று நான் என்ன செய்யப் போகிறேன். ஒருவன் மனைவிகளையும், புதிய உடைமை

ளர்களையும் உலகில் பெறக் கூடும். ஆனல் இலக்ஷ்மணனைப் போல ஒரு சிறந்த ஸ்ஹோதரனைப் பெற முடியுமா?''

பிறகு வானரப் படைத் தலைவருள் ஒருவனுன சுஷேணன் என்ற மருத்துவ நிபுணன் ஸ்ரீராமனைச் சமாதானம் செய்தான்.

''இந்த இலக்ஷ்மணன் உயிர் துறக்கவில்லை. உயிருடன் தான் இருக்கிறார்'' என்று கூறி ஹநுமானை ஒஷதீ மலையிலுள்ள ஸஞ்சீவினி மூலிகையை கொண்டு வரும்படி ஏவினார். வெகு விரைவில் ஆஞ்சநேயர் சென்று அதைக் கொண்டு வந்தார். சுஷேணன் அதை பிழிந்து இலக்ஷ்மணனுடைய மூக்கில் முக ரும்படிச் செய்தான். உடனே இலக்ஷ்மணன் சுயநினைவுபெற்று எழுந்து நின்று, ''சுவாமி! உங்களுடைய சபதத்தின்படி இன் றைக்கே இராவணனைக் கொல்லுங்கள்'' என்று கூறினன்.

ஸ்ரீராமபிரான் போரில் இராவணன்மீது மிகவும் பயங்கர மான கொடிய அஸ்திரங்களை ஏவி அவனைத் திணர அடித்தார். இராவணனும் ஆற்றல் மிகுந்த அம்புகளை ஏவி இராமனுடன் போரிட்டான். இருவரிடையே நடைபெறும் பயங்கரமான யுத்தத்தை தேவர்கள் ஆகாயத்திலிருந்து ஆவலுடன் பார்த் தனர். ராமராவண யுத்தத்திற்கு இணையாக உலகில் வேறு ஒரு போரும் நடந்ததில்லை, நடக்கப் போவதும் இல்லை. ஆகாயத்தை யும் கடலையும் ஒப்பிடுவதற்கு எப்படி உலகில் வேறுஒன்றும் கிடையாதோ, அதுபோலவே இப்போர் வேறு இணையற்றதாக நடந்தது.

இராமன் நிலத்தின் மீது நின்றவண்ணம் போரிட்டார். இராவணனே பொற்றேரில் அமர்ந்து கொண்டுபோர்புரிந்தான் இதைக் கண்ட இந்திரன் தனது தேரையும் தேரோட்டி மாதலி யையும் ஸ்ரீராமபிரானுக்கு அனுப்பினன். இராமனும் அதன்மீது அமர்ந்து கொண்டு போர் செய்தார்.

இராவணன் ராமன் மீது மிகமிகக் கொடிய ராக்ஷஸ அஸ் திரங்களை ஏவினன். அவை எல்லாம் விஷப் பாம்புகளாக மாறி இராமனை எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டன. அப் பாம்புகள் நெருப்பைக் கக்கின. ஸ்ரீராமபிரான் கருடாஸ் திரத்தை எய்தினர். அது நாகாஸ்திரங்களைத் துண்டித்துக் கீழே வீழ்த்தின.

பிறகு ஸ்ரீ ராமன் இந்திராஸ்திரத்தை இராவணன்மீது ஏவினார். இது அவனது தலையைத் துண்டாக்கியது. அநேகம் தலைகள் நீங்க நீங்க மறுபடியும் உடலுடன் சென்று ஒட்டிக் கொண்டன. இருவரும் அம்புகளை மழைபோல் பொழிந்ததால் திசை ஒன்றுமே தெரியவில்லை. இராமனும் இராவணனும் கூட ஒருவரை ஒருவர்கண்டு கொள்ள முடியாதபடி அவ்வளவு இருள் மண்டியது.

இதைக் கண்டு ராமன் ஆச்சரியப்பட்டார். நூற்றியொரு இராவணனது சிரசுகள் வெட்டப்பட்டன. ஆனாலும் இராவணன் இறக்கவில்லை.

விபீஷணன் ஸ்ரீராமனிடம் வந்து, ''பிரபோ! இந்த இராவணன் நான்முகனிடமிருந்து வரம் பெற்றுள்ளான். அவனுடைய சிரசங்களும், கரங்களும் எவ்வளவுதான் வெட்டப்பட்டாலும் மறுபடியும் மறுபடியும் அவை முளைத்துவிடும். அவனுடைய நாபியில் ஜீவோதகம் வட்ட வடிவமாக அமைந்துள்ளது. தாங்கள் அக்னி அஸ்திரத்தை விட்டு அதை உலர்த்தினால் தான் அவனுடைய உயிர் நீங்கும்'' என்று சொன்னான்.

ஸ்ரீராமன் உடனே ஆக்னேயாஸ்திரத்தை எடுத்தார். இராவணனது நாபியைஊடுருவிச் செல்லும்படி அதைஎய்தினார். அது அந்த உயிர்நீரை வற்றவைத்தது; மேலும் பத்து தலைகளையும் இருபது கரங்களையும் துண்டித்துத் தரையில் வீழ்த்தியது. உடனே இராவணன் ஒரு தலை இரண்டுகைகளுடன் தோன்றினான். பெருமழை பொழிவது போல அம்புகளையும் ஆயுதங்களையும் இராமன்மீது ஏவினான். அவற்றை எல்லாம் தனது ஆற்றல்மிக்க அம்புகளால் தன்னை அணுகாதபடி தடுத்துக் கீழே வீழ்த்தினார். பிறகு இராவணனன் ஏவிய காந்தருவ அஸ்திரத்தை மற்றொரு காந்தருவத்தால் தடுத்தார். தைவாஸ்திரத்தையும் அதேபோல் தடுத்து வீழ்த்தினார்.

இத்தருணத்தில் அகத்திய மகரிஷி அவ்விடம் வந்து, ''ஓ வீரராகவ! ஆதித்ய ஹ்ருதயத்தை மும்முறை ஜெபித்து சூரிய பகவானை வணங்கு. நீ போரில் வெற்றி அடைவாய். இந்த மந்திரம் எல்லாப் பகைவர்களையும் நாசம்செய்து விடும். நீண்ட

ஆயுளைக் கொடுக்கும். இந்த மந்திரத்தை ஜெபிப்பவர் ஆபத்துக்களிலிருந்தும், நோய் நொடி களிலிருந்தும், பயங்களிலிருந்தும் விடுதலை பெறுவார்கள்'' என்று சொல்லி ஆதித்ய ஹ்ருதயத்தை உபதேசித்தார்.

ஸ்ரீ ராமபிரானும் சூரியபகவானை தியானம் செய்துகொண்டு ஆதித்ய ஹ்ருதயத்தை ஜெபித்தார். அப்போது மாதலி சொன்னான், '' சுவாமி! இராவணனை கொல்வதற்கான வழியை நான் கூறுகிறேன். தாங்கள் அவனைக் கொல்ல பிரம்மாஸ்திரத்தை உபயோகியுங்கள். அவனுடைய தலைகளைக் கொய்வதால் உயிர் நீங்காது. மார்பில்தான் பிரம்மாஸ்திரம் ஏவவேண்டும்.''

அதன் பிறகு ஸ்ரீ ராமன் பிரம்மாஸ்திரத்தை எடுத்து முறைப்படி நாண்பூட்டி அதை இராவணனது மார்பை நோக்கி கவனமாக எய்தினர். அதுஉடனே வேகமாகச் சென்று நொடிப் பொழுதில் இராவணன் மார்பைப் பிளந்தது. இராவணனைக் கொன்று வீழ்த்தி விட்டுத் திரும்பவும் இராமனது அம்புராத் தூணிக்கு விரைந்து வந்தது. இராம ராவண யுத்தம் பன்னிரண்டு நாட்கள் நடந்தது.

## இராவணன் மரணம் அடைந்த பிறகு

இராவணன் மாண்டதும் தேவர்கள் விண்ணிலிருந்து ஸ்ரீ ராமபிரான்மீது மலர் மாரிபொழிந்தனர். முனிவரும், சித்தர்களும் அமரர்களும் ஸ்ரீ ராமனது புகழைப் பாடலானர்கள்.

அப்போது விண்ணவரும் பார்த்துக் கொண்டிருக்க இராவணனின் உடலிலிருந்து சூரிய ஒளிக்கு ஒப்பான மாபெரும் ஒளியொன்று வெளிப்பட்டு ஸ்ரீ ராமபிரானின் உடலோடு சென்று கலந்தது.

அதைக் கண்டு எல்லோரும் இராவணனைப் புகழ்ந்தனர். தேவர்கள் சொன்னர்கள், ''இந்த இராவணன் எவ்வளவு பாக்கியசாலி! நாமெல்லாம் சத்வகுணம் உள்ளவர்களாய் இருந்தாலும் திருமாலை விட்டுவேறானவர்களே, மேலும் அச்சத்தாலும் கவலைகளாலும் இதுகாறும் துன்பமடைந்து வந்திருக்கிறோம். நாம் சுவர்க்க போகங்களில்-மூழ்கி அவதிப்படுகிறோம். காரணம்

அவை காலப்போக்கில் அனுபவிக்கப்பட்டு அழிந்துபோகின்றன ஆனால் அதற்கு மாறாக இந்தக் கொடிய அரக்கன் தமோகுணம் நிறைந்தவனாய் பிராமணர்களையும் முனிவர்களையும் கொன்றான். பிறருடைய பெண்டிரைத்திருடி அனுபவித்தான்; திருமாலின் பரம விரோதி. அப்படி இருந்தும் நமது கண்முன்பே ஸ்ரீராம பிரானுடன் ஒளி வடிவு பெற்று இணைந்தான்.''

அப்பொழுது அங்கே நாரத மஹரிஷி தோன்றினார். தேவர்களைப் பார்த்து கீழ்க்கண்டவாறு கூறினார், ''இந்த ராவணன் இரவும் பகலும் எப்போதுமே ராமன்மீது தான் கொண்டிருந்த பகையால் ராமனையே எண்ணிக் கொண்டிருந்தான். ராமன் மூலமே தனக்கு மரணம் ஏற்படப் போகிறது என்ற எண்ணத்தால் எல்லா உருவங்களிலும் ஸ்ரீராமனையே கண்டான். அவனுக்கு வைரபக்தி ஏற்பட்டது. கனவிலும் கூடராமனையே கண்டான். ஸ்ரீராமபிரான் அவனைக் கொன்றதும் அவன் எல்லா வினைத்தளைகளையும் அறுத்துக் கொண்டு பரமபதமான விஷ்ணுவின் உலகை அடைந்தான்.

ஒருவன் மகாபாவியாக இருந்தாலும், தீயகுணங்கள் நிறைந்தவனாயும், பிறரது உடைமைகளை பறிப்பவனாகவும், பெரும்பாதகங்களைச் செய்பவனாகவும் வாழ்ந்தாலும் ஸ்ரீராமனை மனதில் இடைவிடாமல் சிந்திப்பானாகில், அவன் எல்லாப் பாவச் செயல்களிலிருந்தும் நீங்கி வைகுண்ட பரமபதநிலையை அடைகிறான். எனவே ஸ்ரீராமபிரான் நம் எல்லோரையும் காப்பாராக.

தனது அண்ணனின் ஈமக் கடன்களைச் செய்து முடிக்குமாறு ஸ்ரீராமபிரான் விபீஷணனைக் கேட்டார். அவ்வாறே விபீஷணன் செய்து முடித்தான். பிறகு ஸ்ரீராமன் இலக்ஷ்மணனைக் கொண்டு விபீஷணனுக்கு இலங்கையின் மணிமுடியைச் சூட்டச் செய்தார். அவ்வாறே இளையபெருமான் விபீஷணனை இலங்கையின் அரியணையில் அமர்த்தினார்.

ஹனுமான் சீதையிடம் சென்று ஸ்ரீராமன் சொன்னபடி இராவணனின் மரணத்தையும் அவர் அடைந்த வெற்றியையும் தெரிவித்தார். விபீஷணன் சீதையை ஸ்ரீராமரின் முன்பு ஒரு சிறந்த பல்லக்கில் அழைத்து வந்து நிறுத்தினார். சீதை ஸ்ரீராமபிரானின் திருவடிகளில் விழுந்து வணங்கினாள்.

சீதையின்மீது எந்த ஒரு அபவாதமும் ஏற்படாமல் இருக்க அவளை அக்கினியில் மூழ்கச் செய்து தன் கற்பின் தூய்மையை உலகறியச் செய்தார் ஸ்ரீராமபிரான். அதன்பின் எல்லோரும் விமானத்தில் அயோத்திக்குத் திரும்பினர்.

பிறகு வசிஷ்டர் அந்தணரின் துணையுடன் ஸ்ரீராமபிரானை அரியணையேற்றி பட்டாபிஷேகம் செய்வித்தார். எல்லோரும் அதுகண்டு எல்லைகடந்த ஆனந்தமடைந்தனர். எங்கும் அமைதியும், மங்களமும் செழிப்பும், செல்வமும் நாட்டில் நிறைந்தது.

## உத்தர காண்டம்.

காலதேவன் ஒரு முனிவரின் வடிவம் கொண்டு ஸ்ரீராமனிடம் வந்து சொன்னான்.

" நான் உம்முடன் ஒரு மிகவும் ரஹஸ்யமான விஷயம் பேசவேண்டும். வேறு எவருக்கும் அது தெரியக்கூடாது. மற்றவருக்கும் அதைச் சொல்லக் கூடாது. அப்படி நாம் இருவரும் பேசும் சொற்களை யாராவது கேட்டால் உமது கையாலேயே அவர்கள் மரணமடைய வேண்டும்."

ஸ்ரீராமர்கூறினார், "ஓ! காலதேவனே! அப்படியே ஆகட்டும்" உடனே அவர் தம்பி இலக்ஷ்மணனிடம், அன்பனே! வாசலில் நின்றிரு. எவரையும் உள்ளே விடாதே. அப்படி மீறி யாரேனும் வந்தால் என்கையால் இறக்க நேரிடும். இதில் சந்தேகமில்லை" என்று ஆணையிட்டார்.

பிறகு இராமபிரான் முனிவரிடம் கூறலானார், "சரி நாம் இப்பொழுது பேசுவோமாக" முனிவர் சொன்னார், "நான் நான்முகனால் இங்கு அனுப்பப்பட்டுள்ளேன். சுவாமி! நான் உம்மிடமிருந்து பிறந்த முதல் பிள்ளைகளில் ஒருவன். மாயையுடன் தொடர்பு கொண்டு என்னைப் பெற்றீர். நான்தான் அகிலத்தையும் அழிக்கும் காலன். பிரமன் அனுப்பிய செய்தி இதுவாகும்.

" மேல் உலகங்களைக் காக்கவேண்டிய காலம் இப்பொழுது தங்களுக்கு வந்து விட்டது. இராவணனே தங்களால் மாண்

டான். தாங்கள் மண்ணுலகம் வந்த காரியம் நிறைவேறி விட்டது. மக்களிடையே இருந்த தங்கள் வாழ்வு முடிவடை கிறது.''

ஸ்ரீராமன் அதற்கு, '' எனது விருப்பமும் அதுவேதான். எனது நோக்கம் பூர்த்தியானது. இப்பொழுது தேவர்களின் காரியம் செய்ய நான் தயார்'' என்று கூறினார்.

இந்த சமயம் துர்வாஸ முனிவர் அரமண்மனை வாயிலை அடைந்தார் அங்கு காவல்புரியும் இலக்ஷ்மணனிடம். ''இலக்ஷ் மணா! நான் ஸ்ரீராமனிடம் மிகவும் அவசரமான ஒரு காரியமாக வந்துள்ளேன். தாமதியாமல் உடனே சென்று எனது வருகை யை அவரிடம் கூறுவாயாக'' என்றார்.

அதற்கு இலக்ஷ்மணன், '' சுவாமி! இப்பொழுது ராமன் யாருடனோ பேசிக்கொண்டிருக்கிறார். தயவு செய்து கொஞ்சம் தாமதியுங்கள் என்று பணிவுடன் வேண்டிக் கொண்டான். அது கேட்ட துர்வாசர் கடுஞ்சினம் கொண்டார். ''அடே! இப்பொ ழுது உடனே என்னை உள்ளே அனுப்பாவிட்டால் உங்கள் குடும் பம் முழுவதையும் எரித்துச் சாம்பலாக்கி விடுவேன்'' என்று கோபாவேசத்துடன் கூறினார்.

இலக்ஷ்மணன் குடும்பம் முழுவதுமே நாசமாவதைக் காட்டி லும் தான் ஒருவன் மடிவதே மேல் என எண்ணினான். பின்பு துணிந்து உள்ளே சென்று துர்வாசரின் வருகையை ஸ்ரீராம பிரானிடம் அறிவித்தான்.

ஸ்ரீராமன் உடனே காலனை அனுப்பிவிட்டு துர்வாசரை வரவேற்க வாசலுக்கு வந்தார். முறைப்படி அவரை வரவேற்று நல்வரவு கூறி, ''சுவாமி! நான் தங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?'' எனப் பணிவுடன் கேட்டார்.

''வீரராகவனே! இன்றுதான் நான் ஆயிரம் ஆண்டுகளாக அனுசரித்து வந்த உபவாசத்தைப் பூர்த்தி செய்கிறேன். எனக்கு உணவு வேண்டும்,'' என்றார் துர்வாசர்.

ஸ்ரீராமன் உடனேயே அவருக்கு போதிய உணவளித்தார். உண்டபின் முனிவர் மகிழ்ந்து சென்றார்.

இப்பொழுது ராமனுக்குத் தான் காலனிடம் கூறியவை ஞாபகம் வந்தது. கவலையில் ஆழ்ந்தார். இலக்ஷ்மணன் சொன்னான், "அன்பிற்குரிய அண்ணா! என்னைப் பற்றி தாங்கள் கொண்டுள்ள கவலையை விட்டொழியுங்கள். இப்பொழுது என்னைக் கொன்று விடுங்கள். நான் அதற்குத் தயார். தங்களின் புனிதமான வாக்கை விட்டு விலக வேண்டாம். தர்மத்திலிருந்து எள்ளளவும் விலகாதீர்கள்."

ஸ்ரீராமன் தன்மந்திரிகள் எல்லோரையும் சபைக்கு அழைத்தார். சபையில் வசிஷ்டரிடம் துர்வாசரின் வருகை, காலதேவன் கூறியவை தான் கொடுத்த வாக்கு ஆகிய எல்லாவற்றையும் விளக்கினார்.

அது கேட்ட வசிஷ்டரும் மந்திரிகளும் சொன்னார்கள், "நாங்கள் இதுவிஷயங்களை முன்பே ஞானக்கண் கொண்டு அறிந்துள்ளோம். தங்கள் வாக்கை விட்டு விலக வேண்டாம். அதனால் தர்மத்திற்கு அழிவு நேரிடவேண்டாம். தர்மம் அழிந்தால் உலகம் முழுவதும் நாசமடையும். எனவே இலக்ஷ்மணனை புறக்கணித்து உலகைக் காப்பாற்றுங்கள்."

ஸ்ரீராமன், "ஓ இலக்ஷ்மணா! நீ விரும்பும் எந்த இடம் வேண்டுமானாலும் போகலாம். தர்மத்திற்கு அழிவு ஏற்பட வேண்டாம். தேசப்பிரஷ்டம் மரணத்திற்கு ஒப்பானது" என்றார்.

இலக்ஷ்மணன் ஸ்ரீ ராமபிரானின் காலடியில்விழுந்து வணங்கி விட்டு சரயூநதியின் கரைக்குச் சென்றான். அங்கு வடக்கு நோக்கி அமர்ந்தான். உடலின் ஒன்பது வாயில்களையும் பந்தனம் செய்து பிராணனை தலைக்கு ஈர்த்தான். பரம்பொருளாகிய பிரம்மத்தை தியானம் செய்தவாறு அதிலேயே ஒன்றி விட்டான். தேவர்களும் ரிஷிகளும் மலர் மாரி பொழிந்தனர்.

இந்திரன் இலக்ஷ்மணனை சுவர்க்கத்திற்கு அழைத்துச் சென்றான். எல்லா முக்கிய கடவுளர்களும் சித்தர் முனிவர்களும் வணக்கம் செலுத்தினர்.

## ஸ்ரீராமபிரானின் பிரிவு

மந்திரிகளிடமும் வசிஷ்டரிடமும் ஸ்ரீராமன், "நான் பரதனுக்கு முடி சூட்டிவிட்டு இன்றே இலக்ஷ்மணனைப் பின்பற்றுகிறேன்" என்றார்.

அதற்கு பரதன், "சுவாமி! நான் நாட்டை ஆள விரும்ப வில்லை. எனக்கு தங்களைத் தவிர விண்ணுலகை ஆளும் நிலை கூடவேண்டாம். நானும் நிச்சயமாக தங்களையே பின்பற்று வேன். லவகுசர்களை நாட்டை ஆளச் செய்யுங்கள். கோசலத் தைக் குசனும் உத்தர நாட்டை லவனும் ஆட்சிபுரியட்டும். வேக மாக வீரர்கள் சென்று சத்ருக்னனை அழைத்து வரட்டும். அவன் நாம் வைகுண்டம் புறப்படுவதை தெரிந்து கொள்ளட்டும்" என்று சொன்னார்.

பரதன் கூறிய சொற்களைக் கேட்டதும் சபையிலுள்ளோர் தரையில் விழுந்து மயக்கமடைந்தனர். சற்று கழிந்து மயக்கம் தெளிந்தனர். அதன் பிறகு வசிஷ்டர் ஸ்ரீராமனிடம், "ராம! உன் பிரிவால் எல்லா மக்களும் வருந்துகின்றனர் எனவே அவர் கள் பால் உனது கருணையைக் காட்டு" என்றார்.

ஸ்ரீராமபிரான், "நான் உங்களுக்கு என்ன செய்ய வேண் டும்?" என்று மக்களைப்பார்த்துக் கேட்டார். அயோத்தி மாந்தர் யாவரும் ஸ்ரீராமனை அடிபணிந்து, "நாங்கள் எல்லோரும் தாங்கள் எங்கு செல்கிறீர்களோ அங்கேயே வரவேண்டும். தங்களைப் பிரிந்து உயிர் வாழமாட்டோம்" என்றனர். "அப்ப டியே ஆகட்டும்" என்றார் ஸ்ரீராமன்.

பிறகு தூதுவரை அனுப்பி லவனையும் குசனையும் வரவ ழைத்து கோசல உத்தர நாடுகளுக்கு முடிசூட்டினார். சத்ருக்ன னிடம் சென்ற தூதுவர்கள் நிலைமையை எடுத்துக் கூறினார்கள். உடனே சத்ருக்னன் தன் மக்கள் சுபாஹுவையும் யுபகேதுவை யும் அழைத்து மதுரை விதேஹ நாடுகளை அவர்கள் ஆளும்படி முடிசூட்டி விட்டு ஸ்ரீராமனைக்காண அயோத்திக்கு வந்து சேர்ந் தார். ஸ்ரீராமபிரானை வணங்கிய சத்ருக்னன் தான் செய்த காரியங்களைச் சொல்லி தானும் புறப்படத்தயார் என்பதை பணிவுடன் கூறினான்.

வானரர்களும், கரடிக் கூட்டங்களும் அரக்கர்களும் திடீ ரென்று ஸ்ரீராமபிரான் முன்பு தோன்றி "சுவாமி தாங்கள் செல்லுமிடமே எல்லோரும் வருவதாக முடிவு செய்துள்ளோம்" என்றனர். பின்பு சுக்ரீவன், "சுவாமி! நான் அங்கதனுக்கு முடி சூட்டி விட்டேன். தங்களுடனே வரசித்தமாய் இருக்கிறேன். அன்பு கூர்ந்து அழைத்துச் செல்லுங்கள்" என்றான்.

விபீஷணரிடம் ஸ்ரீராமபிரான், "என்அன்புள்ள பக்தனே! இந்த பூமண்டலம் உள்ளவரை அ ர க் க ர் கோனாக இருந்து இலங்கையை ஆட்சி செய்வாயாக" என்று வாழ்த்தினார்.

அதன் பிறகு ஹனுமானை அழைத்து அவரிடம், "வானர வீரனே! ப ல கோ டி ஆண்டுகள் நீ வாழ்வாயாக" என்றார். "துவாபர யுகம் முடியும்வரை இப்பூவுலகில் நீ வாழ்ந்திரு" என்றுஜாம்பவனிடம் கூறினார்.

கடைசியில் ஸ்ரீராமபிரான் பரதன், சத்ருக்னன், மந்திரி பிரதானிகள் சுக்ரீவன் எல்லா வானரர்கள்சூழ்ந்துவர அயோத்திமா நகரை விட்டு வெளியேறினார்.

ஸ்ரீராமனின் இடது பக்கம் இலக்ஷ்மி இருந்தாள். வலப் பக்கம் பூடைந்தை நி ன் று ள். ஆயுதங்கள், வில் அம்புகள் யாவும் அவர் முன்பு தெய்வீகஉருக் கொண்டு சென்றன.

எல்லா வேதங்களும் மானிடஉருவுடன் அவரைத் தொடர்ந் தன. அயோத்திவாழ் மக்கள் எ ல் லோ ரு ம் தங்கள் மனைவி மக்களுடன் பின்சென்றனர்.

ஸ்ரீராமபிரான் சரயூநதியை அடைந்தார். நான்முகன் எல்லா தேவர்கள் முனிவர்களுடன் அங்கு வந்து சேர்ந்தார். இனிய தெ ன் ற ல் வீசியது. ஆகாயத்திலிருந்து மலர் மழை விடாது பொழிந்தது.

பிரம்மா சொன்னார், "சுவாமி! தாங்களே பரம்பொருள். தாங்கள் தான் மஹாவிஷ்ணு. பேரானந்தத்தின் உ ரு வ க ம் தாங்களே. மண்ணுலக வாழ்வை,முடித்துக் கொண்டு தேவர் களின் உலகை ஆட்சி புரியவாருங்கள்" என்று வரவேற்றார்.

அப்போது ஸ்ரீராமபிரான் நான்கு கரங்களில் சங்குசக்கரம் கதை பத்மம் இவற்றுடன் கூடியவராகக் காட்சி அளித்தார். இலக்ஷ்மணன் ஆதிஷேஷனாக மாறினார். பரதனும் சத்ருக்னனும் சங்கு சக்கரங்களாயினர். சீதை ஏற்கனவே மஹாலக்ஷ்மியாகத் தோன்றினாள்.

மஹா விஷ்ணு பிரம்மாவை நோக்கிக் கூறினார், "இந்த பக்தர்கள் எல்லோரும் என்னையே பின்பற்றி வந்துள்ளனர். அவர்கள் வைகுண்டத்திற்கு இணையான உலகங்களை அடையட்டும்."

பிரம்மா சொன்னார், "அவர்கள் சாந்தநிகம் என்ற ஒளி வீசும் உலகத்தை அடைவார்களாக.

சுவாமி! தங்கள் நாமத்தை மரணம் நேரும்போது எவர்கள் தெரிந்தோ தெரியாமலோ சொன்னாலும் அவர்களும் பரமயோகிகள் அடையும் ஸ்தானத்தைப் பெறுவர்கள்.

எல்லா வானரர்களும், ராக்ஷஸர்களும் மற்றும் யாவரும் சரயூ நதியில் தங்கள் உடலங்களைத் தியாகம் செய்து தத்தம் முந்திய தெய்வ ரூபங்களை பெற்றனர். சுக்ரீவன் சூரியனில் ஐக்கியமானான்.

அயோத்தி மக்கள் எல்லோரும் சரயூ நதியில்தங்கள் சரீரங்களை வீழ்த்திவிட்டு விமானங்களில் ஏறி சாந்தனிகம் என்ற ஒளி பொருந்திய உலகை அடைந்தனர்.

ஓம் தத் ஸத்

சுபம்.

# ராமாயண கதாபாத்திரங்கள்

## 1 ஸ்ரீராமர்

ஸ்ரீராமன் மஹாவிஷ்ணுவின் அவதாரமாவார். இலக்ஷ்மணன் ஆதிசேஷனின் அவதாரம். பரதனும் சத்ருக்னனும் சங்கு சக்கரங்களின் அவதாரங்கள். சீதை இலக்குமிதேவியின் அவதாரம்.

ஸ்ரீராமன் சிவந்த கண்களும், புஜ பலமும் கொண்டவராய் இருந்தார். அவர் குஞ்சர நடை கொண்டவர். ஆஜானு பாஹுவாயும், (முழங்கால்வரை நீண்ட கைகள்), விரிந்த புஜங்களும், கருமையான சுருண்ட தலைமயிர் உடையவராயும் தோன்றினார். வீரமும் சுயஒளியும் கொண்டு விளங்கினார். போரில் இந்திரனையும்விட வலிமைமிகுந்தவர். வேதங்களில் நல்லதேர்ச்சியுடன், ஞானத்தில் தேவகுருவுக்கு நிகராய் இருந்தார். எல்லா சாஸ்திரங்களிலும் கரை கண்டவர். எல்லா ஜனங்களும் ஸ்ரீராமனிடம் அன்பும் நல்ல மரியாதையும் கொண்டிருந்தனர். அவர் பூரண புலன்களின் அடக்கம் கொண்டு திகழ்ந்தார். அவரது பகைவர்களும் கூட அவரைக் கண்டு மகிழ்ந்தனர். தீயோருக்கு அச்சம் கொடுப்பவராயும் நல்லவரைக் காப்பவராயும் விளங்கினார். நல்லறிவும், மதிநுட்பமும் அவர் பெற்றிருந்தார். ஸ்ரீராமனை எவருமே போரில் வெல்ல முடியாது.

தன் தந்தையின் வாக்கைக் காப்பதற்காக ஸ்ரீராமன் அரச பதவியால் ஏற்படும் புலன் இன்பங்களையும் இவ்வுலக இன்பங்களையும் துறந்தார். அவர் அரியணையை விரும்பியிருந்தால் மிக எளிதில் அதைப் பெற்றிருக்கலாம். மக்களின் பேரன்பைப் பெற்றிருந்தார். வீரர்களில் சிறந்த வீரராயும் பகைவர்களுக்குச் சிங்கம் போன்றவராயும் இருந்தார். அரக்கர் பலரை அழித்து, மிகப்பெரிய பயங்கரமான சிவதநுசை வளைத்தார். ஆனால் அச்செயலை அனயாசமாகவே செய்தார். கொடிய தீய குணம் கொண்ட கைகேயியின் அதிகாரச் சொற்களை அப்படியே யேற்று அதன்படி மகிழ்ச்சியுடன் நடந்தார். அயோத்தியின் ஆட்சி அவருக்கு தன் தந்தையின் கட்டளைக்கு முன் மிகவும் அற்பமாகத் தோன்றியது. நாடு நீங்கி காடு செல்வதை சந்

தோஷத்தோடு ஒப்புக்கொண்டார். புகழ் மிகுந்த அவரது தூய அறநெறியை எவராலும் தக்கபடி விளக்கிக் கூறமுடியாது.

நான்கு தம்பிமார்களிலும் ஸ்ரீராம்பிரான் கைக்கொண்ட அறவாழ்வு நிகரற்ற மிக உன்னதநிலை கொண்டது. அவர் எல்லோரிடமும் அன்பும் ஆதரவும் உள்ளவராய் இருப்பதோடல்லாமல், தருமசிந்தனையும் மரியாதையும் கொண்டு விளங்கினார். அற்புதமான உடலழகும் எல்லோரும் விரும்பக்கூடிய நன்னடத்தையும் அவரிடம் காணப்பட்டது. மேலும் அவர் மிகவும் எளியவராயும் ஆடம்பரம் சிறிதும் இல்லாதவராயும் சிறந்த போர் வீரராயும் இருந்தார்.

ஸ்ரீராமனது வாழ்க்கை சிறிதும் தன்னலமற்ற தவவாழ்க்கையாக இருந்தது. அவர் தியாகத்தின் உருவகமாவார். மாத்ரு பக்தி, பித்ருபக்தி, குருபக்தி இவைகளுக்கு ஸ்ரீராமனே சிறந்த எடுத்துக்காட்டு.

சீதை ஒரு சமயம் ஸ்ரீராமபிரானிடம் அரக்கர்கள் நடமாடும் இந்த ஆரணியத்தில் தக்க பாதுகாப்பான ஓர் இடம் வேண்டும் என்று கேட்டாள். அதற்கு ராமபிரான், ''சீதா! நான் என் உயிரையும் உன்னையும், இலக்ஷ்மணனையும் கூட இழக்கத்தயார்; ஆனால் இங்குவாழும் முனிவர்களுக்கு நான்கொடுத்த வாக்குறுதியை காப்பாற்றியே தீருவேன். அவர்களுடைய பாதுகாப்பே நான் காடு வந்ததின் நோக்கமும், என் வாழ்வின் இலட்சியமும் ஆகும்'' என்றார். ஸ்ரீராமபிரான் எதையும் ஒரு முறையே சொல்வார்; சொன்னபடி நடந்தே தீருவார்.

வாழ்வின் கஷ்ட காலத்திலும், துயர் மிகுந்த போதும் அபாயமான சூழ்நிலையிலும் ஸ்ரீராமன் அமைதியும் மகிழ்ச்சியுமே கொண்டு தோன்றுவார்.

அவர் ஒரு தலைசிறந்த வீரர். எல்லோரும் வியக்கும்படி நாட்டை ஆட்சி செய்தார். நாட்டில் நீதியும், அறநெறியும் நிறைந்திருந்தது. எனவே அவர் ஆட்சியில் மக்கள் சுகமாக வாழ்ந்தனர். ஒரு தனி மனிதன் கூட துன்புறவில்லை. ''என் நாட்டு மக்களுக்காக என் உயிரையும் மனைவியையும் கூடக் கைவிடத்துணிவேன்'' என்று சொல்வது வழக்கம். ஸ்ரீராமன்

மீது மக்களுக்கு இருந்த பிரியம் எல்லையற்ற கடல் போன்றதாகும். அதனால்தான் அவரது ஆட்சியை 'ராம ராஜ்யம்' என்று புகழ்கிறோம். எல்லோரும் அறவாழ்வு நடத்தினர். எவருமே பொய் பேசுவதில்லை. ஒரு பை நிறைய தங்க நகைகள் நடுத்தெருவில் கிடந்தாலும் யாரும் அதைத் தொடமாட்டார்கள்.

## 2. சீதாதேவி

மிதிலாபுரியின் மன்னரான ஜனகருக்கும் யாக்ஞவல்க்யருக்கும் நடந்த சம்பாஷணை பற்றி பிரஹதாரண்ய உபநிடதத்தில் காணப்படுகிறது. அவர் ஒரு சிறந்த ராஜரிஷி. தனக்கு ஒரு புதல்வன் வேண்டும் என்பதற்காக ஒரு யாகம் செய்தார். அந்த யாகசாலை அமைக்கும் இடத்தை தாமே கலப்பை கொண்டு உழலானார். அப்பொழுது ஏர் கொழுவின் உள்ளே இருந்து சீதாதேவி அகப்பட்டாள். சீதா என்றால் உழவுகால் என்று பொருள்.

இந்த அழகிய குழந்தை ஜனகரின் அரண்மனையில் கவனமாய் வளர்க்கப்பட்டது. ஆண்டுகள் பல செல்ல சீதை ஒரு அழகிய பருவ மங்கையானாள்.

ஒருநாள் சீதை பந்து விளையாடிக் கொண்டிருந்தாள். அவளுடைய சேடி ஒருத்தி பந்தை பலமாக எத்தியதால், அது மிகப் பெரிய சிவதனுசின் அடியில் சென்று விட்டது. எவராலும் அந்த வில்லை நகர்த்திப் பந்தை எடுக்க முடியாது. சீதை அநாயாசமாக வில்லை உயர்த்தி சேடியை பந்தை வெளியே எடுக்கும்படி சொன்னாள். இதை மறைவில் இருந்து பார்த்துக் கொண்டிருந்த ஜனகர் அவ்வளது வீரச் செயலைக் கண்டு வியப்பில் ஆழ்ந்தார். அந்த சிவதனுசு பத்துப்பேர் சேர்ந்து தூக்கினால்தான் வேறு இடத்திற்கு நகர்த்த முடியும். ஆகையால் ஜனகர் தீர்மானித்தார், "இந்த வில்லை யார் தனியாகத் தூக்கி வளைக்கின்றனரோ அவனுக்கே சீதையை மணமுடிப்பது" என்று.

ஜனகர் அதற்கான தகுதி பெற்ற இளவரசனுக்கே சீதையைக் கொடுக்க விரும்பினார். நீண்ட நாள்வரை சீதைக்கான ஜோடியை ஜனகர் காணமுடியவில்லை. பற்பல இளவரசர்கள்

மிதிலை வந்து வில்லை தூக்கி வளைப்பதில் படுதோல்வி கண்டு தலைகுனிந்து திரும்பினர்.

விச்வாமித்ரர் இராமனையும் இலக்ஷ்மணனையும் மிதிலா நகருக்கு அழைத்து வந்தார். ஜனகரிடம் இருவரையும் அறிமுகப்படுத்தி அவர்கள் செய்துள்ள மஹத்தான செயல்களை விளக்கிச் சொன்னார் பிறகு பல மன்னர்களாலும் அசைக்கக்கூட முடியாத அந்த சிவதனுசை பலசாலிகளான வீரர்கள் பலர் சேர்ந்து ராஜசபைக்குக் கொண்டு வந்தனர். விச்வாமித்திரர் அநுமதிக்க ஸ்ரீராமன் அந்த வில்லை விளையாட்டாகத் தூக்கி நிறுத்தி அதை வளைக்கும்போது அது இரண்டுதுண்டாக ஒடிந்தது. சீதை உடனே ஸ்ரீராமனுக்கு மணமாலையைச் சூட்டினாள்.

அதன்பின் சீதாராம கல்யாணம் மிகவும் விமர்சையாக நடந்தது. சீதை ஸ்ரீராமனைவிட்டு வாழ்நாள் முழுவதும் பிரியாமல் இருப்பதாகவும், கணவனின் சேவையைக் குறைவின்றி செய்வதாகவும் விரதம் பூண்டாள். ஸ்ரீராமனின் கட்டளை எதுவாயினும், தன் உயிரையும் வெறுத்து நிறைவேற்றச் சபதம் செய்தாள்.

தான் காட்டிற்குச் செல்லும் சமயம் ராமபிரான் சீதையை அயோத்தியிலேயே இருக்குப்படி வேண்டினார். அதற்கு அவள் சம்மதிக்கவில்லை கற்புடைய ஒரு மனைவியின் கடமைகளை சீதை நன்கு உணர்ந்திருந்தாள். சீதை ஒரு இலட்சிய மனைவி. அவள் சாதாரண பெண் அல்ல. தெய்வீக அம்சம். இலக்ஷ்மீ தேவியின் அவதாரம். அவளது வாழ்வின் புனிதம் விளக்க இயலாதது.

அப்போது சீதை கூறியதாவது; ''சுவாமி! சாஸ்திரங்கள் மனைவிதான் கணவனின் சுகதுக்கங்களில் பங்கு கொள்ள வேண்டும், ஆகையால் நானும் தங்களுடனேயே வந்து காட்டில் வசித்துக் கொண்டு தங்களுக்குப் பணிவிடை செய்வேன். ஒரு பெண்ணுக்குக் கணவனே மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் முக்கியம், அவன் இருக்குமிடமே அவளுக்கும் இருப்பிடம். கணவனே மனைவிக்கு புகலிடம். அவனே அவளுக்கு ஆதரவு. ஒரு நாட்டிற்கு வேந்தன் இல்லாமையும், உடலுக்கு அதனை

இயக்கும் உயிர் இல்லாமையும், ஒரு ஆற்றிற்கு அதில் ஓடும் தண்ணீர் இல்லாமையும், எப்படியோ அப்படியேதான் ஒரு பெண்ணிற்கு அவளது கணவன் இல்லாமையுமாகும். ஒரு மங்கைக்கு அவள் கணவனின் காலடி நிழலில் வசிப்பதே அரண் மனை வாழ்வினும் சிறப்புடையது. தன் கணவனைவிட ஒரு பெண்ணிற்குத் தான் அடைவதற்கு மூவுலகிலும்வேறு ஒன்றுமே இல்லை.

சுவாமி! செல்வம், அணிகலன்கள், விலைமிகுந்த ஆடைகள், சுவைமிக்க உணவு வகைகள், பறக்கும் விமானங்கள் ஆகிய இவை எல்லாமே தாங்கள் இல்லாமல் எனக்குப் பயனற்றவை யே. அன்பரே! என் சிறுபிராயத்திலிருந்தே எந்த ஒரு சூழ் நிலையிலும் என் கணவனையே நான் பின்பற்றிச் செல்ல வேண் டும் என்று நன்கு கற்பிக்கப்பட்டுள்ளேன். அதையே தான் என் வாழ்வில் நிச்சயமாக நிறைவேற்றுவேன் இது உறுதி. நான் தங்களுடனேயே காட்டிலுள்ள மர நிழல்களில் என் நாட்களைக் கழிப்பேன். அரண்மனை வாழ்வை விட இதுவே எனக்கு மகிழ்ச்சி தருவதாகும். மேலும் நான் எப்பொழுதும் தங்களுக்குப் பணி விடை செய்வதையே என் விரதமாகக் கொண்டு வாழ்வேன். இதைத் தவிர என் மனதில் வேறு எந்த ஒரு எண்ணத்திற்கும் இடமில்லை. தாங்கள் எங்கு இருக்கிறீர்களோ அதுவே எனக்கு விசாலமான விண்ணுலகமாகும். ஒரு வினடிகூட தங்கள் பிரிவை நான் தாங்க முடியாது.

ஸ்ரீராமன் கூறினுன், என் அன்பே! காட்டில் நீ எவ்வளவோ கஷ்டங்களை எதிர்த்து நிற்கவேண்டியிருக்கும். கொடிய விலங் குகள் உள்ளன. செல்லும் பாதையோ முட்கள் நிறைந்தது. அங்கே கிழங்கு காய்கனிகளையே உணவாகக் கொள்ள வேண் டும். எனவே, என்னுடன் காடுவரும் எண்ணத்தை விட்டுவிடு.''

அதற்கு சீதை கூறிய உத்தரமாவது, '' சுவாமி! காட்டில் நேரிடும் எல்லாத் துன்பங்களையும் நான் மகிழ்ச்சியோடு அனுப விப்பேன். அதனுல் பலநல்ல குணங்களை நான் விருத்தி செய்து கொள்ள முடியும். முட்கள் என் கால்களுக்கு ரோஜா மலர்கள் போல மெத்தையாக இருக்கும். தங்களோடு இருக்கும் போது மரநிழல் எனக்கு அரண்மனை சுகத்தைவிட சிறந்தது. வனதே

வந்தைகள் மாமனார் மாமியார்கள் கவனிப்பதுபோல என்னைப் பாதுகாப்புடன் கவனிக்கும். சற்றும் ஓயாமல் காட்டில் நான் தங்களுக்குப் பணிவிடை புரிவேன். கொடிய விலங்குகளும் அரக்கரும் தங்கள் பக்கத்தில் நான் இருக்கும் போது என்னை அணுகுவதற்குக்கூட அஞ்சுவார்கள். தாங்களே என் தெய்வம். உங்களுடன் வரவே செய்வேன். இல்லையானால் உயிர் வாழ மாட்டேன்.''

எனவே ஸ்ரீராமன் சீதையின் விருப்பத்திற்கு இணங்க வேண்டியதாயிற்று. அதன் பிறகு ராமன், இலக்ஷ்மணன், சீதை மூவரும் நண்பர்கள், உறவினர்கள், அயோத்தி மக்கள் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு காடு நோக்கிச் சென்றனர்.

காட்டில் மாரீசனின் குரலைக் கேட்ட சீதை இலக்ஷ்மணனை ராமனிடம் போகும்படி வற்புறுத்தினாள். அதற்கு இலக்ஷ்மணன் சொன்னான், '' அம்மா! மனம் கலங்க வேண்டாம். ஆத்திரமடையவும் வேண்டாம். இம்மூவுலகிலும் ஸ்ரீராமனுக்கு துன்பம் விளைவிப்பவர் எவருமே கிடையாது. அவரை வெற்றிகொள்ள எவராலும் இயலாது. ஒரு விநாடியில் அவர் இங்கே வருவதைத் தாங்கள் காண்பீர்கள்'' சீதாதேவி தூயஇதயம் கொண்ட இலக்ஷ்மணனைச் சந்தேகித்தாள். அவனைக் கோபமூட்டினாள். ''அப்பனே! உனது தீயயெண்ணம் ஒரு போதும் நிறைவேறாது. நான் உன்னோடு வாழ்வதைக் காட்டிலும் உயிர்துறப்பேன்; எரிமூட்டி அதில் பாய்ந்து விடுவேன்'' எனக் கடுஞ் சொற்களைக் கூறினாள்.

அதைக் கேட்கச் சகியாத இலக்ஷ்மணன் உடனே அவ்விடம் விட்டு ராமனைக்காண விரைந்தான்.

இந்த தங்கமான வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு இராவணன் ஒரு சன்னியாசியின் வேடம் பூண்டு சீதை தனித்து விடப்பட்ட பர்ண சாலையை அடைந்தான். உதாரகுணம் கொண்ட சீதை அவனுக்கு இருக்கை தந்தும் கனிகிழங்குகளைத் தந்தும் உபசரித்தாள். பிறகு தீயஎண்ணம் கொண்ட இராவணன் தன் சுயஉருவம் எடுத்துக்கொண்டு சீதையிடம் கூறினான்.

''ஏ சீதே! நான் அரக்கர்களின் அரசன். என்பெயர்

இராவணன். இலங்கைக்கு நான் வேந்தன். நீ என் மனைவியானால் மிகவும் சந்தோஷமாக வாழலாம்.''

அதற்கு சீதை பதில் சொன்னாள்:–

''ஏ தீய இராவணா! என்னிடம் இப்படிப்பேச உனக்கு என்ன தைரியம்? இப்படி நடக்க முடியாத தீயசொற்களைச் சொல்லாதே. நீ ஒரு தைரியசாலியானால் என் கணவன் வரும் வரை சிறிது நேரம் இங்கே நில். அவர் வந்ததும் உனது தீய எண்ணத்தின் விளைவை அநுபவிப்பாய்.

இராவணன் சீதையை அசோக வனத்தில் சிறை வைத்தான். அவள் உணவின்றி எப்போதும் இராமனையே எண்ணித் தவமிருந்தாள். அவளை கொடிய அரக்கிகள் காவல் காத்து வந்தனர். இவர்கள் சீதையை இராவணனுக்கு இணங்கும்படித் தூண்டி பயமூட்டிக் கடுஞ்சொற்களைக் கூறினர்.

ஒரு நாள் இராவணன் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு சீதையின் முன்புவந்து சொன்னான். ''ஏ பெண்ணே! என் மீது இரக்கம் காட்டு. மிகுந்த தவச்சிரேஷ்டரான விஸ்ரவசுவின் புத்திரன் நான். புலஸ்தியர் விஸ்ரவசுவின் தந்தை; புலஸ்தியரோ நான்முகனின் புதல்வர். இத்தகைய சிறப்பு மிகுந்தது என் வம்சாவளி. எனவே எனது பட்டத்து ராணியாகிவிடு.''

சீதை சொன்னாள், ''நான் எப்பொழுதும் என் கணவனுக்கே உரியவள். உன் தந்தை அறிவு மிகுந்த பிராமணோத்தமர், பிரம்மாவின் பேரன். அப்படி இருக்க நீ ஏன் தருமநெறியில் வாழக்கூடாது? உன் சகோதரனை குபேரனுக்கு நீ அவமானத்தை உண்டாக்குகிறாய். என்னிடம் இவ்வாறு பேசுவதற்கு உனக்கு வெட்கமாய்இல்லையா?உனது ராஜயோகம், ஆடம்பரம் புகழ் இவற்றை என் காலால் உதறித் தள்ளிவிடுவேன். என்னை என் கணவரிடம் சேர்த்து அவருடைய மன்னிப்பைப் பெற்றுக் கொள். இல்லையானால் நீ உன் சுற்றத்தாருடன் நாசமடைவாய்.''

அது கேட்ட ராவணன், ''அடி பெண்ணே! உனக்கு ஓராண்டு தவணை கொடுக்கிறேன். அதற்குள் நன்கு யோசித்து

ஒரு முடிவுக்குவர். நீ இணங்க வில்லையானால் உன்னைக் கொன்று விடுவேன்'' என்று கடுஞ் சொற்களைக் கூறிச்சென்றான்.

சீதை தன் நாட்களை மிகுந்த துன்பங்களிடையே கழித் தாள். பத்து மாதங்கள் உருண்டு ஓடின,

ஹநுமான் அசோக வனம் வந்து சீதையைக் கண்டார். ஸ்ரீராமபிரான் கொடுத்திருந்த மோதிரத்தைச் சீதையிடம் அளித்தார். அதைக்கண்ட அவள் ஆனந்தமடைந்து ராமபிரா னைப் பற்றிய எல்லா விபரங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டாள்.

ஹநுமான் சீதையிடம், "தேவி! என்முதுகில் ஏறிக்கொள் ளுங்கள். நான் தங்களை ஸ்ரீராமபிரானிடம் கொண்டு சேர்க் கிறேன்'' என்றார். அதற்கு சீதை, "என்கணவரின் ஆணை இல் லாமல் நான் அப்படி வரமாட்டேன். அவர் நேரில் வந்து அழைத்தால் தான் வருவேன். மேலும் நான் பிறருடைய உடலைத் தீண்ட மாட்டேன். என் தலைவரிடம் அவரே வந்து என்னை இந்தச் சிறையிலிருந்து மீட்டிச் செல்லும்படிக் கூறு வாய். இந்தச் சூடாமணியை நீ இங்கு வந்ததற்கு அடையாள மாக அவரிடம் கொடு'' என்று கூறினாள்.

ஹநுமான் ஸ்ரீராமனிடம்வந்து சூடாமணியைக் கொடுத்து சீதாதேவி கூறியவற்றை எடுத்துரைத்தார். அதன் பின்பு யுத்தம் முடிந்தபின், ஸ்ரீராமன் விபீஷணரிடம் சீதையை தன் னிடம் அழைத்து வருமாறு ஆணையிட்டார். விபீஷணர் அவ் வாறே செய்ய சீதை ஸ்ரீராமபிரானை அடிபணிந்து வணங்கினாள்

அப்போது ஸ்ரீராமன்சொன்னார், "அன்புள்ள சீதா! தீயோ னாகிய ராவணனையும் அவனைச்சேர்ந்த அரக்கர்களையும்கொன்று உன்னை மீட்டியதான என்கடமையை நிறைவேற்றி விட்டேன். இதுவரை நீ மாற்றான் வீட்டில் வசித்து வந்திருக்கிறாய். எனவே சிறந்த புனிதமான குடும்பத்தைச் சேர்ந்த நான் உன்னை எப்படித் திரும்ப அழைத்துக் கொள்வது? உன்னை என் மனைவி என்று நான் எப்படி ஏற்றுக் கொள்வேன்? நான் உன்னை கைவிட வேண்டி இருக்கிறது. நீ உன் விருப்பப்படி எங்கு வேண்டு மானாலும் போகலாம்.''

சீதாதேவி சொன்னாள்: " நான் தங்களைத்தவிர வேறு எவருக்கேனும் கணப்பொழுதேனும் என் மனதில் இடமளித்திருந்தால் தங்களுடைய இந்த ஆணை என்னை பாதிக்கட்டும். எனது துன்பம் மிகுந்த நாட்களை அசோகவனத்தில் தங்கள் நினைவாகவே கழித்திருக்கிறேன். தீவிர தவவாழ்க்கையே மேற்கொண்டேன். தாங்கள் இப்படி ஆணையிடுவதற்கு முன்பு என்னைப் பற்றி ஒன்றுமே கேட்கவில்லை நான் ஒரு சாதாரண பெண் அல்ல. நான் தவசிரேஷ்டரும் வீரருமான ஜனக மகாராஜாவின் மகள், சிறந்த ரகுவம்சத்தில் சம்பந்தமடைந்த ராணி நான். சூரியவம்சத்து மன்னர்களில் தலைசிறந்தவரான ஸ்ரீராமபிரானின் மனைவி நான். இவ்விதக் கடுஞ்சொற்களை கூறுமுன் இதையெல்லாம் நீங்கள் மறந்து விட்டீர்கள். மரணம் பற்றிக் கூடநான் ஒருசிறிதும் அஞ்சவில்லை. என் மீது நீங்கள் என் கற்பில் களங்கத்தை உண்டாக்கி விட்டீர்கள். மாவீரர்கள் நிறைந்த இந்தச்சபையில் உபந்யாசம் செய்து விட்டீர்கள். இந்த அவமானத்தோடு நான் என் உயிரைவிட விரும்பவில்லை. "இலக்ஷ்மணா! எனது உத்தரக்கிரியைக்கான நெருப்பை இங்கே மூட்டு. நான் உண்மையில் கற்பிழந்தவளாகில், உண்மையில் வேறு ஆடவரை மனதில் நினைத்தவளாகில், இவ்வுடல் எரிந்து சாம்பலாகட்டும். ஆனால் நான் தூயவள், என்கணவரையே மனதிற்கொண்டவள் என்பது உண்மையாகில்; நெருப்பு என்னை எரிக்காது. இந்த பரீட்சைக்குப் பிறகு எனது தகுதியை உலகம் அறியட்டும்."

இதைக் கேட்ட இலக்ஷ்மணன் ஸ்ரீராமபிரானின் முகத்தை நோக்கினான். ஸ்ரீராமன் சீதை கூறியபடிச் செய்யுமாறு உத்தரவிட்டார்.

இக் கடுஞ்சோதனையை எண்ணி மிகுந்த வருத்தத்துடன் இலக்ஷ்மணன் நெருப்பை வளர்த்தான். அதற்குள் சீதாதேவி சிறிதும் பயமின்றி நுழைந்தாள். அக்கினி பகவான் சீதையைத் தன் கரங்களில் ஏந்தியவாறு வெளிப்பட்டார். தீக்கடவுள் கூறினார், "ஓ ராம! இந்த சீதை உன்னுடையவள். இவள் மிகவும் தூயவள்; ஒரு பாவமும் அறியாதவள். எனவே உனது மனைவியாக இவளை ஏற்றுக்கொள். இவள் உன்னுடன் இணைந்தவள். கனவிலும் கூட உன்னையன்றி வேறு யாரையும் இவள்

என்னையில்லை. இவள்மீது நீ கொண்ட சந்தேகம் முற்றிலும் ஆதாரமற்றது. இவ்வுலகில் எவருமே இத்தகைய கடுஞ்சோதனைக்கு ஆளானதில்லை'' என்று கூறிவிட்டு அக்னிதேவன் மறைந்தார்.

ஸ்ரீராமன் சொன்னார், ''பெருமைக்குரிய பெண்ணே! இது ஒரு மிகப்பெரிய பரீக்ஷை. அதில் நீ வெற்றிகரமாய் தேர்ந்து விட்டாய். ஒரு கற்புடைய மங்கை எத்தகைய அமானுஷ்யச் செயலை செய்யக்கூடும் என்பதை உலகிற்குக் காட்டி விட்டாய். கடவுளரே உன்னை ஒரு சிறந்த இலட்சிய மனைவியாகச் செய்து விட்டனர்'' என்றவாறு ஸ்ரீராமபிரான் சீதாதேவியின் கரங்களை அன்பும் ஆனந்தமும் கொண்டு பற்றித் தன்பால் ஏற்றுக் கொண்டார். அப்பொழுது சீதை ராமபிரானின் கால் தூளியை எடுத்துத் தன்தலையில் வைத்துக் கொண்டாள்.

பிறகு ராமன் விபீஷணனை இலங்கைக்கு மன்னனாக முடி சூட்டினார். வனவாஸ காலமாகிய 14 ஆண்டுகள் முடிவடைந்ததால், ஸ்ரீராமன், இலக்ஷ்மணன், சுக்ரீவன், விபீஷணன் சீதை ஆகிய எல்லோரும் புஷ்பக விமானத்தில் அயோத்திக்குப் புறப்பட்டனர்.

பரதன் நகரமாந்தருடன் தன் சகோதரர்களை வரவேற்பதற்கு எதிர் நோக்கி வந்தான். ராமன், சீதை இலக்ஷ்மணன் கைகேயியிடம் சென்று முதலில் வணக்கத்தைத் தெரிவித்தார்கள். ஒரு மங்களமான நன்னாளில் ஸ்ரீராமபிரான் அயோத்தியின் அரியணையில் அமர்ந்தார். தனது அரச கடமையை நடுநிலை வகுத்து செய்தார். பாரபட்சமும் தன்னலமும் சிறிதும் இல்லாத அவரது ஆட்சியில் மக்கள் விண்ணுலக இன்பமே அடைந்தனர்.

சிலகாலம் சென்றதும் சீதை கற்பவதியானாள். ஒரு நாள் ராமபிரான் அவளிடம் கேட்டார், ''ஸீதே! நீ என்ன விரும்புகிறாய்?'' அதற்கு சீதை, ''சுவாமி! நான் காட்டில் வாழும் முனிவர்களை தரிசிக்கவும் அங்குள்ள பெண்களுடன் பேசி மகிழவும் விரும்புகிறேன்'' என்றனள். ஸ்ரீராமபிரான் அதற்கு இசைந்து மறுநாளே இலக்ஷ்மணனுடன் சீதையை வனத்திற்கு அனுப்புவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

ஸ்ரீராமபிரான் தன்நாட்டு மக்களின் வாழ்க்கை நிலையையும் அவர்களின் நோக்கங்களேயும் அறிந்துவர சில உயர் அதிகாரிகளை அனுப்பினர். ஒரு நாள் ராமன் அவர்களில் ஒருவரான துர்முகனைப் பார்த்து, "நீ இன்று என்ன செய்தி கொண்டு வந்திருக்கிருய்?" என்று கேட்டார். துர்முகன் சொன்னன், "மன்னரே! தங்களுடைய நீதி பிறழாத ஆட்சியில் மக்கள் எல்லோரும் எல்லையற்ற மகிழ்ச்சியுடன் வாழ்கின்றனர். எல்லோரும் உங்களை வெகுவாக புகழ்கின்றனர். ஆனல் ஒரு சிலர் சீதையைத் தாங்கள் அரண்மனையில் சேர்த்து வைத்துக் கொண்டிருப்பதற்குத் தங்களை நிந்திக்கின்றனர். சீதை இராவணனின் நாட்டில் பல மாதம் இருந்து வந்ததற்கு போதுமான விசாரணை செய்யாமல் சேர்த்துக் கொண்டதையே அவர்கள் குறிப்பிடுகின்றனர். தாங்கள் செய்துள்ள இந்த காரியம் நாட்டில் உள்ள பெண்களுக்கெல்லாம் ஒருதவருன முன் மாதிரியாகும்" என்கின்றனர். இதைக் கேட்ட ஸ்ரீராமனின் இதயம் மிகவும் புண்பட்டது.

அவர் வெளியே உலாவச் சென்ருர். ஒரு குளத்தின் பக்கமாகப் போகும் பொழுது இரண்டு வண்ணன்கள் ஆடைகளைத் துவைத்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்குள்ளே ஏதோ வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. அவர்களில் ஒருவர் மாமனர் மற்ருெருவர் மாப்பிள்ளை. மாமனர் சொன்னர், "மாப்பிள்ளை! உமது தகப்பனர் செல்வந்தர்; மதிப்புக்குரியவர். அதனல்தான் என்மகளை உமக்கு விவாஹம் முடித்தேன். நீர் அவளை பலமாக அடித்து விரட்டியதால் அவள் என் வீட்டில் இருக்கிருள். இளமையும் அழகும் கொண்டு அவள் கணவன் இல்லாமல் தவிக்கிருள். அவள் உம்மை விட்டுத் தனியாக இருப்பது சரியில்லை" அதற்கு மாப்பிள்ளை சொன்னர், "உமது மகள் என்னுடன் வசிக்க விரும்பவில்லை. உம்முடனே தான் இருக்க விரும்புகிருள். ஸ்ரீராமனின் மனைவி சீதையை இராவணன் பலாத்காரமாகத் தூக்கிச் சென்ருன். அவள் இலங்கையில் நீண்ட காலம் தங்கி இருந்தாள். ஆனல் ராமனே எந்தவித தயக்கமும் இல்லாமல் அவளை அரண்மனைக்கு அழைந்து வந்து விட்டான். அவன் அரசன். எனவே எவரும் அவர்மீது குற்றம் சுமத்த முடியாது. ஆனல் நாமோ ஏழைகள். தருமத்திலிருந்து விலகுவோமானல், நம் உறவினர்கள் நம்மை நிந்தித்து ஜாதிப்

பிரஷ்டம் (ஜாதியிலிருந்து விலக்குதல்) செய்து விடுவார்கள். மேலும் ஊரை விட்டேதுரத்தி விடுவார்கள்.''

இவர்களுடைய பேச்சை ஸ்ரீராமபிரான் மறைந்திருந்து கேட்டார். மிகவும் துயரத்தில் ஆழ்ந்தார். தனக்குள்ளே எண்ணலானார், ''சீதைகற்புடையவள், பரிசுத்தமானவள் பதிபக்தி நிறைந்தவள் என்று எனக்கோ நன்ருகத் தெரியும்; இருந்த போதிலும் இந்த நாட்டை நீதி வழுவாமல் ஆட்சி புரிவதற்கு நான் சீதையை விட்டுப் பிரிந்தே ஆகவேண்டியிருக்கிறது.''

உடனே அரண்மனைக்கு வந்து இலக்ஷ்மணனை அழைத்துக் கூறலானார். ''எனது அன்புக்குரிய தம்பீ! எனது பிரஜைகள் சீதையை நான் அரண்மனையில் வைத்துக் கொண்டிருப்பதை நிந்திக்கிருர்கள். அவளுடைய கற்பு நிலை கெட்டிருப்பதாக அவர்கள் கருதுகிருர்கள். நானே மக்களை யாதொரு குறையுமின்றி நேர்மையும நீதியும் கொண்டு ஆளப்போவதாக உறுதி மொழி தந்துள்ளேன். எனவே, சீதையை தேசபிரஷ்டம் செய்வதாகத் தீர்மானித்து விட்டேன். நீ அவளைக் காட்டிற்கு அழைத்துச் சென்று அங்கே விட்டுவிடு.''

இலக்ஷ்மணன் கண்களில் நீர் மல்க ஸ்ரீராமபிரானிடம் சொன்னான். ''சுவாமி! சீதையோ மிகவும் கொடிய பரிசோதனையின் மூலம் தனது கற்பின் தூய்மையை நிருபித்து விட்டாளே! தீக்கடவுளே அவளது களங்கமில்லா மனதையும் கற்பின் தூய்மையையும் பெரும் கூட்டத்திடையே வெளிப்படையாகத் தெரிவித்திருக்கிருரே! அப்படி இருக்க இன்னும் இந்த அவலநிலை அவளுக்கு ஏன் வரவேண்டும்?''

அதற்கு ஸ்ரீராமன், '' தம்பீ! களங்கமற்றவள், கற்புடையவள் என்பதை நான் நன்ருக அறிவேன். ஆனல் என்னுடைய பிரஜைகள் அந்த அக்கினிப் பரீட்சையை நேரில் காணவில்லை. ஆகையால்தான் அவர்கள் இதை நம்பவில்லை. எனது புனிதமான வாக்குறுதியை நான் எப்படியும் நிறைவேற்றியே தீரவேண்டும். எனது தன்னலப் போக்கை நான் தியாகம் செய்தே ஆகவேண்டும்'' என்று கூறிஞர். இலக்ஷ்மணன் மேலும் கூறினன், '' அந்தஅக்கினி பிரவேசம் மாபெரும் கூட்டத்திடையே நிகழ்ந்தது. அந்தச் செய்தி இந்த அயோத்தி

மக்கள் வரை நன்ருகப் பரவியே இருக்கும். இவ்வுலகம் அவதூறு பேசுவோராலேயும் புறம் கூறுவோராலேயுமே நிறைந்துள்ளது. தெய்வங்களும் கூட அவர்களைத் திருப்தி செய்து மகிழ்விக்க முடியாது. நான் எனது இதயத்தைத் திறந்து காட்டிச் சொல்கிறேன். நானே தங்களுடைய பணிவான சேவகன். எனவே தங்கள் கட்டளை எதுவோ அதை உடனே நிறைவேற்றுகிறேன்.''

ஸ்ரீராமன்;– ''இதுகுறித்து நான் பலமுறை சிந்தனை செய்து பார்த்த பிறகே இந்த முடிவுக்கு வந்துள்ளேன். எனவே இலக்ஷ்மணு! இவளை நீ நாளைக்குத்தவருமல் காட்டிற்கு அழைத்துச் செல்வாயாக. ஆனுல் கங்கையின் மறுகரையை நீ அடையும் வரை நான் அவளை தேசபிருஷ்டம் செய்து விட்டேன் என்பதை மட்டும் அவளிடம் சொல்லாதே.''

இராமனின் ஆணையை இளையவன் அப்படியே நிறைவேற்றினுன். இருவரும் ஒரு படகில் கங்கையைக் கடந்தனர். அடர்ந்த காட்டிடையே சென்றதும் இலக்ஷ்மணன் விம்மி விம்மி அழலானுன். சீதை அது கண்டு, ''இலக்ஷ்மணு! என்ன காரணத்திற்காக இப்படி அழுகிருய்?'' என்று கேட்டாள்.

இலக்ஷ்மணன் கூறினுன், ''மதிப்பிற்குரிய தாயே! இதயத்தைப் பிளக்கும் அந்தச் செய்தியை நான் எப்படி தங்களிடம் சொல்லுவேன்? எனது அண்ணன் தங்களைக் கைவிட்டு விட்டார். காரணம் தாங்கள் இராவணனின் நகரில் இருந்ததால் தங்கள் கற்பில் களங்கம் இருப்பதாக அயோத்தி மக்கள் கருதுவதேயாகும். எனவே தான் நான் தங்களை அவர் ஆணையின்படி நாடு கடத்தி இங்கே அழைத்து வந்திருக்கிறேன்.

சீதாதேவி தான் அடைந்த உணர்ச்சிகளை கீழ்கண்டவாறு வெளியிட்டாள்:–

''ஹே பிரபோ! தாங்கள் சீதையின் கற்பு நிலை பற்றி நன்கு அறிவீர்கள். தங்கள் பால் எவ்வளவு அன்புடன் நடந்தாள் என்பது தாங்கள் அறிவீர்கள். இப்பொழுது அவளுக்கு ஒரு கெட்ட பெயர் ஏற்படாமல் இருக்கவே கைவிட்டிருக்கிறீர்கள் நீரே எல்லாவிதத்திலும் அவளுக்கு ஒரே கதியாக இருப்பதால்

தங்களுக்கு ஏற்படக்கூடிய அவச்சொல்லேயும் அவமானத்தை யும் போக்க வேண்டியது அவளுடைய முக்கிய கடமையாகும். இலக்ஷ்மணா! ஸ்ரீராமனிடம் சொல் ''ஓர் அரசன் தனது பிரஜை களைக் காப்பதற்கு வேண்டிய அறநெறியைக் கையாளவேண் டும். இதுவே அவருக்குரிய சிறந்த பண்பாடு, சீதையோ தன் வாழ்நாள் பூராவும் துன்பமும், கஷ்டமும் கவலையுமே கொள் வதற்காகப் பிறந்தவள். விதி அவ்வாறு எண்ணுகிறது. சீதை இதற்காக கொஞ்சம் கூடவருத்தப்படவில்லை. அவள் ஸ்ரீராமனை வெறுக்கவும் இல்லை. அவர்தான் சீதையைப் பிரிந்து மனம் குலையாமல் இருக்க வேண்டும். அவரை அச்சமயங்களில் தேற்றி சமாதானம் செய்வாயாக. அவர் அவளை பஹிஷ்காரம் வெளிப் படையாகச் செய்திருந்த போதிலும் இதயத்தில் அவ்வாறு செய்து விடவேண்டாம் என்று சொல். அவள் எப்பொழுதுமே தன் நாதனையே சிந்தையில் வழிபட்டுக் கொண்டிருப்பாள். அவள்எங்கு வசித்தாலும் ஸ்ரீராமன் அவள் முன்பு பிரசன்னமாய் இருப்பார். அவர் தலைவன். அவள் அவருடைய வேலைக்காரி. அவர் குரு. அவள் அவருடைய சிஷ்யை அவர் அரசன் அவள் பிரஜை அவர் அயோத்தியின் மன்னர். அவள் ராமப்பிரியா என்ற பெயர் கொண்ட ஒரு தபஸ்வினி.''

எத்தகைய இலட்சிய மனைவி சீதை என்பதைப் பாருங்கள்! அவள் வாயிலிருந்து வந்த ஒவ்வொரு சொல்லும் அவளுக்குத் தன் கணவனிடம் இருக்கும் பயபக்தி, மரியாதை கணவனே கண்கண்ட தெய்வம் என்ற உணர்வையும் அல்லவா காட்டு கிறது? அச்சொற்கள் ஒவ்வொரு பெண்ணின் இதயத்திலும் கல்வெட்டு எழுத்துப் போல பதிய வேண்டும். இப்படி ஒரு வருந்தத்தக்க சூழ்நிலையில் சீதையைத் தவிர வேறு எந்த ஒரு பெண்ணாலும் இத்தகைய இதயத்தைத் தொடும்படியான சொற்களைச் சொல்ல முடியாது. ஒவ்வொரு சொல்லும் பெண் களின் பண்பாட்டிற்கான வைரமணிகளாகும்.

சீதாதேவி தேம்பி அழலானாள். இலக்ஷ்மணன் அயோத்தி நோக்கித் திரும்பினான். அங்கு சமீபத்திலிருந்த ஆசிரம வாசி களான சிறுவர்கள் தற்செயலாக தனியாக விடப்பட்ட சீதை இருக்கும் இடத்திற்கு வந்தார்கள். சீதை அழுது கொண்டிருப்

பதைக்கண்ட அவர்கள் நேராக வால்மீகி மகரிஷியிடம் சென்று தெரிவித்தார்கள்.

வால்மீகி உடனே அவ்விடம் விரைந்து அப்பெண்ணைப் பார்த்து, "குழந்தாய் அழாதே. தைரியமாய் இரு. நான் உன்னை என் ஆச்ரமத்திற்கு அழைத்துச் சென்று எல்லா வசதிகளையும் செய்து தருகிறேன். அங்கே உனக்கு பல சினேகிதிகளும் உள்ளனர்" என்று ஆறுதல்தரும் சொற்களைச் சொன்னார்.

சீதை வால்மீகியின் அடிபணிந்து வணங்கி அவருடன் ஆசிரமத்தை அடைந்தாள்.

சில மாதங்கள் கழிந்தபின், சீதை இரண்டு அழகான இரட்டையரான ஆண்மக்களைப் பெற்றெடுத்தாள். மகரிஷி அவர்களுக்கு குசன் என்றும் இலவன் என்றும் பெயர் சூட்டினர். இருவருக்கும் அவர் உலகிய வேதாந்தக் கல்விகளை போதித்தார். தனுர் வேதத்தையும், சங்கீதத்தையும் அவர்கள் சிறப்பாகப் பயின்று தேர்ச்சி பெற்றனர்கள். மகரிஷியால் இயற்றப்பட்ட இராமாயணத்தை அவ்விருவரும் இசையோடு இனிமையாகப் பாடினர்கள்.

ஒருசமயம் ஸ்ரீ ராமர் செய்த அசுவமேத யாகத்திற்கு வால்மீகியை வரவழைத்தார். ரிஷி அந்த இருகுழந்தைகளையும் உடன் அழைத்துச் சென்றார். தெருக்களிலும் ஆலயங்களிலும் பிரபுக்களின் வீடுகளிலும், மற்றும் பொது இடங்களிலும் இராமாயணத்தை இசையுடன் பாடுமாறு இலவகுசர்களைப் பணித்தார். அந்த இனிய கானத்தைக் கேட்டு அயோத்தி மக்கள் எல்லோரும் மெய்மறந்து வியந்து செயலற்று நின்றனர் இச்செய்தி ஸ்ரீராமபிரானின் செவிகளுக்குச் சென்றது. அவர் அந்த சிறுவரின் இசையைக் கேட்க விரும்பினர். இருகுழந்தைகளும் ராஜசபைக்குச் சென்று ராமாயணத்தை தேவ கானமாக பாடலானர்கள். ஸ்ரீ ராமபிரான் அவ்விரு பாலர்களும் மகரிஷி வால்மீகியின் சீடர்கள் என்று எண்ணினர். மகரிஷி பிறகு அவர்களைப்பற்றிய முழு விபரத்தையும் விளக்கமாகக் கூறினர். மேலும் தொடர்ந்தார், "சீதை ஒரு பூரண கற்புடைய மங்கை. நீர் அவளை ஏற்றுக்கொள்ள வேண்டும். தன்னுடைய நேர்மை கற்பு பற்றி பிரமாணம் எடுத்துக் கொள்ள அவள் பூரணமாக சம்மதிக்கிருள்."

ஸ்ரீராமபிரான் அதற்கு சம்மதித்தார். ஒரு நாள் சீதை ராஜசபை கூடிய போது அங்கே தோன்றி பணிவுடன் சொன்னாள்.

''ஏ பூமிதேவியே! என் தாயே! அன்போடு உன்இதயத்தில் எனக்கு ஓர் இடம் கொடு. ஸ்ரீராமபிரானையன்றி என் மனதில் வேறு எவருக்கும் இடம் கொடுக்கவில்லை. இது உண்மை என்றால் என்னை உன்னிடம் சேர்த்துக்கொள். தாயே! நான் எப்பொழுதும் என் நாதரான ஸ்ரீராமபிரானை மனம் வாக்கு செயல் மூன்றாலும் பூஜித்தே வந்துள்ளேன். உனது மார்பில் நான் ஓய்வுபெற எனக்கு இடம் கொடு.''

பூமடந்தை உடனே சீதைக்கு வழிவிட்டாள். ஓர் அழகிய ஒளி வீசும் இளம் நங்கை ஒருத்தி நிலம் பிளவுபட அதிலிருந்து வெளிபட்டாள். இமைப்பொழுதில் சீதையை அன்புடன் தன் கரங்களில் அணைத்துக்கொண்டு அங்கேயே மறைந்தாள் இதைக் கண்ட மாந்தர் யாவரும் ஆச்சரியத்தில் மூழ்கினர்.

சீதை பூமாதேவியின் புத்திரி. மிதிலையில் பூமியிலிருந்து வெளிவந்து அயோத்தியில் பூமிக்குள்ளேயே மறைந்தாள். தன் தாயைப்போலவே சீதை பொறுமை, எதையும் தாங்கும் சக்தி, தியாகம் ஆகிய குணநலன்களைக் கொண்டு வாழ்ந்தாள்.

ஒருநாள் கூட அவளால் சந்தோஷமாய் இருக்க முடியவில்லை. வாழ்க்கை முழுவதும் துன்பமே கண்டவள். எண்ணற்ற துன்பங்களை இலங்கையில் அனுபவித்தாள். எவ்வளவு வீரத்தோடு அவற்றையெல்லாம் தாங்கிக் கொண்டாள். அக்கினி பிரவேசம் செய்து தன் கற்பு நிலையை உலகறியச் செய்தும் கூட காட்டிற்கு தன் கணவனால் கருவுற்ற காலத்தில் கைவிடப் பட்டு அனுப்பப்பட்ட போதிலும் ஸ்ரீராமனிடம் தூய அன்பும் பதிபக்தியும் கொண்டு அவரையே தெய்வமென வழிபட்டு வந்தாள். இத்தகைய ஒரு கற்புக்கரசியை மூவுலகங்களிலும் இனி காண முடியாது.

பல யுகங்கள் கடந்தும் கூட சீதாதேவியின் கற்பு பாரத நாட்டுப் பெண்மணிகளின் வாழ்விற்கு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. அவளுடைய சீரிய இலட்சிய வாழ்வு

இராமாயணம் படிப்போர் கேட்போர் மனதில் வியப்பையும் மரியாதையையும் உண்டாக்குகிறது.

சீதை நடத்திய சிறந்த வாழ்வை இந்தியப் பெண்டிரும் உலகப் பெண் குலமும் தத்தம் வாழ்வில் மேற்கொண்டு சீரும் சிறப்பும் பெற்று வாழ்வார்களாக. அவர்கள் சீதையைப்போல பலகோடி சீதைகளாக ஒளி பெற்று விளங்குவார்களாக. சீதாதேவியின் பூரண ஆசிகள் எல்லோருக்கும் கிடைக்கட்டும். சீதையின் புகழை நாம் இப்போது பாடுவோம்.

ஜய ஸீதே ஜய ஸீதே ஜயஸ்ரீ ஸீதே ஜய ஸீதே

ஜய ராம ஜய ராம ஜய ஸ்ரீராம ஜய ராம.

ஓம் தத் ஸத்.

## 8. இலக்ஷ்மணன்

தசரதரின் இரண்டாவது மனைவியான சுமித்திரையின் புதல்வன் இலக்ஷ்மணன். ஸ்ரீராமபிரானின் இணை பிரியாத தம்பி. அவன் ஆதிசேஷனின் அவதாரம் இன்பங்களிலும் துன்பங்களிலும் ஸ்ரீராமனை விட்டு நீங்காமல் அவருக்கு சேவை செய்தவன். இருவரும் உண்பது, உறங்குவது, விளையாடுவது எல்லாவற்றிலும் சேர்ந்தே செயல்பட்டனர். ஒருவர் மற்றவரின் பிரிவினையை தாங்க மாட்டார்கள். ஸ்ரீராமன் மகிழும் வண்ணம் அவருக்குச் சேவை செய்தான் இலக்ஷ்மணன். ராமன் ஆணைகளை ஒன்று விடாமல் நிறைவேற்றினான். ராமதாஸனாகவே வாழ்ந்தான்.

இலக்ஷ்மணன் ராமனிடம் தூய களங்கமில்லாத சகோதர வாஞ்சை கொண்டிருந்தான். அவன் வாழ்க்கையின் நோக்கம் தன் அண்ணனுக்குச் சேவை புரிவதேயாகும். ராமனது கட்டளையின்றி எந்த ஒரு காரியத்தையும் செய்யமாட்டான். அவன் ஸ்ரீராமனை குரு, தந்தை, தாய் எனவே மதித்தான். சூரியனை எப்படி நிழல் தொடருமோ அதே போல ஸ்ரீராமனை இலக்ஷ்மணன் தொடர்ந்தான்.

இதயத்தில் தன்னல உணர்வே அவனுக்குக் கிடையாது. அண்ணனுடன் காடு செல்ல வேண்டும் என்பதற்காக ராஜரீக சுகங்கள் எல்லாவற்றையும் உதறித் தள்ளினன். எல்லா விதங் களிலும் ராமனுக்கே சேவை செய்தான். அண்ணனின் அன்பு என்ற பலி பீடத்தில் தனது சௌகரியங்கள் எல்லாவற்றையும் மாய்த்தான் எல்லாம் ராமனே அவனுக்கு. ராமனுக்காக எதையுமே தன் உயிரையும் கூடத் தியாகம் செய்யத் துணிந் தான். காடு செல்ல வேண்டி கணப்பொழுதில் தன் தாய், மனைவி; அரண்மனை சுகம் இவற்றை விட்டொழித்தான். சீதா ராமனுடன் 14 ஆண்டுகளும் தூங்காமலே பணிபுரியக் காடு சென்றான். என்ன பெருந்தன்மை! என்ன தியாகம்! தன் சகோ தரனுக்குப் பணிவிடை புரிந்தே வாழ்ந்த இத்தகைய புனித ஆத்மாவை உலகம் என்றுமே காணமுடியாது. அந்தக் கார ணத்தினல்தான், ராமாயணம் படிப்போரும் கேட்போரும் இலக்ஷ்மணனை மிகவும் உயர்வாகப் புகழ்கின்றனர். சிலர் பர தனையும் வேறு சிலர் ஹனுமானையும் புகழ்கின்றனர். ஆனல் இலக்ஷ்மணன் ஒரு விதத்திலும் அவர்களைவிடத் தாழ்ந்துவிட வில்லை.

வனவாசத்தின் ஆபத்துக்களை நன்ருகத் தெரிந்திருந்தும், இலக்ஷ்மணன் 14 ஆண்டுகளும் ஸ்ரீராமனுடன் வனத்திலேயே வசித்தார். இதெல்லாம் ராமன் மீது அவன் கொண்டிருந்த பேரன்பையே காட்டுகிறது. ஸ்ரீராமனும் இலக்ஷ்மணன்பால் எல்லையற்ற அன்பு கொண்டிருந்தார். மேகநாதன் விடுத்த உயிரைக் குடிக்கும் நாகாஸ்திரத்தினல் இலக்ஷ்மணன் மயங்கி இருந்தபோது ராமனின் இதயமே நின்று விடுவதுபோல இருந் தது. தேம்பித் தேம்பி அழுதார். இலக்ஷ்மணன் இறந்தால் தான் திரும்பவும் அயோத்திக்குப் போவதில்லை என்று தீர்மா னித்தார். ஸ்ரீராமன் சொன்னர், " சீதையைப்போன்ற மனை வியை அடையலாம். ஆனல் இலக்ஷ்மணனைப் போன்ற ஒரு உண்மையான தம்பியை இவ்வுலகில் அடைய முடியாது. என் தம்பிஇல்லாமல் இவ்வுலகம் எனக்கு எந்த பயனையும் தராது."

இலக்ஷ்மணன் மனம், வாக்கு, செயல் மூன்றிலும் பரிசுத்த மானவன். வனவாச காலம் பூராவுமே அவன் பிரமச்சரியத்தைக் கடைபிடித்தே விரதம் பூண்டிருந்தான்.

இலக்ஷ்மணன் ஸீதையை ஏறிட்டுக்கூட பார்த்ததில்லை. சீதையின் மலரடிகளையே தான் தினமும் கண்டு வணங்குவது வழக்கம். சீதையின் அணிகலன்களை அவன் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. தான் அநுஷ்டித்து வந்த பிரமச்சரியத்தின் ஆற்றலால் மேகநாதனைப் போரில் வீழ்த்திக் கொன்றான். மேகநாதன் இராவணனுடைய மகன். அவன் கடுந்தவம் புரிந்து எவன் 12 ஆண்டுகள் விடாமல் பிரமச்சரிய விரதம் பூண்டானோ அவனாலேதான் கொல்லப்பட வேண்டும் என்ற வரம் பெற்றான்.

இராமனது பெயருக்கும் புகழுக்கும் பங்கம் விளைவிப்பவரின் மீது இலக்ஷ்மணன் கடுங்கோபம் கொள்வான். பரதன் பெரும் படையுடன் சித்திர கூடத்திற்கு ஸ்ரீராமபிரானை அயோத்திக்கு அழைத்துச் செல்ல வந்த பொழுது, பரதனை கொல்வதற்குத் தீர்மானித்தான். ராமனைக் கொன்று நாட்டை நிரந்தரமாய் ஆளவே பரதன் படையுடன் வருகிறான் என்று இலக்ஷ்மணன் கருதினான். அப்போது ராமன் சொன்னான். "அன்புள்ள இலக்ஷ்மணா! பரதன் தூய்மையும், உதாரகுணமும் உள்ளவன். உன்மீதும் என்மீதும் தீவிர அன்பும் பிரியமும் கொண்டவன். இவ்வித சந்தேகத்தை விட்டுவிடு" அதன் பிறகு தான் இலக்ஷ்மணன் சமாதானமடைந்தான்.

இராமனுக்கு பட்டம் கட்ட விரும்பாமல் தன் மகன் பரதனுக்கு முடிசூட்ட சூழ்ச்சி செய்த கைகேயியின் மீதும் அதற்கு உடன்பட்ட தசரதர் மீதும் இலக்ஷ்மணன் கடுஞ்சினம் கொண்டான். ஸ்ரீராமன் சமாதானம் செய்த பிறகே அடங்கினான். எல்லாமே இறைவனின் திட்டப்படி நடப்பதாகவும்; விதியை வெல்ல எவராலும் இயலாது என்றும் சொல்லி இலக்ஷ்மணனை ஸ்ரீராமன் சாந்தப்படுத்தினார்.

வனவாச காலத்தில் இரவு பகலாக இலக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்கும் சீதைக்கும் பணிவிடை புரிந்தான். அவர்கள் தூங்கும் பொழுது தான் விழித்திருந்து அவர்களுக்கு எந்த ஒரு தீங்கும் நேரிடாதபடி காவல் காத்தான். உண்பதற்கு கந்த மூலங்களை தானே சென்று கொண்டு வந்தான். தங்குவதற்கு குடிசைகளை அமைத்தும் ஆறுகளைக் கடப்பதற்கு மரப்பாலங்களை இணைத்தும் உதவி புரிந்தான். அவன் சீதாராமரின் மிகவும் தாழ்மையான

வேலைக்காரன் என்றே சொல்ல வேண்டும். ஸ்ரீராமபிரானுக்குப் பணிபுரிவதே ஒரு மிகச்சிறந்த யக்ஞம் என இலக்ஷ்மணன் கருதி செயலாற்றினன். இராமனுக்கு அவன் செய்யாமல் விட்ட காரியம் ஒன்றுமே கிடையாது.

இலக்ஷ்மணன் கௌசல்யையிடம், "தாயே! இராமன் நெருப்பிற்குள் சென்ருல் முன்னல் நான் சென்று விடுவேன். அவர் காட்டிற்குப்போனல் நானே அவருக்கு முன் சென்று அவருக்கு வழி அமைப்பேன். கணப்பொழுதும் அவரை விட்டு பிரிந்து வாழமாட்டேன்'' என்று சொன்னன். எவ்வளவு தீவிர அன்பை இலக்ஷ்மணன் ஸ்ரீராமன்பால் கொண்டிருந்தான்! உலக வரலாற்றிலேயே இத்தகைய அன்பைக் காணவியலாது. இலக்ஷ்மணனைப்போன்ற ஓர் ஆதர்ச தம்பியை உலகில் இனி எங்குமே காணமுடியாது.

தசரதரோ, கைகேயியோ இலக்ஷ்மணன் காடுபோக வேண்டும் என்று கூறவில்லை. அப்படி இருந்தும் தன் அண்ணனுக்கும் அண்ணிக்கும் பணிவிடை செய்ய, அரண்மனை சுகம், தாய், மனைவி இவற்றை கைவிட்டுச் சென்ருன் என்பது ஒரு தியாகத்தின் உச்சநிலையல்லவா? இலக்ஷ்மணன் இராமனிடம் கொண்டிருந்த மரியாதை, பக்தி, தூயஅன்பு இவைகளே அதற்குக் காரணம்.

இலக்ஷ்மணன் தைரியவானுயும், பயமற்றவனுயும் இருந்தான். அவனது வீரத்தை எவராலும் விளக்கிக் கூறமுடியாது. ஸ்ரீராமபிரானிடம் இலக்ஷ்மணன் கூறியதாவது:–

''என் வணக்கத்திற்குரிய அண்ணு! வனத்தில் தங்களுக்கு ஏற்படும் நான்முன்னின்று விலக்கிவிடுவேன். வில்லம்புகளுடன் தங்கள் முன்னே சென்று காட்டிற்குள், தாங்கள் நடந்து வருவதற்கான பாதையை சிறப்பாக அமைத்துக் கொடுப்பேன். பாதையில் ஏற்படும் இடையூறுகளை அகற்றுவேன். நான் தங்களுக்கு உதவும் ஒரு போர் வீரனுகவும், பணிபுரிவோனுகவும் இருப்பேன். உங்கள் இருவருக்கும் உண்பதற்கு கனிகளையும் கிழங்குகளையும் கொண்டு தருவேன். நீங்கள் இருவரும் எப்போதும் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். தாங்களும் சீதையும் தூங்கும்போது நான் இரவு பூராவும் காவலாய்

இருப்பேன். எனக்கு எல்லாம் தாங்களே. எனக்கு வேண்டியது நீங்கள் ஒருவரே. சுவர்க்க போகத்திலோ உலகிய இன்பங்களிலோ எனக்குத்துளி கூட விருப்பம் கிடையாது. தாங்களே எனக்கு ஞானப் பெருநிதியும் வாழ்வும் ஆவீர்.

சீதையை இராவணன் எடுத்துச் சென்ற பிறகு ஸ்ரீராமனின் துயரத்திற்கு ஆறுதல் கூறி அவர்மனதைத் தேற்றினார் ராமன் மனம் தளருங்காலங்களில் இலக்ஷ்மணனே மனஉறுதியுடன் நின்று செயல் புரிந்தார். மேலும் அமாநுஷ்யமான ஆற்றலுடன் செயல் புரிந்தார். ஸ்ரீராமன் தன் தம்பியின் முன் யோசனைகளைக் கேட்டு மிகவும் பயனடைந்துள்ளார்.

ஒருசமயம் இலக்ஷ்மணனின் பேச்சைக் கேட்காததால் மிகுந்த இன்னல்களுக்கு ஆளானார். அந்த மாயமானைத் தொடர்ந்து போகவேண்டாம். அது அரக்கரின் சூழ்ச்சி என்று சொல்லியும் கேட்காமல் ஸ்ரீராமன் சீதைக்காக அதைப்பிடிக்கச் சென்றார். அதனால் நேர்ந்த விளைவு நாம் யாவரும் அறிந்ததே.

இலக்ஷ்மணன் தனது இலட்சியத்தையும், கொள்கையையும் தீவிரமாகக் கடைப்பிடிப்பவன். வாழ்வில் நிகழும் ஒவ்வொரு நிலையையும் அதன் இயல்பையும் நன்றாக அறியக் கூடியவன். சரியான சந்தர்ப்பத்தில் அதற்குத் தக்கபடி சமயோசிதமாய் நடப்பவன். தன் நம்பிக்கையும் தன்மான உணர்ச்சியும் மிகுந்தவன். தன்னையே சார்ந்து செயல்படுவதில் சாமர்த்தியம் மிகுந்தவன்.

யுத்தத்தில் அளவுக்கு மீறிய வீரத்தையும், போர்த் திறமையையும் காட்டினான். எண்ணற்ற அரக்கர்களை போரிட்டு வீழ்த்தினான். தன் உயிரை துரும்பென மதித்தான்.

அண்ணனின் ஆணையை அப்படியே நிறைவேற்றினான், சீதையின் அக்கினிப் பிரவேசத்திற்கு ஸ்ரீராமன் ஆணையின்படி சிறிதும் தாமதியாமல் நெருப்பை மூட்டினான். கர்ப்பமாய் இருந்த சீதையை அண்ணனின் கட்டளையின்படி காட்டிற்கு அழைத்துச் சென்று அங்கே விட்டு வந்தான்.

இலக்ஷ்மணனின் வாழ்க்கை நம் இதயத்தைத் தொட்டு ஆன்மீக உணர்வைத் தூண்டுவதாக உள்ளது. அவன் மாந்த

ரின் மனதில் என்றும் அழியாத பதிவை ஏற்படுத்தியுள்ளான். அவனுடைய வாழ்க்கையில் இருந்து சிறந்த முன்மாதிரியை தேர்ந்தெடுத்து அதைப் பின்பற்றி உங்கள் தினசரி வாழ்வில் நடங்கள். சகோத்ர அன்பைப் பெருக்குங்கள். இலக்ஷ்மண னிடமிருந்து நீங்கள் கற்றுக் கொள்ளக் கூடிய மிகச்சிறந்த பாடம் இதுவேயாகும். இலக்ஷ்மணனின் அடிச்சுவடுகளைப் பின் பற்றுங்கள். இராமபிரானிடம் இலக்ஷ்மணன் கொண்டிருந்த தீவிர பக்தியைக் கவனியுங்கள். இக்காலத்தில் இதற்கு நேர் எதிரிடையாகவே செயல் படுகின்றனர். சாதாரண விஷயங் களுக்குக் கூட சகோதரரிடையே பெரும் பூசல்கள் ஏற்பட்டு நீதி ஸ்தலங்களுக்குச் செல்கின்றனர். சொத்துக்களைப் பங்கிட்டுக் கொள்வதில் பெருஞ்சண்டைகள் போட்டுக் கொண்டு ஒருவருக் கொருவர் பேசாதிருக்கின்றனர், ஸ்ரீ ராமனின் சகோதரர்களைப் போல் வாழ்ந்தால் அமைதியும் சந்தோஷமும் நம்குடும்பங்களில் நிலவும்.

இலக்ஷ்மணனின் புகழை நாம் எப்பொழுதும் பாடுவோமாக.

"ராம லக்ஷ்மண ஜானகீ

ஜய போ லோ ஹநுமான் கீ"

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

## 4. பரதன்

தசரதரின் புத்திரனுன பரதன் ராணி கைகேயியின் வயிற் றில் பிறந்தவன். பரதன் மிகச்சிறந்த ஒரு பக்திமான், ஸ்ரீராம னிடம் எல்லையற்ற அன்பு கொண்டவன். பரதனைப்போல் சகோதர வாஞ்சையுள்ளவர்கள் இவ்வுலகில் எவருமே இருக்க மாட்டார்கள். வில்வித்தையில் நல்ல சிறந்த பயிற்சியுள்ளவன். க்ஷத்திரியருக்குரிய எல்லாக் கலைகளிலும் நல்ல தேர்ச்சி பெற்றி ருந்தான். அத்துடன் வேதங்களில் நல்ல ஞானமும் உண்டு. பரதனின் வைராக்கியம் மிகவும் உன்னதமானது. சாம்ராஜ் யத்தையே உதறித் தள்ளினுன். பரதனைப்போல் ஸ்ரீராமன் பால்பக்தி கொண்ட ஒரு சகோதரனை வரலாற்றிலேயே காண முடியாது.

வஸிஷ்டர் பரதனைப்பார்த்து, "குழந்தாய்! இன்று உன் தந்தையின் கட்டளைப்படி இராஜ்யாபிஷேகம் செய்து கொள்வாயாக" என்று கூறினார். அதற்கு பரதன் சொன்னான். "தவசிரேஷ்டரே! நாட்டை வைத்துக் கொண்டு நான் என்ன செய்யமுடியும்? நான் ஒரு மகாபாவி. நாட்டை ஆட்சி செய்யத் தகுதி பெற்றவன் அல்ல நான். எனக்காக என் அண்ணனும் அண்ணி ஜானகியும் சொல்ல முடியாத துயரங்களுக்கு ஆளாகியுள்ளனர். இதன் காரணமாக என் இதயம் மிகுந்த புண்பட்டிருக்கிறது. இராமனே இந்த நாட்டின் மன்னனும் நம் தலைவனுமாவான். நாம் எல்லோரும் உண்மையில் அவனது சேவகர்களே. எனவே நாளை காலையில் நாம் எல்லோரும் ராமனை அழைத்துவர உடனே புறப்படுவோம். ராமன் எப்படி மரவுரி தரித்துக் காடு சென்றானோ அப்படியே நானும் அதே கோலத்துடன் செல்லவேண்டும். நானும் கனி கிழங்குகளையே உண்பேன். அண்ணனைப் போலவே தரையில் படுத்துத் தூங்குவேன் ராமன் இங்கே திரும்பும்வரை நானும் அவனுடனேயே காட்டில் தங்குவேன். சுவாமி! இதனைச் செய்து முடிக்க என்னை ஆசீர்வதியுங்கள்."

இத்தகைய உள்ளம் உருகும் மொழிகளைக் கூறினான் பரதன்! தன் அண்ணனிடம் அவன் கொண்டிருந்த பக்திக்கும் அன்பிற்கும் ஈடு இணையேயில்லை. பரதனது மாண்பு மிகுந்த எடுத்துக்காட்டு மக்களுக்கு ஒரு சிறந்த பாடமாக இருக்க வேண்டும். சிறந்த அறநூல்களின்படி வாழ்ந்தான் பரதன். அதனால்தான் இன்னும் பரதன் நமது இதயங்களில் நிலை பெற்றுள்ளான்.

பிறகு பரதன் குகனின் துணைகொண்டு கங்கையைக் கடந்து பரத்வாஜ மகரிஷியின் ஆசிரமம் சென்று அவரை அடி பணிந்து வணங்கினான். ரிஷி பரதனுடன் சென்றிருந்த அயோத்தி மக்கள் யாவருக்கும் உணவு அளித்து உபசரித்தார். மகரிஷியிடம் விடைபெற்றுக் கொண்டு மறுநாள் இராமன் இருக்கும் சித்திரகூடமலைக்குச் சென்றான்.

சித்திரகூடத்தை நெருங்கியதும் ஸ்ரீராமனுடைய காலடிகள் தரையில் பதிந்திருப்பதை பரதன் கண்டான். அவை

களின் மீது விழுந்து பணிந்து வணங்கி அம்மண்ணை எடுத்து தன் தலைமீது அணிந்து கொண்டான். உடனே தான் வந்த இரதத்தை விட்டுகீழே இறங்கி கால்நடையாகவே சித்திர கூடம் நோக்கி நடந்தான்.

வெகுதூரத்தில் பரதன் வருவதைக் கண்ட இலக்ஷ்மணன் தன்மனதில் இவ்வாறு எண்ணலானான். "இந்த பரதன் ஒரு பெரும் படையுடன் அல்லவா வருகிறான். தான் அடைந்துள்ள நாட்டை எங்கே மறுபடியும் இராமன் வந்து கேட்டுவிடுவானோ அவனைபோரில் வென்று ராஜ்யத்தை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும் என்றுதான் வருகிறான்" எனக்கருதி தன்எண்ணத்தை அண்ணனிடம் சொல்லி போருக்கு ஆயத்தமாகும்படி வேண்டினான். ஸ்ரீராமன் கூறியதாவது, "இலஷ்மணா! பரதன் என்னுடைய மிகச்சிறந்த பக்தன். அவனை நான் மிகவும் நேசிக்கிறேன். நமக்கு எதிராக ஒருவித கெட்ட எண்ணமும் கொள்ள மாட்டான். அவன் மிகுந்த மரியாதையும் நல்ல பண்பாடும் உள்ளவன். பரதனைப்போல குணநலங்கள் கொண்ட ஒரு மனிதனை இவ்வுலகம் இனிஉண்டாக்கவே முடியாது. எனவே உன்மனதிலுள்ள இத்தகைய கெட்ட எண்ணத்தை முற்றிலும் விட்டுவிடு."

இராமன் வசிக்கும் குடிசையை பரதன் தூரத்திலிருந்தே கண்டனன். சீதைக்கும், இராமனுக்கும் சொந்தமான ஒவ்வொரு பொருளைக் கண்டதும் அதற்கு தலைகுனிந்து வணக்கம் செலுத்தினான். பரதனைக் கண்டதும் இராமன் மிகவும் மகிழ்ந்தான். அவனைத் தழுவிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் உகுத்தான்.

மறுநாள் காலையில் பரதன் ஸ்ரீராமனிடம் கூறலானான், "என் அன்புக்கும் மரியாதைக்கும் உரிய அண்ணா! தாங்கள் கட்டாயம் வந்து அயோத்தியின் சிம்மாஸனத்தில் அமரவேண்டும். நமது பரம்பரை ராஜ்ஜியத்தைக் காப்பாற்றுங்கள். தாங்கள் எங்களுக்குத் தந்தை போன்றவர். எங்களுக்கு அருள் புரியுங்கள். என் தாயாரின் தீமையை மனதிற் கொள்ளாதீர்கள்" இவ்வாறு கூறியபடி பரதன் ஸ்ரீராமபிரானின் பாதங்களில் விழுந்து வணங்கினான்.

ஸ்ரீராமன் பரதனை எழுப்பி கூறினர். ''பரதா! நீ சொல்வது சரியே. ஆனால் என் தந்தையின் கட்டளைக்கு நான் கீழ்ப்படிய வேண்டாமா? எவனொருவன் தன் தகப்பனாரின் கட்டளையை மீறித் தன் இஷ்டப்படி நடக்கிறானோ அவன் உயிரோடு வாழ்ந் தும் இறந்தவனே ஆகிறான். மரணத்திற்குபின் அவன் நரகத் தை அடைகிறான். எனவே நீயே நாட்டை ஆட்சி செய்து காக்க வேண்டும். நான் தண்டகவனம் என்ற நாட்டைக் காப்பாற்றப் போகிறேன். மகான்களுக்கு அசத்தியம் நரகத் தை விட மிகவும் பயங்கரமானது. நான் கைகேயிக்கு என் தந்தை கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டும். எப்படி நான் உண்மைக்குப் புறம்பாக நடப்பேன்?''

பரதன், '' அண்ணா! நானும் வனத்தில் மரவுரி ஜடாமுடி தரித்து வசிக்கிறேன். தாங்கள் 14 ஆண்டுகள் அயோத்தியை ஆட்சி செய்யுங்கள்'' என்று வேண்டினான்.

ஸ்ரீராமபிரான்:- '' தந்தை நாட்டை உனக்கும் காட்டை எனக்கும் தந்துள்ளார். அதற்கு மாறாக நான் நடந்து கொண் டால், உண்மை நெறியிலிருந்து தவறியவன் ஆவேன் '' என்றார்.

'' அண்ணா! நானும் உங்களுடன் வனத்தில் வாழ்ந்து இலக்ஷ்மணனைப் போல தங்களுக்குச் சேவை புரிகிறேன். இல்லாவிடில் உணவு உட்கொள்ளாமலே இவ்வுடலை தியாகம் செய்து விடுவேன்'' என்றான் பரதன்.

பிறகு பரதன் ஸ்ரீராமபிரானை பலமுறை வலம் வந்து ராமனின் பாதுகைகளை பெற்றுக் கொண்டு மிகவும் பக்தி மரியாதையுடன் சொன்னான். '' ராமா! பதினன்கு ஆண்டுகள் கழிந்த மறுதினமே தாங்கள் இங்கு வரவில்லையானால் நான் தீக்குளித்து உயிர்துறப்பேன்.''

அதற்கு ராமன், '' அப்படியே ஆகட்டும் எனது அன்பான பரதா!'' என்றனன்.

பிறகு பரதன் தன் சகோதரன் தாயமார், வசிஷ்ட முனிவர் மந்திரிகளுடன் அவ்விடம் விட்டு புறப்படலானான். அப்பொழுது

கைகேயி கண்ணீர் மல்க ஸ்ரீராமனிடம் சொன்னாள். "ராம! தவறான நம்பிக்கைக்கு உட்பட்டு உனக்குஇராஜ்யம் இல்லாத படி செய்து விட்டேன். எனது இந்த பாபச்செயலுக்காக என்னை நீ மன்னிக்கும்படி வேண்டுகிறேன். நான் ஒரு மகாபாவி. நல்லவர்கள் எப்போதும் மன்னிக்கும் தன்மையுள்ளவர்கள். என்னைக் காப்பாற்று. உன்னை வணங்குகிறேன்; உன்னையே சரணமடைந்தேன். நீ திருமாலின் அவதாரமல்லவா?"

இராமன் கூறலானான், "என்னால் தூண்டப்பட்ட சரஸ்வதி தேவியே உன் வாக்கில் வந்து தேவர்களின் நன்மையைக்கருதி அவ்வாறு பேசச்செய்தாள். இதில் உனது குற்றம் ஒன்றுமில்லை என்பால் நீ கொண்ட பக்தியே உன் கர்ம பந்தத்திலிருந்து விடுவித்து பேரானந்த நிலையை அளிக்கும்."

ஸ்ரீராம பிரானையே மனதில் சிந்தித்த வண்ணமாக பரதன் பரிவாரங்களுடன் அயோத்தி மாநகரை அடைந்தான். மந்திரி களை அழைத்து அவர்களுக்கு அரிய போதனைகளைக் கூறினான். நாட்டின் பல இலாகாக்களை பிரித்துக் கொடுத்தான். அந்தணர் கள் எல்லோரையும் வரச்செய்து அவர்களைத் தங்களுடைய கடமைகளை வழுவாது செய்யும்படி வேண்டிக் கொண்டு அவர் களை தக்க மரியாதையுடன் அனுப்பிவைத்தான். எல்லா மக்க ளுக்கும் ஆறுதல் கூறி அவர்களை அரச சிம்மாசனத்திடம் விச்வாசமுடன் நடந்து கொள்ளுமாறு சொன்னான். தன்தாய் மார்களை கவனிக்கும் பணியை சத்ருக்னனிடம் ஒப்புவித்தான்.

ஒரு நன்னாளில் ஸ்ரீ ராம பாதுகைகளை சிம்மாசனத்தில் ஏற்றி அவைகளுக்கு பாதுகாபட்டாபிஷேகம் செய்வித்தான். இவ்விழா மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

அதன் பிறகு தனது குருவசிஷ்டரிடம் சென்று தான் தவ வாழ்க்கை மேற்கொள்ள அனுமதி தருமாறு வேண்டினான். அனுமதி பெற்ற பரதன் தனது ராஜீய உடைகள் அணி கலன்கள் எல்லாவற்றையும் துறந்து மரவுரி ஜடாமுடி அணிந்து நந்திக் கிராமம் என்ற ஊருக்குச் சென்றான். அங்கே ஒரு குடிசையை அமைத்துக் கொண்டு ஒரு துறவியைப் போல வாழலானான். புல்லால் நெய்த படுக்கையில் தரையில் படுத்து உறங்கினான். கனி கிழங்குகளையே உணவாக உண்டான்.

இவ்வாறு தவ வாழ்க்கையை மேற்கொண்டான். தினந்தோறும் ஸ்ரீராம பாதுகைகளுக்குப் பூஜை செய்த பிறகே தன் தினசரி அலுவல்களை மேற்கொள்வான். இவ்வாறு ராஜ பிரதிநிதியாகவே நாட்டை ஆண்டு வரலானான்.

பரதன் இவ்வுலகிய இன்பங்கள் யாவற்றையும் துறந்தான். அயோத்தி ஆட்சியை தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட ஒரு புனித அறக்கட்டளை என்றே கருதினான். அறநெறி பிறழாமலும், நீதி வழுவாமலும் அயோத்தியை ஆண்டு வந்தான். ஸ்ரீராமன் எப்பொழுது வருவான் என்று நாட்களை எண்ணிக் கொண்டே ஆட்சி புரிந்தான். ஓர் உண்மையான முனிவரைப் போல ஸ்ரீராமனிடமே தன் மனதை வைத்திருந்தான் பரதன்.

மிகச்சிறந்த முறையில் பரதன் அயோத்தியை ஆண்டான். மக்களிடையே அமைதியும் ஆனந்தமும் குடி கொண்டிருந்தது. மக்களின் நலமே நோக்கமாகக் கொண்டான். பிரஜைகள் பரதனிடம் மிகுந்த மரியாதை கொண்டு வாழ்ந்தனர்.

பரதன் சதாகாலமும் ராம நாமத்தையே உச்சரித்தான். ஸ்ரீராமன் பரதனையே எப்போதும் தன் மனக்கண் கொண்டிருந்தான். பரதன் தான் வேறு ஒரு ராமனாகவே தோன்றினான். மானசீகக் காட்சியிலேயே ராமனுக்குச்சேவை செய்தான் பரதன்.

பதினான்கு ஆண்டுகளும் கழிந்தன. ஸ்ரீராமன் அயோத்திக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். 14 வது ஆண்டு முடிவதற்கு முதல் நாள் பரதன் தான் தீ புகுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து முடித்திருந்தான். மறுநாள் சூரியன் மறைவதற்குள் ராமன் அயோத்தி வரவில்லை என்றால் தான் தீயில் விழுவதாக உறுதியுடன் இருந்தான் பரதன். ஸ்ரீராமன் இதை நன்கு அறிவார். எனவே தன் வருகையை முன் கூட்டித் தெரிவிக்க ஹநுமானை அனுப்பினார்.

இச்செய்தி பரதனுக்குப் புத்துயிர் அளித்தது. பாதுகைகள் இரண்டையும் தலைமீது சுமந்து கொண்டுராமனை எதிர்கொண்டு அழைக்கச் சென்றான். பரதனுடன் சத்ருக்னனும் உடன் சென்றான். வசிஷ்டர், ஹநுமான் சுமந்திரர் மேலும் பல மந்திரிகளும் பிரயுக்களும் பரதனுடன் சென்றனர்.

சிறப்பான முறையில் பரதனும் ஸ்ரீராமனும் சந்தித்தனர். ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு அன்பு மேலிட்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர். அதன் பின்பு ஒரு நன்னாளில் ஸ்ரீராம பிரான் அரியணையேறி சீரும் சிறப்பும் புகழும் ஓங்க அயோத்திமா நகரை ஆண்டார். அரசர் என்ற நிலையில் அவருக்கு அவரே இணை; வேறு எவரும் கிடையாது.

## பரதனுடைய வில்வித்தையின் திறமை

இராம ராவண யுத்தம் நடந்து கொண்டிருக்கும் போது, ராவணனின் மகன் இந்திரஜித்து ஏவிய கணையால் பலமாகத் தாக்கப்பட்டு நினைவு இழந்து கிடந்தான் இலக்ஷ்மணன். அது கண்டு ஸ்ரீராமபிரான் மிகவும் வருந்தினார். விபீஷணன் ஸ்ரீராமனைத் தேற்றிக் கூறினான், "சுவாமி! இலக்ஷ்மணன் மயங்கிக் கிடக்கிறார். மந்திர மலையிலுள்ள மிருத சஞ்ஜீவினி என்ற மூலிகையைக் கொண்டுவந்து முகரச் செய்தால் இலக்ஷ்மணன் உயிர் மீண்டும் பெற்று எழுந்து விடுவார். வேறு வழி இல்லை அந்த மூலிகை பொழுது விடிவதற்கு முன்பு வந்து சேர வேண்டும்" என்றான். உடனே ஹனுமார் அதைப் கொண்டு வர புறப்பட்டார். மந்தர மலை இலங்கையிலிருந்து ஆயிரக்கணக்கான மைல் தொலைவில் உள்ளது.

ஸ்ரீராமபிரானின் ஆசியைப் பெற்றுக் கொண்டு ஹனுமான் நொடிப்பொழுதில் மந்தர மலையை அடைந்தார். அங்கே மூலிகையைத் தேடிப்பார்த்தார். கண்டுபிடிக்க முடியவில்லை. எனவே அந்தமலையை அடியோடு பெயர்த்துத் தூக்கிக்கொண்டு இலங்கையை நோக்கி திரும்பினார். ஹநுமான் மலையோடு ஆகாயத்தில் வருவதை பரதன் பார்த்தான். அப்போது அதி காலைநேரம். பரதன் ஸ்ரீராமனது பாதுகைகளுக்கு பூஜைசெய்து கொண்டிருந்தான். பரதன் தனக்குள் நினைத்தான், "யாரோ ஒரு அரக்கன மலையைப்பிடுங்கிக் கொண்டு தென்திசை நோக்கி போகிறான். ஒரு வேளை என அண்ணன் ஸ்ரீராமனுக்கு ஆபத்து ஏற்படலாம்" என்றவாறு ஒரு பாணத்தை ஹநுமான் மீது ஏவினான். ஹநுமான் 'ராம, ராம' எனகத்திக் கொண்டு பூமி யில் விழுந்தார். பரதன் வியப்பும் பரபரப்பும் கொண்டு பக்கத் தில் சென்று பார்த்தான். ஹநுமான் தரையில் மயங்கிக்

கிடந்தார். மிகவும் வருந்திய பரதன் சொன்னான், "எந்த ஒரு விதி என்னையும் ராமனையும் பிரித்ததோ அதே விதி தான் இந்த உபகாரியை என் மூலம் வீழ்த்தியுள்ளது. ராமன் மீது நான் கொண்டுள்ள பக்தி உண்மையானால் இந்த வானரவீரன் உயிர் பெற்று எழட்டும்" என்று ஹநுமாரின் முகத்தில் தண்ணீரைத் தெளித்தான் பரதன். அக்கணமே 'ராம ராம' என்று சொல்லிக் கொண்டு ஹநுமான் எழுந்து நின்றார்.

ஹநுமான் சொன்னார், "பரத! ஸ்ரீராமனுக்கு நீர் பெரும் தீங்கை இழைத்து விட்டீர். இலக்ஷ்மணன் இறக்கும் தறுவாயில் உள்ளார். நான் அவரை உயிர்ப்பிக்க இந்த மிருத சஞ்ஜீவினி மூலிகையை எடுத்துச் செல்கிறேன். நான் உம்மால் இங்கே தாமதித்தால் அவருடைய உயிர் பிரிந்து இருக்கும்." பரதன் ஹநுமாரை மார்புடன் தழுவிக் கொண்டு, கண்களில் நீர் பெருக கூறினான், "சகோதரனே! என்னை மன்னிப்பாயாக. நான் யாரோ ஒரு அரக்கன் தான் பெரிய மலையுடன் என் இராமனுக்கு தீங்கு செய்யச் செல்கிறான் என்று தவறாக எண்ணிவிட்டேன். அதற்காக நீர் வருந்தாதீர் ஒரு நொடியில் உம்மை இலங்கைக்கு இதோ அனுப்பிவிடுகிறேன்."

இவ்வாறு கூறியவண்ணம் பரதன் மற்றொரு அம்பை மலையின் மீது ஏவினான். அது ஹநுமானையும் மலையையும் சேர்த்து ஆகாய மார்க்கமாகச் சென்று குறிப்பிட்ட நேரத்திற்கு முன்னமேயே இலங்கையில் ஸ்ரீராமனின் முன்பு கொண்டு நிறுத்தி விட்டது. ஹநுமான் மிகுந்த ஆச்சரியத்துடன் பரதனின் திறமையை அங்கே எல்லோரிடமும் எடுத்துக் கூறினார். ஸ்ரீராமனும் மற்ற வானரவீரர்களும் அதுகேட்டு வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டனர்.

## பரதனின் பக்தியும் தியாகமும்.

இவ்வுலகிய இலாபமோ, இன்ப நுகர்ச்சியோ, பிரம்மா விஷ்ணு, மஹேச்வரன் இவர்களுடைய பதவியின் மீது ஏற்படும் ஆசையோ பரதனை ராமன்மீது அவன் கொண்டிருந்த தூய பக்தியிலிருந்து ஒரு சிறிதும் விலக்கவில்லை. பரதனுக்கு ஸ்ரீராமனே வழிகாட்டி, தெய்வம், வாழ்க்கை, வாழ்க்கையின் முடிவு எல்லாமாகும். அவன் எப்பொழுதும் ஸ்ரீராமனின்

கட்டளைகளை மகிழ்ச்சியுடன் நிறைவேற்றுவதையே தன் இலட்சியமாகக் கொண்டிருந்தான். எந்த ஒரு சூழ்நிலையிலும் ராமனுக்கு எதிராக நடந்து கொண்டது கிடையாது. தன் அண்ணன் இராமனுக்குக் கீழ்ப்படிதல் ஒன்றே பரதனின் வாழ்க்கைக்குறி. பரதன் தன் சகோதரர்களிடம் கொண்டிருந்த அன்புக்கும் மரியாதைக்கும் இவ்வுலகில் வேறு ஈடுஇணை கிடையாது. உலக வரலாற்றில் பரதனைப்போல் வேறுஒரு பரதனை எங்குமே காண முடியாது. பரதன் ராமன் பால் கொண்டுள்ள அன்பையும் பக்தியையும் ஸ்ரீராமனாலேயே விளக்கிக் கூறமுடியாது.

தியாக மனப்பான்மை பரதனிடம் பிறவியிலேயே குடிகொண்டிருந்தது. அரசியல் இன்பத்தையோ அரசாளும் உரிமையையோ அவன் முற்றிலும் விரும்பவில்லை. வனவாசம் போயிருந்த அண்ணனுக்கே அவற்றை விட்டுவிட்டான். தான் ஒரு துறவியின் வாழ்வையே மேற்கொண்டான். எவருமே அப்படி செய்யவியலாது.

பரதன் தன்னலமின்மையையும், பொறுமையையும் கடைப்பிடித்து வந்தான். அரசியல் ஆடம்பரங்களை அறவே ஒழித்தான். மிக மிக எளிய வாழ்வை நடத்தினான். அவன் ஒரு மாபெரும் தியாகி. தெய்வீக குணங்களைத் தன்பால் வளர்த்தான். ஏனைய இன்பங்கள் யாவும் அவனுக்குத் துரும்பாகப்பட்டது. ஸ்ரீராமபிரான் ஒருவனே அவனுக்கு ஆனந்தம்.

பரதன் வாழ்க்கை எல்லோருக்கும் ஒரு மாதிரிப்பாடமாகும். அதிலிருந்து நாம் சகோதர அன்பு, தியாகம், தவம், கடமை மனஉறுதி இவற்றை வளர்க்கத் தெரிந்து கொள்ளவேண்டும். பரதன் ஸ்ரீராமனின் கையிலுள்ள ஒரு கருவியே என்று நடந்து கொண்டது போல நாம்எல்லோரும் இறைவனின்கருவியேஎன்று செயல்பட வேண்டும். அளவற்ற செல்வம் கொண்டிருந்தாலும் அது இறைவனுடையதே நம்முடையதல்ல என்ற மனப்பாங்கில் வாழவேண்டும். இவ்வுலகில் வாழ்ந்து கொண்டு இருக்கும் போதே நாம் தெய்வீக உணர்வைப் பெற முடியும் என்பதை பரதன் வாழ்க்கையால் நாம் அறிகிறோம். எவ்வளவோ ராஜ போகங்களின் சோதனைகளுக்கிடையே வாழ்ந்த போதிலும் பரதன் அவற்றால் சிறிதும் பாதிக்கப்படவில்லை. ராம நாமத்தை

உச்சரித்துக் கொண்டே பரதன் மிகத் திறமையோடு ஆட்சியை நடத்தினன்.

உதாரண குணம் கொண்ட பரத! இக்ஷ்வாகு குலத்தின் வீரதிலகமே! சூரிய வம்சத்துப் பேரொளியே! ஸ்ரீராமபிரானுக்குப்பெருமைதரும் சோதரனே! எங்களுக்கு அறவாழ்வை நடத்த மன ஆற்றல் தருவாய். ஸ்ரீராமபிரானிடம் உண்மையான கபடமற்ற பக்தியை கைக்கொள்ள அருள் செய்குவாய்.

## 5. சத்ருக்னன்

தசரதரின் மகனுன சத்ருக்னன் சுமித்திரையிடம் இலக்ஷ்மணனுடன் பிறந்தான். அவன் பரதனுடன் இணைபிரியாமல் வாழ்ந்தான். இலக்ஷ்மணன் எப்படி ஸ்ரீராமனுக்கு சேவை செய்தானே அதேபோல சத்ருக்னன் பரதனுக்குப் பணி புரிந்தான். அவனும் வேத நூல்களில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தான்; வில் வித்தையும் நன்கு அறிவான்.

ஜனகரின் சகோதரரான குசத்வஜரின் மகளான சுருத கீர்த்தியை சத்துருக்னன் மணம் புரிந்தான். பரதனுக்கும் சத்துருக்னனுக்கும் இடையேயுள்ள நட்பும் அன்பும் மிகவும் நெருக்கமானது. இருவரும் சேர்ந்தே உண்பார்கள், உறங்குவார்கள்; ஒரே மாதிரி ஆடை அணிந்து கொள்வார்கள். சத்துருக்னன் பரதனை நிழல் போலப்பின் தொடர்வான். பரதன் இடும் கட்டளைகளை மனமுவந்து நிறைவேற்றுவான்.

மந்தரைதான் கைகேயியைத் தூண்டி இந்த சதியைச் செய்வித்தாள் என்பதனுல் அவளை கட்டி இழுத்து கீழே தள்ளி நன்ருகப் புடைத்தான். தயாளுவான பரதன் அவன் செயலை கண்டித்து மந்தரையை விடுவித்தான்.

பரதன் நந்திக் கிராமத்தில் தவ வாழ்க்கை மேற்கொண்டு இருந்த பொழுது சத்ருக்னனை தனது தாய்மார்கள் மூவருக்கும் சேவை புரியும் படிக்கு கட்டளையிட்டான். சத்ருக்னன் பணிவுடன் அதனை நன்ருக நிறை வேற்றினன்.

உதார குணம், அறநெறி, வழுவாமை, நன்றியுணர்வு ஆகிய குணநலன்களுடன் பரதனுக்குத்தன் வாழ்நாள் முழுவதும் சத்ருக்னன் சேவை செய்தான்.

## 6 தசரதன்.

சுவாயம்புவமநு தசரதராகவும், சதரூபை கௌசல்யையாகவும் இவ்வுலகில் அவதரித்தனர். திருமாலைத் தங்களுக்குப் பிள்ளையாகப் பெறவேண்டும் என்று அவ்விருவரும் கடுந்தவம் செய்தனர். திருமாலும் அவர்களின் வேண்டுகோளின்படி நடக்கலானார். எனவே தசரதருக்கும் கௌசல்யைக்கும் திருக்குமாரனாக அவதரித்தார்.

தசரதர் சூரிய வம்சத்தைச் சேர்ந்தவர். இக்ஷ்வாகு மன்னனின் இரத்தம் அவருடைய உடலில் ஓடியது. அவர் வேத சாஸ்திரங்களில் மிகுந்த தேர்ச்சி பெற்றவர் அவர் நுண்ணறிவு, சத்தியம், அன்பு, எளிமை, தைரியம், வீரம் ஆகிய குண நலன்களைப் பெற்றிருந்தார். அவர் ஒரு ஆற்றல் மிகுந்த சக்கரவர்த்தி. அக்காலத்திய மன்னர்களில் தலைசிறந்து விளங்கினார் தசரதர். அரக்கருடன் போரிட நேர்ந்த சமயம் தேவர்கள் கூட தசரதரின் உதவியை நாடினார்கள்.

அவரது சபையில் நீதியும், அறிவும் மிகுந்த எட்டு சிறந்த அமைச்சர்கள் இருந்தனர். அவர்களாவன:- திருஷ்டி, யயந்தா, விஜய, சுரேஷ்ட்ர, வர்த்தன, அகோப, தர்மபால, சுமந்தர என்பவராவார்கள். மேலும் வலிமை மிகுந்த துறவிகளும் இருந்தனர் அவர்களாவன:- வசிஷ்டர், வாமதேவர், சுயக்ஞர், ஜாபாலி, காச்யபர், கௌதமர், மார்க்கண்டேயர், காத்யாயனர்- என்பவராவார்கள். முனிவர்களும் மந்திரிகளும் மன்னனுக்கு நாட்டைஆள்வதில் பெருந்துணையாக இருந்தனர்.

தசரதர் அயோத்தி நாட்டை நீதிவழுவாமல் ஆட்சி புரிந்தார். சாது ஜனங்களுக்கு நல்ல பாதுகாப்பு கொடுக்கப்பட்டது. தீயவர்களும், சமூக துரோகிகளும் நாட்டிலிருந்து வெளியேற்றப் பட்டனர். தசரதரின் ஆட்சி காலத்தில் திருடர்களோ, கொள்ளைக்கூட்டத்தினரோ நாட்டில் கிடையாது. மக்களின் வாழ்வும், உடைமைகளும் நன்றாகப் பாதுகாக்கப்பட்டன.

அவருக்கு கௌசல்யை, சுமித்திரை, கைகேயி என மூன்று மனைவிகள் இருந்தனர்.

ஒருசமயம் தசரதர் காட்டிற்கு வேட்டையாடச் சென்றார். அப்போது வெகுதொலைவில் ஒரு யானை நீர் அருந்துவது போன்ற ஓசையொன்று கேட்டது. உடனே சப்தம் வந்ததிக்கை நோக்கி ஒரு கூர்மையான அம்பை தசரதர் எய்தார். அவ்வம்பு அங்கே குடத்தில் தண்ணீரை நிரப்பிக் கொண்டிருக்கும் ஒரு வாலிபனின் மீது பட்டது. அவன் பெரும் கூச்சலுடன் மயங்கியபடி தரையில் சாய்ந்தான். இந்த ஒலியைக் கேட்ட தசரதர் விரைந்து அவ்விடத்தை அடைந்தார். அங்கு ஒரு அந்தணச் சிறுவன் தன் அம்பால் தாக்குண்டு கிடப்பதைக் கண்டார்.

அவ்வாலிபன் அரசனிடம் சொன்னான்:– "ஐயா இருகண்களும் தெரியாத வயோதிகப் பெற்றோருக்கு நான் ஒரே ஒரு மகன். தாகத்தோடு இருக்கும் என் பெற்றோருக்கு இந்தத் தண்ணீரைக் கொடுத்து உதவுங்கள்" இவ்வாறு கூறியபடி அவ்வாலிபன் உயிரை இழந்தான். தசரதர் அம்முதியோரிடம் தன்னை இன்னாரென்று காட்டிக்கொள்ளாமல் தண்ணீரை அவர்கள் குடிக்கும்படிச் செய்து பிறகு நிகழ்ந்தவற்றைக் கூறினார். தான் ஆராயாது செய்த தவற்றை மன்னிக்கும்படி மிகவும் மன்றாடினார்.

அந்த வாலிபனின் தாயும் தந்தையும் தாங்க முடியாத துயரடைந்தனர். மன்னரைக் கீழ்க்கண்டபடி சபித்தனர். "மன்னரே! நாங்கள் எப்படி எங்கள் புதல்வனை இழந்து உயிர் துறக்கிறோமோ அப்படியே நீரும் உமது மிகுந்த பிரியமுள்ள பிள்ளையின் பிரிவால் வருந்தி உயிர் துறப்பீராக" என்று கூறி அவ்விடத்திலேயே விழுந்து இருவரும் உயிர் நீத்தனர்.

அவர்களிட்ட சாபத்தின் விளைவே ஸ்ரீராமனும் சீதையும் இலக்ஷ்மணனும் தசரதரை விட்டு காடுசெல்ல நேர்ந்தது. தசரதர் 'ராமா' 'ராமா' என்றவண்ணம் இவ்வுலக வாழ்வை விட்டு நீங்கினார்.

## 7. ஹநுமான்

ஹநுமான் அஞ்சனாதேவிக்கும் வாயு பகவானுக்கும் பிறந்தவர். இவருக்கு ஹநுமான் என்ற பெயர் இவரது தாய்மாமனான பரிதிசூரியர் என்பவர் ஆண்டு வந்த ஹநுமபுரிஎன்ற நகரத்தின்

பெயரால் அமைந்தது. ஹநுமானின் உடல் கற்சிலை போன்ற வலிமை கொண்டது. எனவே இவரது தாய் இவரை 'வஜ்ராங்கன்' என்று அழைத்தாள். மஹாவீர, பலபீம, மாருதி என்றும் இவருக்கு வேறுபெயர்களும் உண்டு.

ஹநுமானைப் போன்ற வலிமைமிக்க ஒருவீரனை இவருக்கு முன்பு கண்டதும் இல்லை. இனிகாணவும் முடியாது. இவர்தம் வாழ்க்கையில் வியப்பிற்குரிய செயல்களைச் செய்துள்ளார். அபரிமிதமான, அசகாயச் செயல்களை ஆற்றியுள்ளார். உலகம் உள்ளவரை இவரது புகழ் ஓங்கி நிற்கும்.

ஏழு சிரஞ்ஜீவிகளில் ஹநுமானும் ஒருவர். ஒன்பது இலக்கண நூல்களையும் அறிந்த புலமை மிக்கவர் இவர் ஒருவரே. எனவே இவரை 'நவவியாகரண பண்டிதர்' என்கிருர்கள். சூரியனிடமிருந்து இவர் இவற்றைக் கற்றுத்தேர்ந்தார். இவர் பிரமசரியத்தின் உருவகமேயாவார். அறிவாளிகளில் சிறந்தவராகவும், வீரர்களில் ஆற்றல் மிகுந்தவராகவும், மதிநுட்பத்தில் இணையற்றவராகவும் மாருதி விளங்குகிருர். இவர் உருத்திரரின் சக்தியை உடையவர். இவரை தியானம் செய்து இவரது பெயரை ஜெபிப்பவர்களுக்கு உடல் வலிமை, ஆன்மீக ஆற்றல், புகழ், பேச்சுத்திறமை, வெற்றிஆகிய இவை உண்டாகும். பாரத நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் ஹநுமானை வழிபடுகிருர்கள். சிறப்பாக மஹாராஷ்டிரப் பகுதியில் இவர் வணங்கப்படுகிருர்.

ஹநுமானுக்கு எந்த உருவமும் எடுத்துக் கொள்ளும் திறமையுண்டு. மலையளவு உடலைப் பெருக்கச் செய்யவும், கட்டைவிரல் அளவு அதைச் சுருக்கவும் இவரால் இயலும். அரக்கருக்கு இவரைக் கண்டால் குலைநடுக்கம். இவர் நான்கு வேதங்களிலும் ஆன்மீக நூல்களிலும் நல்லதேர்ச்சி பெற்றவர். அதோடு போர் புரிவதிலும் அதிகத் திறமையுள்ளவர்.

ஹனுமான் இராமபிரானின் ஆய்ந்தெடுத்ததூதராயும், போர் வீரராயும், தாசராயும் விளங்கினுர். அதனுலே 'இராமதாஸர்' என்ற பெயரை அடைந்தார். இவருக்கு எல்லாம் ஸ்ரீராமனே யாகும். ராமனுக்குச் சேவை செய்யவே இவர் தோன்றினுர். சுக்ரீவனுக்கு ஹநுமார் நண்பரும் மந்திரியுமாவார்.

ஹநுமார் ஸ்ரீராமனை பம்பா நதிக்கரையில் முதல் தடவையாகக் காண்கிறார். சீதையைத் தேடிக்கொண்டு ராமனும் லக்ஷ்மணனும் அங்கு வந்தார்கள். அனுமான் பாலகனாய் இருக்கும்போது பல முனிவர்களின் குடிசைகளுக்குச் சென்று அவர்கள் யக்ஞங்களுக்காக சேமித்து வைத்திருந்த பொருள்களை விளையாட்டாகப் பாழ்படுத்தினார். இந்த குறும்புத்தனத்தைக் கண்ட ரிஷிகள் சாபமிட்டனர். அதன் விளைவாக ஹநுமானுக்குத் தன் பலம் தனக்குத் தெரியாமல் போயிற்று. ஆனால் யார் அவரை ராமநாமத்தோடு புகழ்கிறார்களோ அப்போது அவர் தன் ஆற்றலை உணர்வார் என்பதாக அந்த சாபத்திற்கு விலக்கும் தந்தனர் அம்முனிவர்கள். இலங்கையில் இவர் தன் முழு வலிமையையும் சூரத்தனத்தையும் காட்டினார். அழகிய அசோக வனம் பூராவையும் நாசப்படுத்தினார். பலமரங்களை வேரோடு பிடுங்கி தன்னை எதிர்க்க வந்த அரக்கர்களை அவற்றால் அடித்துக்கொன்றார். இதுகண்ட இராவணன் மிகவும் கோபமடைந்தான். ஜம்புமாலி என்ற வீரனை ஒரு படையுடன் அனுமானை எதிர்க்க அனுப்பினான். ஒரு மிகப்பெரிய மரத்தைப் பிடுங்கி சுழற்றி ஜம்புமாலியின் மீது தாக்கி அவனைக் கொன்றார் வீர அனுமான். பிறகு இராவணன் அக்ஷகுமாரனை அனுப்ப அனுமார் அவனையும் மாய்த்தார் கடைசியாக இந்திரஜித் ஒரு படையுடன்வந்து எதிர்த்தான். நீண்ட போருக்குப் பின்பு அவன் ஏவிய பிரம்மாஸ்திரத்திற்குக் கட்டுண்டு இராவணனின் சபையை அடைந்தார். அரக்கர்கள் அனுமானை சபைக்குத்தூக்கிச்சென்றனர். தூக்கும்போது பஞ்சுபோல் தன்மேனியை ஆக்கிக்கொண்டு தூக்கிய பிறகு மலைபோல் கனம்அடைந்து அவ்வரக்கர்களை நசுக்கிக் கொன்றார்.

இராவணன் சொன்னான், ஏ குறும்பு செய்யும் குரங்கே! இப்பொழுது நான் உன்னைக் கொல்லப் போகிறேன். நீ எப்படி உன்னைக் காப்பாற்றிக் கொள்ளப்போகிறாய்?'' என்றான். அனுமான் சிரித்துவிட்டுச் சொன்னார். ''அடே கொடிய ராவணா! சீதையை ஸ்ரீராமனிடம் சேர்த்து மன்னிப்புக் கேட்டுக்கொள். இல்லையெனில் நீயும் இந்த இலங்கையும் நாசமடைந்துவிடும்'' இச்சொற்கள் இராவணனுடைய கோபத்தை மேலும் தூண்டின. எனவே அவன் ஹநுமானது தலையை துண்டிக்கும்படி காவலரை ஏவினான்.

அப்பொழுது விபீஷணன் அதைத்தடுத்து நிறுத்தி கூறலானான், ராவணா! இச்செயல் அறவழிக்கு மிகவும் ஆகாதது. தூதாக வந்தவனைக் கொல்லலாகாது. வேண்டுமானால் அவமானம் செய்து அனுப்பி விடுங்கள். தூதனைக் கொன்று விட்டால் இங்கு நடந்த செய்தியையும் நமது வலிமையையும் இராமனிடம் யார்போய்ச் சொல்வது.''

அது கேட்ட இராவணன் ஹநுமானின் வாலில் துணிகளைச் சுற்றி அதில் எண்ணெயைத் தோய்த்து நெருப்பிட உத்தரவிட்டான் அனுமான் அந்தத் தீயின் ஜ்வாலைகளாலேயே இலங்கை முழுவதையும் எரித்தார் இதிலிருந்து அவரது வீரதீரச் செயலை நாம் அறிகிறோம்.

பிறகு சீதையின் மீட்சிக்காக நடந்த ராமராவணப் போரில் அனுமான் எண்ணற்ற அரக்கர்களைக் கொன்று தள்ளினார்.

பட்டாபிஷேகம் முடிந்ததும், எல்லோருக்கும் ஸ்ரீராமன் பரிசுகள் வழங்கினார். அப்பொழுது சீதை ஒரு மிகச்சிறந்த முத்து மாலையை ஹநுமாரிடம் கொடுத்தாள். ஹநுமார் அந்த மாலையிலுள்ள முத்துக்களைக் கடித்து அதற்குள் எதையோ தேடினார்.

சீதாதேவி அது கண்டு வெகுண்டு, ''வீரனே! என் முத்துக்களைக் கடிக்கிறாய்? என்றனள். அதற்கு ஹநுமான், ''தேவி! உமதுகையால் கிடைத்த இந்த மாலை மிகவும் மதிப்புடையது தான் என்றாலும், அதைவிட சிறந்த மதிப்புள்ளதாக நான் கருதும் ஸ்ரீராமன் அதற்குள் இருக்கிறானா? என்றுதான் பார்க்கிறேன். இராமன் இல்லாத எந்த உயர்ந்த பொருளையும் நான் விரும்பவில்லை'' என்று விடையளித்தார்.

அதற்கு சீதை ''அப்படியானால் உனக்குள் ஸ்ரீராமன் இருக்கிறானா?'' என்றுகேட்க, உடனே ஹநுமான் தன் கூரிய நகங்களால் இதயத்தை பிளந்து காட்டினார். அதில் ஸ்ரீராமனையும் சீதா தேவியையும் கூடியிருந்த எல்லோரும் கண்டு மிகவும் அதிசயித்தனர். அப்போது ராமன் ஆனந்தப் பெருக்கடைந்து அரியணைவிட்டு எழுந்து வந்து ஹநுமானை மார்புறத் தழுவிக் கொண்டார். இதிலிருந்து ஹநுமானின் ராமபக்தியின் சிறப்பு வெளிப்படுகிறது.

ஹநுமான் சிரஞ்ஜீவி. எல்லா இடங்களிலும் நிறைந்திருப்பவர். நம்பிக்கையுடன் கூடிய பார்வையுள்ளவர்களுக்கு அவர் காணப்படுவார். மேலும் அவர்களுக்கு ஆசியும் வழங்குவார். உலகிய வீரர்களில் ஹநுமான் முதன்மையானவர். ஹநுமான் உள்ள இடத்தில் ஸ்ரீராமனும் சீதையும் இருப்பார்கள். அதே போலஇராமனும் சீதையும் உள்ளஇடத்தில் ஹனுமான் இருப்பார். எங்கு இராமாயணம் நடைபெறுகிறதோ அங்கே அதைச் சொல்பவரின் முன்னால் ஹனுமான் வீற்றிருக்கிறார். எனவே துளசிதாசர் கூறுகிறார்.

''ராமலக்ஷ்மண ஜானகீ
ஜய போலோ ஹனுமான் கீ

'' சீதா ராமனும் இலக்ஷ்மணனும் ஹனுமானும் இருக்குமிடத்தில் வெற்றியுண்டாகும் என்று சொல்லுங்கள்'' என்பது இதன் பொருள்.

## ஜடாயுவும் ஸம்பாதியும்

ஜடாயுவும் ஸம்பாதியும் பறவைகளுக்கு அரசனான கருடனின் வம்சத்தில் வந்தவர்கள். ஜடாயு ஒரு கழுகு. ஸம்பாதியின் தம்பி. இருவரும் இமயமலைப்பகுதியில் பிறந்தார்கள். ஒருவரையொருவர் மிக்க அன்புடன் நேசித்தார்கள்.

ஜடாயு தசரதரின் நண்பன். ஒருசமயம் சனியுடன் தசரதர் போர் செய்த பொழுது தேருடன் அவர் பூமிக்குத்தள்ளப்பட்டார். அப்போது அவரை ஜடாயு காப்பாற்றினான்.

ஜடாயுவும் ஸம்பாதியும் அடிக்கடி ஆகாயத்தில் வேகப் பந்தயத்தில் பறப்பதுண்டு. ஒரு நாள் இருவரும் சூரியனைப் போய்ச்சேர விரும்பினார்கள். எனவே வானில் உயர உயரப் பறந்து சென்றனர் கடைசியாக சூரியனின் கிரணங்களை அவர்களால் தாங்க முடியவில்லை. ஜடாயு சூடு தாங்காமல் மயக்கமடைந்தான். ஸம்பா தன் சிறகால் தம்பியை வெயில் படாமல் தடுத்தான். ஆனால் ஸம்பாதியின் இறக்கைகள் வெப்பத்தால் எரிந்து போயின. அவன் விந்திய மலைச்சாரலில் விழுந்தான்.

சிறிதுநேரம் கழிந்ததும் மயக்கம் தெளிந்து, மெதுவாக நகர்ந்து சென்று அம்மலை அடிவாரத்திலுள்ள ஒரு முனிவரின் குகையை அடைந்தான். முனிவரிடம் சம்பாதி சொன்னான், "சுவாமி! எனது சிறகுகள் எரிந்து போயின. நான் மரணம் அடைந்து விடுவேன்." அதற்கு முனிவர், " நீ மரணம் அடையமாட்டாய். கொஞ்சகாலம் பொறுத்திரு. ஒரு சிறந்த மகாத்மாவுக்குச் சேவை செய்ய வேண்டிய வாய்ப்பு உனக்கு வரும். அதனால் நீ மறுபடியும் உனது பழைய ஆற்றலைப் பெறுவாய். " என்று கூறி தேற்றினார்.

ஸம்பாதி அதன்படி நடந்தான். ஸம்பாதியின் மகன் சுபர்வசு அவனுக்கு உணவு தேடிக்கொடுத்துக் காப்பாற்றினான். பிறகு அவர்கள் தெற்குக் கடற்கரையில் வந்து தங்கினர்.

ஒரு வானரப்பட்டாளம் ஸம்பாதியின் சமீபம் வந்தது. அவர்கள் சீதையைத் தேடுவதற்கு சுக்ரீவனால் அனுப்பப்பட்டனர். சீதையை கண்டு பிடிக்காவிட்டால் அவர்கள் சுக்ரீவனால் கொல்லப்படுவார்கள். அவ்வானர வீரர்கள் பல இடங்களிலும் தேடியும் சீதை காணவில்லை." எனவே நம்பிக்கை இழந்தநிலையில், அங்கேயே உயிரை விட்டுவிட முயன்றனர். அப்பொழுது அவ்வீரர்களின் தலைவனான அங்கதன் ஜடாயுவின் மரணத்தையும் அவன் செய்த ராமகைங்கரியத்தையும், ராமன் கையால் அவன் நற்கதி பெற்றதையும் விளக்கமாக எடுத்துக் கூறினான்.

ஸம்பாதி மெதுவாக நகர்ந்து வந்து அங்கதன் கூறியதைக் கேட்டான். தன் தம்பியின் வரலாற்றைக் கேட்டு மறுபடியும் அவன் எப்படி மரணமடைந்தான் என்ற முழு விவரத்தையும் கேட்டான். அதன் பிறகு ஸம்பாதி தனது வரலாற்றை அவர்களுக்கு விவரித்து தன்னைத் தன் தம்பிக்கு உத்தரக்கிரியை செய்ய கடற்கரைக்குத் தூக்கிச் செல்லும்படி வேண்டினார். அவர்களும் அப்படியே செய்தனர். தன் தம்பியின் ஈமக்கடன்களை ஸம்பாதி செய்து முடித்தான். மறுபடியும் வானரர்கள் ஸம்பாதியை அவனுடைய இடத்திற்குத் தூக்கி வந்தனர். பிறகு வானரர்கள் சீதையைக் கண்டு பிடிக்கும் விஷயமாகத் தனக்கு உதவும்படி வேண்டினார்கள்.

அதற்கு ஸம்பாதி கூறியதாவது, ''நான் சீதையின் இருப்பிடத்தைச் சொல்ல முடியும். என் மகன் ஒரு நாள் எனக்கு எந்த உணவும் கொண்டு வரவில்லை. அதற்கு என்ன காரணம் என்று அவனைக் கேட்டேன். அவன் சொன்னான், 'அப்பா! இன்று ஒருபிராணியும் எங்குமே கிடைக்கவில்லை. அப்பொழுது பத்துதலைகள் கொண்ட ஒரு பெரிய பயங்கரமான ஜந்து ஆகாயத்தில் வருவதைக் கண்டேன். அவன் என் பக்கத்தில் வந்தான். அவன் கைகளில் ஓர் அழகிய பெண் இருந்தாள். அவள் ராம, ராம என்று அலறினாள். நான் அவளுக்கு உதவி செய்ய முயன்றேன். ஆனால் அந்த பெரிய உருவம் என்னிடம் மரியாதையாகப் பேசித் தன்னை விட்டு விடும்படி வேண்டியது. என்னிடம் உபசாரமாகப் பேசியதால் நானும் அவனை விட்டு விட்டேன். பின்னால்தான் அந்த உருவம் இராவணன் என்று தெரிந்தது. இராவணனுக்கு பயந்துதான் எல்லாப் பிராணிகளும் ஆங்காங்கு மறைந்திருந்தன.'

ஸம்பாதி சொன்னான், '' வானர வீரர்களே! எனக்கு ஆற்றல் மிகுந்த கண்பார்வை உண்டு. நூறு யோஜனை தூரத்திற்கு அப்பாலுள்ள பொருள்களையும் நான் பார்ப்பேன். இப்பொழுது சீதை எங்கே இருக்கிறாள் என்று நான் உங்களுக்குச் சொல்கிறேன். தெற்குக் கடலில் இலங்கை என்ற ஒரு நிலப்பகுதி உள்ளது. அங்குதீவிரமாய் முயன்றுதேடுங்கள். சீதையை நிச்சயமாய் காண்பீர்கள். அப்போது ஸம்பாதிக்குப் புதிய சிறகுகள் முளைத்தன. அவனும் பறந்துசெல்ல முயன்றான். அந்த முனிவரின் சொற்கள் உண்மை ஆயின. ஸம்பாதி ராமகாரியமாகச் சேவை செய்தான். எனவே ராமனது அருளால் தான் முன்பு இழந்த சிறகுகளை மீண்டும் பெற்றான். மறுபடியும் வானில் மகிழ்வுடன் பறந்து சென்றான்.

ஜடாயுகடவுள் பால் ஈடுபட்டான். இராவணன் சீதையைத் தூக்கிச் செல்லும்போது அவளை அவனிடமிருந்து மீட்பதற்காக முழு ஆற்றல் கொண்டு இராவணனை எதிர்த்துப் போராடினான். இராவணன் ஜடாயுவின் இரண்டு இறக்கைகளையும் வெட்டி வீழ்த்தினான். அவன் குற்றுயிருடன் பூமியில் விழுந்தான். சீதையைத் தேடிக்கொண்டு ஸ்ரீ ராமனும் தம்பி இலக்ஷ்மணனும் அவ்விடம் வரும்வரை உயிருடன் இருந்தான் ஜடாயு. அந்த

உதார குணமுள்ள கழுகரசன் இராமனிடம் நடந்த யாவற்றை யும் சொல்லிவிட்டு உயிர் நீத்தான். ஜடாயுதான் இராவணன் சீதையை எடுத்துச் சென்றான் என்பதை ஸ்ரீராமனிடம் முதன் முதல் கூறியவன்.

ஸ்ரீராமன் ஜடாயுவைத் தன் மடிமீது வைத்துக் கொண்டு புண்பட்ட அவனுடைய உறுப்புகளைத் துடைக்கும் பொழுது அவன் உயிர் நீங்கியது. அந்திமக் கிரியைகளை ஸ்ரீராமனே ஜ டா யு வு க் கு ச் செய்தார். என்ன பாக்கியம் பெற்றான் ஜடாயு! ஜடாயுவைப்போல் ஸ்ரீராமன் மடியில் உயிர்விடும் பாக்கியத்தை எவருமே அடைந்ததில்லை; இனியும் அடையப் போவதில்லை. இது ஒரு அபூர்வமான அதிர்ஷ்டம்,

தன் தந்தைக்குக் காட்டும் அதேமரியாதையை ஸ்ரீராமன் ஜடாயுவுக்குக் காட்டினார். மறுமையில் தசரதர் பெற்ற அதே உயர்வை ஜடாயுவும் அடையும்படி செய்தார். மதிப்பிற்குரிய ஜடாயு ஸ்ரீராமனுக்குச் சேவை செயதே தன் உயிரைத் தியா கம் செய்தான் ஸ்ரீராமன் ஜடாயுவை தன் தந்தையின் சிறந்த நண்பனாகவும், தனது சிறியதந்தையாகவும்,சிறந்தபக்தனாகவும் கருதினார்.

பிறவாநிலையாகிய மோக்ஷத்தைப் பெற ஒருவன் பிராமண னாகத்தான் பிறக்கவேண்டும் என்பதில்லை. பறவைகளுக்கும் இறைவன் மோக்ஷம் தருகிறார். இங்கு வேண்டுவதெல்லாம் ஒரு முகப்பட்ட பக்தியும் சிரத்தையும்தான்.

## 9. வாலி

வாலி ஒரு ஆற்றல் மிகுந்த குரங்கு. அவன் இந்திரனின் அம்சமாகத் தோன்றியவன். கி ழ க் கு சமுத்திரத்திலிருந்து மேற்குசமுத்திரம் வரையும் அப்படியே தெற்கு சமுத்திரத்திலி ருந்து வடக்கு சமுத்திரம் வரையும் பிரயாணம் செய்யும் சக்தி கொண்டவன். அவன் மலைகளின் மீது ஏறி அங்குள்ள பெரிய பெரியமரங்களை வேரோடு பிடுங்கி எறிவான். மிகவும் பலசாலி யான துந்துபி என்ற அரக்கனை வாலி கொன்று வீழ்த்தினான். வாலி ஒருவரம் பெற்றிருந்தான். அதன்படி அவனைபோரில்யார் எதிர்த்தாலும் அவர்களுடைய வலிமையில் பாதி இவனுக்குக்

கிடைத்துவிடும். அதனால் வாலியை எவராலும் வெல்ல முடியவில்லை.

சுக்ரீவன் ஸ்ரீராமனுடைய வலிமை பற்றி சந்தேகம் கொண்டான். ராமன் சொன்னான், "சுக்ரீவ! எனது வலிமையை உனக்கு நிரூபித்துக் காட்டுகிறேன்." துந்துபியின் எலும்புக் குவியலை தன் கால் பெருவிரலால் எத்தினார். அவை பத்து யோசனைதூரம் சென்று விழுந்தது மேலும் சுக்ரீவன், "ராம! இந்த பனைமரத்தை உன் அம்பை எய்து அது அதனை ஊடுருவிச் செல்லும்படிச்செய். அப்பொழுதுதான் உம்முடைய ஆற்றலில் எனக்கு நம்பிக்கை ஏற்படும். இந்த ஏழுபனைகளையும் வாலி பலதடவைகள் ஊடுருவச் செய்துள்ளான்" என்றான்.

அதன்படி சுக்ரீவனுக்கு பூரண நம்பிக்கை உண்டாவதற்காக தன் வில்லில் அம்பைப்பூட்டி ஒரேதடவையில் அது ஏழு பனைகளையும் ஊடுருவிச் செல்லும்படிச் செய்தார். அந்த அம்பு ஊடுருவிச் சென்று ஒரு பாறையையும் பிளந்து பூமியின் ஒரு பகுதியையும் துளைத்து விட்டு திரும்பவும் ராமனுடைய அம்பராத்தூணிக்கு ஒரேவினாடியில் வந்து விட்டது. இராம கிருஷ்ணர்கள் எய்யும் அம்புகள் மட்டுமே திரும்பவும் அவர்களிடமே வருவன. இதுகண்டு சுக்ரீவன் மிகுந்த ஆச்சரியமடைந்தான். இராமனது வலிமையில் அவனுக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டது.

சுக்ரீவன் வாலியுடன் போரிடும்போது ராமன் அவனுக்கு உதவிபுரிந்தான். ராமன் ஓர் அம்பை எய்தான். அது வாலியின் மார்பில் சென்று தைத்தது. வீரனை வாலி நிலத்தின் மீது சாய்ந்தான்.

வாலி ராமனை நோக்கிப் பேசலானான், "ராம! நான் வேறு ஒருவனுடன் போர்செய்து கொண்டிருந்தேன் நீ ஏன் என்மேல் அம்பெய்து வீழ்த்தினாய்? நீயோ உயர்குலத்தில் உதித்தவன். மேலும் சுத்தவீரன், வலிமை மிக்கவன், தயையுள்ளவன், அறவழியில் நிற்பவன் எப்போதும் ஜனங்களின் நன்மையையே கருதுபவன். ஆனால் இப்போது நீ ஒரு கோழை. அறநெறி பிறழ்ந்தவன் என்று நான் அறிகிறேன். நீ ஒரு கபடதாரி, உனக்கோ, உன் நாட்டிற்கோ உனது பட்டணத்

துக்கோ நான் ஒரு தீங்கும் செய்யவில்லை. நீ புகழ்வாய்ந்த மன்னன். உண்மையில் வெளித்தோற்றத்திற்குத் தான் நீ நல்லவனாக நடிக்கிறாய். க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவன். எப்படி இந்த வெறுக்கத்தக்க செயலைச் செய்தாய்? நீ என்னை நேருக்குநேர் எதிர்த்து போர்செய்து கொன்றிருக்க வேண்டும். ஏன் நீ இப்படி ஒரு ஆண்டியைப்போல் வேடம்தாங்கி காட்டில் அலைகிறாய் என்பதைச்சொல் நீ மனம்போன போக்கில் எதையும் செய்பவன், கொடியவன், மன உறுதி இல்லாதவன், குறுகிய மனப்பான்மையுடன் அரசியல் கடமைகளைச் செய்பவன். உன்னிடம் நன்னடத்தை கிடையாது. தருமமார்க்கத்திலிருந்து தவறிவிட்டாய். என்னை எவராலும் எதிர்த்து நிற்கமுடியாது. ஆனால் எனது பார்வையிலிருந்து மறைந்தவண்ணம் என்னை வீழ்த்திவிட்டாய். இதுதூங்கும் மனிதனை ஒருபாம்பு தீண்டியது போன்றதாகும்.''

ஸ்ரீராமன் அதற்கு விடையளித்தார், ''வாலி! நீ ஒரு குழந்தைபோல் பேசுகிறாய். கடமை என்பது என்னவென்று அறியாதவன் நீ. குருவிடமிருந்தோ பெரியவர்களிடமிருந்தோ நீ ஒன்றையும் கற்றுக்கொள்ளவில்லை. அறியாமையினால் நீ என்மீது குற்றம் சாட்டுகிறாய்.''

'' நீ மதஉணர்வு அற்றகாமுகன். நீ நடத்தை கெட்டவன். அரசனின் கடமைகளை மீறிநடந்திருக்கிறாய். அண்ணனும், குருவும் தந்தைக்கு சமமானவர்கள். தம்பியையும், சீடனையும் மகனாகவே கருதவேண்டும். இப்பொழுது ஏன் உன்னைக் கொன்றேன் என்பதைத் தெரிந்துகொள். தெய்வீக அறநெறியை நீ மீறிவிட்டாய். உன் தம்பியின் மனைவியை நீ மானபங்கம் செய்துள்ளாய். உன் தம்பியின் மனைவியான ருமா உனக்கு மருமகள் ஆவாள். அவளை துராகிருதம் செய்ததன் மூலம் மன்னிக்கமுடியாத பாபத்தை நீ செய்துள்ளாய் ஆகையால் தான் நான் உன்னை அம்பால் வீழ்த்தினேன். இதுபோன்ற குற்றத்திற்கு மரணமே ஏற்ற தண்டனை. நான் உயர்குல க்ஷத்திரியன். நீ செய்துள்ள இக்குற்றத்தை என்னால் புறக்கணிக்க முடியாது.''

'' மேலும் நான் சுக்ரீவனுக்கு உதவிசெய்வதாக வாக்குக் கொடுத்துவிட்டேன். அவன் எனதுநண்பன். எனதுவாக்கை

நான் எப்படி மீறுவது. உன்னை தண்டிக்க வேண்டியது எனது கடமை. குற்றவாளியை தண்டிக்காத அரசன் பாபத்தைச் செய்கிறான். நீதிநெறியின் படியே உன்னை நான் வீழ்த்திஇருக்கிறேன். அரசன் மதச்சட்ட திட்டங்களுக்கு உட்பட்டவன்.''

''இன்னும் சிலவிஷயங்களை உனக்குச் சொல்லவேண்டும். உனக்குத் தெரியாமல் மறைந்து உன்னை வீழ்த்தியதால் அறநெறிக்கு புறம்பாக ஒன்றும் நடந்து விடவில்லை. சுக்ரீவனுக்கு பின்னால் இருந்து அவன் உன்னை வெல்ல முடியாதபோது உதவுவதாக வாக்கு கொடுத்திருந்தேன். அதன்படியும் உன்னை அம்பால் அடித்ததும் நியாயமே. உலகில் மனிதர்கள் மிருகங்களை வலை வீசியோ, மறைந்திருந்து பிடிப்பதோ கொல்வதோ சஹஜம். நீ ஒரு மிருகமே. மன்னர்கள் மிருகங்களை வேட்டையாடுவது குற்றமல்ல. நீ ஒரு குரங்கு. எனவே நீ என்னோடு நேருக்கு நேர் போர் புரிய வேண்டும் என்ற அவசியமில்லை. அரசன் மக்களைப் பாதுகாப்பவன். அவர்களுக்கு நீதி வழங்குவதே அரசனின் கடமை. உனக்கு எது நேர்மை எது தீமை என்ற பகுத்தறியும் புத்தி கிடையாது. எனவேதான் நீ நியாயத்திற்கு விரோதமாக என்மீது குற்றம் காண்கிறாய்.''

வாலிக்கு ஆன்மீக உள்ளுணர்வு ஏற்பட்டது. இராமன் குற்றமற்றவன் என்று உணர்ந்தான். பிறகு பணிவுடன் இராமனிடம் சொன்னான், ''நீ சத்தியம் தவறாதவன். நான்தான் மகாபாவி. என்னை மன்னித்துவிடு தயவுசெய்து என்னைக் காப்பாற்று. அங்கதன் என் மகன். அவன்மீது எனக்கு உயிர். அவன் சிறிய பாலகன். அவனை நீர்தான் காப்பாற்ற வேண்டும்.''

ஸ்ரீராமபிரான் பிறகு வாலியைத் தேற்றிக் கூறினார், ''வாலி! இப்பொழுது நீ குற்றத்திலிருந்து விடுதலையடைந்தாய். உனது துயரங்களையும் கவலைகளையும் மாய்த்துவிடு. பயம் வேண்டாம். அங்கதனை நான் நன்றாக கவனித்துக் கொள்கிறேன். அவனை மிகுந்த அன்போடு நடத்துகிறேன்.''

பிறகு வாலி தன் இவ்வுலக வாழ்வைத் துறந்து மௌனியானான்.

ஒரு மனிதனுகக் காட்சி தந்தாலும் ஸ்ரீராமபிரான் மஹா விஷ்ணுவேஆவார். தெய்வீக திருவிளையாடல் சாதாரண சமுத்தாய, நீதி முதலியன அடங்கிய குறைபாடுடன் கூடிய அறிவுள்ள மக்களின் உணர்வுகளுக்கு அப்பாற்பட்டது. எங்கும் நிறைந்து எல்லாம் வல்ல பரம்பொருளின் செயல்களைக் குறித்து கேள்வி கேட்பது முட்டாள்தனமாகும். அவதாரங்களின் போக்கையும் நுட்பத்தையும் நம்மால் அறிந்து கொள்ள முடியாது. அவைகளில் குற்றம் குறைகாண்பது அறிவீனமாகும். ஞானவான்கள் அவ்வாறு செய்ய மாட்டார்கள்.

## 10. லவனும் குசனும்

லவனும், குசனும் ஸ்ரீராமபிரானின் புதல்வர்கள். இருவரும் வால்மீகி மகரிஷியின் ஆச்ரமத்தில் பிறந்தார்கள். சீதை இலங்கையில் இருந்ததைப் பற்றிக் குறைகூறிய ஒரு வண்ணுனின் பேச்சைக்கேட்டு பொறுக்காத ஸ்ரீராமன் அவளைக் காட்டில் கொண்டு விட்டு விடும்படி இலக்ஷ்மணனை ஏவினுர். அப்பொழுது சீதை கர்ப்பமாக இருந்தாள். கணவனின் பிரிவைத் தாங்காமல் சீதை கங்கைக்கரையில் நின்று உரத்தகுரலில் அழுதாள். பின்பு வால்மீகியின் சீடர்கள் அவள் அழுகையைக் கேட்டு வால்மீகியிடம் தெரிவிக்க அவர் வந்து சீதையைத்தனது ஆச்ரமத்துக்கு அழைத்துச் சென்ருர். அம்முனிவர் சீதைபால் இரக்கம் கொண்டு ஆச்ரமவாசிகளான பெண்களிடம் ஒப்படைத்தார்.

நாட்கள் பல சென்றதும் சீதை லவனைப் பெற்றெடுத்தாள். அவன் தன் அழகால் பார்ப்பவர் எல்லோரையும் கவர்ந்தான். ஒரு நாள் சீதை லவனை வால்மீகி முனிவரிடம் விட்டு விட்டு கங்கைக்கு குளிப்பதற்காகச் சென்ருள். பாதி தூரம் சென்றவள் ஏதோ மனமாற்றமடைந்து ஆச்ரமத்துக்கே திரும்பினுள். வந்த சீதை லவனையும் குளிப்பதற்கு எடுத்துச் சென்று விட்டாள். அப்பொழுது வால்மீகி முனிவர் தியான சமாதியில் அமர்ந்திருந்ததால் இதை கவனிக்கவில்லை. சிறிது நேரம் சென்றபின் கண்திறந்து பார்த்தார் முனிவர். தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட லவனைக் காணவில்லை. மிகவும் திடுக்கிட்டார். செய்வது ஒன்றும் தோன்றவில்லை சீதை கேட்டால் என்ன சொல்வது எனத் திகைத்தார்.

உடனே முனிவர் குசம் என்ற தர்ப்பைப்புல் ஒன்றை எடுத்துதன் தவத்தின் வலிமையால் எல்லாவிதத்திலும் லவனைப் போன்ற ஓர் அழகான குழந்தையை அப்புல்லில் சிருஷ்டித்து விட்டார். திரும்பி லவனுடன் வந்த சீதை லவனைப்போலவே மற்றொரு குழந்தை இருப்பதைக் கண்டு ஆச்சரியத்தில் ஆழ்ந்தாள். பிறகு வால்மீகி அவள் இல்லாதபோது நிகழ்ந்த செய்தியைக் கூறிவிளக்கினார். புதிய குழந்தை குசன் என்று அழைக்கப்பட்டான். சீதை குசனையும் அன்புடன் வளர்த்தாள். இருவரும் இரட்டைக் குழந்தைகளாக வளர்ந்தனர்.

லவனும் குசனும் வால்மீகியின் ஆச்ரமத்தில் அவருடைய நேர்முக சம்ரட்சணையில், தபோதனர்களிடையே இன்பகரமான சூழ்நிலையில் நன்றாக வளர்ந்து வந்தனர். க்ஷத்திரியரின் எல்லா குணநலன்களையும் அவர்கள் மிகஉன்னத நிலையில் பெற்றனர். முதல் தடவையாக வால்மீகி ராமாயணத்தை அவ்விருவரும் அயோத்தியின் ஆலயங்களிலும், ஸ்ரீராமபிரானின் முன்னிலையிலும் பாடினார்கள். இதில் வால்மீகி அவர்களுக்கு மிகச் சிறந்த பயிற்சி அளித்திருந்தார்.

லவன் ஒரு போர்வீர பாலகன். அவன் பணிவு, தைரியம், தன்னடக்கம், உதார குணம் இவற்றை அணிகலன்களாகக் கொண்டிருந்தான். எல்லாவிதத்திலும் அவன் தன்தந்தையைப் போலவே தோற்றத்திலும் மனஇயல்பிலும் காணப்பட்டான். மேலும் அஞ்சாத வீரம்கொண்டு தன் தந்தையையே எதிர்க்கும் திறமை மிக்கவனாக இருந்தான். தன்னை எதிர்க்கும் எவரையும் எளிதில் வெற்றிகொள்ளும் வலிமையுடையவனாக இருந்தான். குசனிடமும் போர்வீரம் நெருப்பாய் எரிந்து கொண்டிருந்தது. லவனுக்கு ஏற்ற சிறந்த சகோதரனாக குசன் விளங்கினான். அவனிடமும் எல்லா உதாரகுண இயல்புகளும் இருந்தன.

ஸ்ரீராமன் ஒரு அசுவமேத யாகம் செய்ய விரும்பி அதற்கான ஏற்பாடுகள் நடைபெற்றன. யாகக்குதிரையானது எல்லாச் சிற்றரசர்களிடமும் பொதுமக்களிடமும் மரியாதையும் பய பக்தியுடன் கூடிய பூஜையும் பெறுவதற்காக விடப்பட்டது. அக் குதிரை எல்லா இடங்களிலும் சஞ்சரித்துக் கொண்டு வந்து கொண்டிருந்தது. வால்மீகியின் ஆச்ரமத்தின் பக்கத்தில் அக் குதிரை வந்தது. அப்போது லவனும் குசனும் அதை ஒரு மரத்தில் கட்டி நிறுத்தி விட்டனர்.

இலக்ஷ்மணன் குதிரையை பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்தான். வால்மீகியின் ஆச்ரமத்தின் பக்கத்தில் குதிரை கட்டப்பட்டிருப்பதைக் கண்டான். உடனே இலக்ஷ்மணன் விசாரித்ததில் லவனும் குசனும் அதைக்கட்டி மேலும் செல்ல விடாமல் நிறுத்தியுள்ளனர் என்பதை அறிந்தான்.

இலக்ஷ்மணன் லவனேயும் குசனேயும் பார்த்து, ''ஏ! இளம் தவசீலர்களே! குதிரையை கட்டி நிறுத்துவதால் உங்களுக்கு என்ன லாபம்? உடனே அவிழ்த்து விடுங்கள். உங்களுக்கு வேறு எது வேண்டுமோ அதைக் கேளுங்கள்'' என்ருன். அதற்கு லவனும் குசனும். ''நாங்கள் குதிரையை விடமாட்டோம். எங்களுடன் போரிட்டு எங்களை வென்று அதன் பிறகு குதிரையை அவிழ்த்துச்செல்லுங்கள்'' என்று வீராவேசத்தோடு சொன்னர்கள்.

லவனேயும் குசனேயும் இலக்ஷ்மணனல் வெல்ல முடியவில்லே. பின்பு அவன் ஹநுமானே அழைத்துவரச் சென்ருன். அதுகேட்டு ஸ்ரீராமன், பரதன், சத்ருக்னன் எல்லோரும் அங்கு வந்தனர். பயங்கரமாக யுத்தம் அவர்களிடையே நடந்தது. லவனும் குசனும் ஸ்ரீராமனேத்தவிர மற்றவர்களே மரங்களில் கயிறுகளால் கட்டி விட்டனர்.

ராமன் ஒரு கூரிய அம்பை எடுத்து நாணில் பொருத்தி லவகுசர்களின் மீது விடுவதற்கு முயலும்போது வால்மீகி மகரிஷி அங்கு வந்து சொன்னர், ''ஹே ராமா! இவ்விருவரும் உன்னுடைய சொந்தப்பிள்ளேகள். அவர்களேக் கொன்று விடாதே. அயோத்திக்கு அவர்களே அழைத்துச் செல்வாய்'' இதைக்கேட்டதும் ஸ்ரீராமன் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார். உடனே லவனும் குசனும் ராமனின் திருவடி முன்பு விழுந்து வணங்கினர். ஸ்ரீராமபிரானும் அவர்களே ஆசீர்வதித்தார். அதன் பிறகே வால்மீகி லவனேயும் குசனேயும் அசுவமேதயாகத்திற்கு அயோத்திக்கு அழைத்துச் சென்ருர்.

## 11. இராவணன்

இராவணன் குபேரனின் பின் பிறந்தவன். குபேரன் அஷ்டதிக்கு பாலகரில் வடக்கு திசைக்கு அதிபதி. குபேரன்

சிவபெருமானின் உற்ற நண்பன். அவன் அரக்கனோ ராக்ஷஸனோ, தானவனோ, தைத்தியனோ அல்ல. அவன் நான்முகனின் கொள்ளுப் பேரன். விச்ரவசுவின் பிள்ளை குபேரன். விச்ரவசு புலஸ்தியரின் மகன். புலஸ்தியர் பிரம்மாவின் புத்திரன்.

இராவணனுக்கு கும்பகர்ணன், விபீஷணன் என இரு தம்பிகள் உண்டு. மூவரும் தீவிர தவம் செய்து நான்முகப்பிரமனை நேருக்கு நேராகக் கண்டனர். பிரம்மா அவர்கள் விரும்பிய வரங்களைப் பெற்றுக்கொள்ளுமாறு பணித்தார்.

சாத்வீக இயல்புள்ள விபீஷணன் திருமாலிடம் தனக்கு பூரண பக்தி உண்டாக வேண்டும் என்ற வரத்தை வேண்டினான். கும்பகர்ணன் தேவர்கள் எல்லோரும் நாசமடைந்து உலகில் தேவர்களே இருக்கக் கூடாது என்ற வரம் கேட்க விரும்பினான். இதை அறிந்த தேவர்கள் பிரம்மாவின் பத்தினியான சரஸ்வதியிடம் சென்று முறையிட்டு உதவுமாறு வேண்டினர்.

கும்பகர்ணன் வரத்தைக் கேட்க வாயைத் திறக்கும்போது சரஸ்வதி அவன் நாவில் சென்று அமர்ந்தாள். கும்பகர்ணன் தனக்கு எப்போதும் தூக்கமே வரவேண்டும் என்று தேவர்களின் நாசம் என்பதற்குப் பதிலாக வாய் உளறிக் கேட்டு விட்டான் 'நிர்தேவத்வம்'-தேவர்கள் இல்லாமை என்பதற்கு 'நித்ரத்வம்-எப்போதும் நித்திரை என நாவில் நின்ற சரஸ்வதி மாற்றி அமைத்து விட்டாள்.

இராவணன் தனக்கு மரணம் எந்த தேவர்களாலும், அரக்கர்களாலும், பூதப்பிரேதங்களாலும், விலங்குகளாலும், நேரிடக் கூடாது என்ற வரத்தைக் கேட்டு பெற்றுக் கொண்டான். அகந்தையின் காரணமாக மனிதனை அவன் குறிப்பிடவில்லை. ஏனென்றால், மனிதனால் அவனை அணுகவே முடியாது என்ற கர்வம்.

இராவணன் மயனின் மகள் மண்டோதரியை மணந்து கொண்டான். மண்டோதரியிடம் அவனுக்கு மேகநாதன் என்ற புதல்வன் பிறந்தான். அவன் பிறந்த போது ஆகாயத்தில் பெரும் இடி முழங்கியது. எனவே அப்பெயர் பெற்றான்.



மேகநாதன் மிகவும் தைரியசாலி; அவன் ஆச்சரியப்படத் தக்க ஆற்றல்கள் கொண்டு விளங்கினான். மேலும் அவன் தேவர் களின் வேந்தன் இந்திரனைப் போரில் வென்று 'இந்திரஜித்' என்ற பட்டப் பெயரையும் பெற்றான்.

இராவணன் மக்களை மிகவும் கொடுமைப் படுத்தினான். தேவர்களையும் அழகிய மங்கையர்களையும் தனக்கு அடிமையாக் கிக்கொண்டான். இவனதுகொடுமைகளைத் தாங்கமுடியாத சூழ் நிலையில் தேவர்கள் மகாவிஷ்ணுவிடம் சென்று முறையிட்டனர். அவர்களுக்கு உதவி செய்யவே அவர் ஸ்ரீராமனாக அவதாரம் செய்து இராவணனைக் கொன்றார்.

இராவணன் மிகப்பெரிய சிவபக்தன். மகத்தான தவங்கள் பல செய்தான். தேவர்களும், முனிவர்களும் கூடதவம் செய்வ தில் இராவணனோடு போட்டியிட முடியாது. தனது தவ வலிமையைக் கொண்டு தேவர்களையும் ரிஷிகளையும் அடக்கி ஆண்டு வந்தான். கடுந்தவம் புரிந்து சிவபெருமானிடம் அவரது சிரங்களைப் போல இருமடங்கு தலைகளை தனக்குப் பெற்றுக் கொண்டான். இராவணன் சிவபெருமானை லிங்க உருவமாகவே வழிபட்டு வந்தான்.

ஒரு சமயம் நந்தியை "அட குரங்கே" என இகழ்ந்து கூறியதால், நந்தியே ஹநுமானாகத் தோன்றி ராம தூதனாகி இராவணனின் நாசத்திற்கு துணைபுரிந்தார்.

ஹநுமானை இந்திரஜித் கட்டிப் பிடித்து இராவணன் முன்பு நிறுத்தியதும், இராவணன் ஹநுமானைப் பார்த்து, "நீ நான் முன்பு இழிவாகப் பேசிய நந்தியல்லவா? குரங்கு உருவுடன் இங்கே வந்துள்ளாய்" என்று கூறினான்.

ஓம் தத் ஸத்

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

